எம்மனுயீல் கஸகேவிச்

# விடிவெள்ளி

குறு நாவல்



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: க. சுப்பிரமணியம்
வடிவமைப்பாளர்: பொரீஸ் அலீமவ்

Э. Казакевич
**ЗВЕЗДА**
ПОВЕСТЬ

*На тамильском языке*

**E. Kazakevich**
**STAR**
A NOVELLA

*In Tamil*

**வாசக நேயர்களுக்கு**

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் யோசனைகளை வரவேற்கவும் ராதுகா பதிப்பகம் மகிழ்வுடன் காத்திருக்கிறது.

கடிதங்களைத் தயவு செய்து Raduga Publishers, 17 Zubovsky Boulevard, Moscow, USSR என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

ஐந்தாம் (திருந்திய) பதிப்பு, 1986



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

ISBN 5-05-001584-7 K $\frac{4702010200-547}{031(01)-86}$ без об'явления

# பொருளடக்கம்

முன்னேறிச் சென்று கொண்டிருந்த டிவிஷன் எல்லையற்ற காடுகளினுட் புகுந்து மறைந்தது.

ஜெர்மன் டாங்கிகள், விமானப்படை, அங்கு சுற்றித் திரிந்த கொள்ளைக் கூட்டங்கள் ஆகிய வை எல்லாம் சேர்ந்தும் ருஷ்யப் படையின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த முடியவில் லை. எனினும் போரால் சேதமடைந்து, இளவே னிற்காலத்து வெண்பனி உருகி ஓடும் சாலைகள் செல்லும் இப்பெருங் காடுகள் அதனைச் சாதித்து விட்டன. உணவையும், போர்த் தளவாடங்களை யும் ஏற்றிச்சென்ற லாரிகள் மேலே போக முடியாமல் தொலைப்பட்ட காட்டுப் பாதை களில் சிக்கிக் கிடந்தன. ஆம்புலன்ஸ் லாரிகள் காடுகளிடையே ஆங்காங்கிருந்த சிற்றூர்களில் உளையில் மாட்டிக் கொண்டு அசைவற்று நின் றன. பீரங்கிப் படையினருக்கோ எண்ணெய் கா லியாகிவிட்டது. பேட்டரிகளெல்லாம் பெயரே தெரியாத பல ஓடைக்கரைகளில் செயலற்றுக் கிடந்தன. துணைப் படைகளுக்கும் காலாட்

படைக்கும் இடையே உள்ள தூரம் மணிக்கு மணி பயங்கரமாக அதிகரித்துக் கொண்டே வந்தது. ஆயினும் காலாட்படை மட்டும் அன்றாட உணவு அளவைக் குறைத்துக் கொண்டு, ஒரு தோட்டாவும் வீணாகச் செலவழிக்காமல் தனித்து முன்னேறிக் கொண்டே இருந்தது. கடைசியில் அதுவுங்கூட வேகத்தைக் குறைக்கும்படி ஆயிற்று. அதன் தாக்கும் திறன் குன்றியது. இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி ஜெர்மானியர், ருஷ்யப் படைகளின் பிடியிலிருந்து உதறிக் கொண்டு மேற்கு நோக்கிப் பின்வாங்கி விட்டனர்.

பகைவர் மறைந்தே போயினர்.

எதிரிகளுடன் கைகலவாத காலத்திலுங்கூடக் காலாட்படை தொடர்ந்து தனது வேலையைச் செய்துகொண்டுதான் இருக்கிறது. அதாவது, வென்ற பிரதேசத்தை அதுவே பாதுகாத்து நிற்கிறது. ஆனால் எதிரிகளின் தடங்களை முற்றும் இழந்துவிட்ட முன்னணி வேவுகாரர்களையோ பார்க்கவே பரிதாபமாயிருக்கும். கதியிழந்த ஆவிகளைப் போல் அவர்கள் சாலைகளின் ஓரமாக நடமாடுவார்கள்.

இவ்வாறான ஒரு குழுவிநரை டிவிஷன் தலைவர் கர்னல் ஸெர்பிசேன்கோ அமர்ந்திருந்த 'ஜீப்' கார் தாண்டிச் சென்றது. கர்னல் நிதானமாக ஜீப்பை விட்டிறங்கி சகதி படிந்துள்ள சாலையின் நடுவே, இடுப்பில் கைகளை

வைத்துக்கொண்டு நின்றார். அவரது முகத்தில் கேலிச் சிரிப்பு தவழ்ந்தது.

டிவிஷன் தலைவரைக் கண்டதும் வேவுக் கூட்டத்தினரும் நின்றுவிட்டனர்.

''ஏனப்பா, வீராதி வீரர்களே, எதிரியை நழுவ விட்டுவிட்டீர்களா என்ன? ஊம்? எங்கே எதிரிப்படை? என்ன செய்து கொண்டிருக்கிறது?''

டிவிஷன் தலைவர் ஸெர்பிசேன்கோவிற்குத் தம் கீழ் சேவை புரியும் அதிகாரிகள் ஒவ்வொருவர் பெயரும் தெரியும். இவ்வேவுகாரர்களின் தலைவன் லெப்டினன்ட் டிராவ்கின் என்பதை அறிந்ததும், கண்டிக்கும் பாவனையில் தலையை அசைத்து, ''என்ன, டிராவ்கின், நீயும்கூடவா இப்படி?'' என்று எரிச்சலுடன் பேசினார். ''மிக அழகான போர்; இல்லையா? — ஊர்களில் நன்றாகப் பால் சாப்பிடுவதும் பெண்களோடு சரசமாடுவதுமாக. இந்த முறையில் சென்றால் பகைவரின் படைகளைக் கண்டுபிடிப்பதற்கு முன் நாமே ஜெர்மனியிலிருப்போம்'' எனச் சொன்னவர், திடீரென மகிழ்ச்சியுடன், ''அப்படி நேர்ந்தால் நேர்த்தியாயிருக்குமல்லவா?'' என்றார்.

காரினுள் உட்கார்ந்திருந்த டிவிஷன் செயலகத் தலைவர் லெப்டினன்ட் கர்னல் கலீயெவ், கர்னலின் மனநிலை இப்படிச் சட்டென மாறியதைக் கண்டு அதிசயித்தவாறு புன்னகைத்தார். ஒரு நிமிடத்திற்கு முன்பு தான், அவரை டிவிஷன் தலைவர் ஸெர்பிசேன்கோ வேலையில் மெத்தனத்திற்காக விளாசித் தீர்த்தார். பாவம், கலீயெவ் இடிவிழுந்தவர் போல வாயைத்

திறவாது அனைத்தையும் கேட்டுக்கொண்டிருந் தார். இவையெல்லாம் கலீயெவ் நினைவிற்கு வந்தன.

வேவுகாரர்களின் கூட்டத்தைக் கண்டதுதான் கர்னலின் மனநிலையில் மாறுதலுண்டானதற்குக் காரணம். அவரது ராணுவ வாழ்க்கை 1915இல் காலாட்படை வேவுகாரராகவே தொடங்கியது. வேவுகாரராகத்தான் அவர் தீக்குளித்து ஸெண்ட் ஜார்ஜ் சிலுவைப் பதக்கமும் பெற்றார். ஆகவே தான் வேவுகாரர்களிடத்தில் அவருக்கு ஒரு தனி இளக்கம். அவர்களது பச்சை நிற உரு மாற்றுடைகளையும், வெயிலில் அடிபட்ட முகங் களையும் கண்ட போதெல்லாம் அவரது மனத் தில் மகிழ்ச்சி உண்டாகத் தவறியதேயில்லை. ஓசைப் படாமல் அவர்கள் ஒருவர் பின் ஒருவ ராகச் சாலையின் பக்கம் சென்றுகொண்டிருப் பார்கள். அவசியம் நேரிடின் அமைதி நிலவும் காடுகளுக்குள் புகுந்து ஒரு நொடியில் மறைந்து விடுவார்கள், வழியிலுள்ள மேடுபள்ளங்களுடன் இணைந்து விடுவார்கள், அல்லது அந்தி நேரத்து நிழல்களோடு நிழல்களாக ஒன்றிவிடுவார்கள்.

இப்பொழுது அந்தக் குழுவிநரைக் கண்டதும் டிவிஷன் தலைவர் கடுமையாய்க் கண்டித்ததற்கு முக்கியமான காரணங்கள் இருந்தன. பகைவர் மறைந்த மாயத்தை அவர்கள் சற்றும் அறியார். எதிரியை நழுவ விடுவது, அல்லது போர் குழு உக்குறியில் சொன்னால், எதிரி தொடர்பைத் ''துணித்துக் கொள்ள'' விடுவது, வேவுகாரர் களுக்குப் பெருத்த வெட்கக் கேடு, அநேகமாய் அவமானமே யாகும்.

அவரது சொற்கள் தம் படையின் கதி என்ன ஆகுமோ என்று அவர் மனத்தை அரித்துக் கொண்டிருந்த கவலையை வெளிக்காட்டின. அவருடைய படையின் பலம் குன்றியிருந்தது; பின்னணிப் பகுதிகள் வெகு தொலைவில் பிந்திக் கிடந்தன; இந்த இக்கட்டான நிலையில் எதிரி யுடன் கைகலப்பு ஏற்பட்டுவிடுமோ என்ற பயம் அவருக்கு இருந்தது. அதே நேரத்தில், மறைந்த எதிரிப்படை எங்கிருக்கிறது, அதன் நோக்க மென்ன, திறமையென்ன என்பவற்றை அறிய வும், அதனுடன் கைகலக்கவும் ஆவல் வேறு ஒரு புறமிருந்தது. படையின் முன்னேற்றத்தை நிறுத்தி, போர்வீரர்களையும் தளவாடங்களை யும் சீராக அணிவகுப்பதும் தேவையாயிருந்தது. தமது விருப்பம், நாட்டினர் எல்லாருடைய மனத்திலும் ஆவேசமாகப் பொங்கி யெழுந்த பேரவாவிற்கு எதிராயிருப்பதாக அவர் தமக்குத் தாமே கூட ஒப்புக் கொண்டிருக்க மாட்டார் தான். இருந்த போதிலும் தாக்குதலைச் சிறிது காலத்திற்கு நிறுத்தி வைக்க வாய்ப்புக் கிடைத் தால் நன்றாயிருக்குமே என அவர் உள்ளம் அவா வியது.

வேவுகாரர்கள் சாலையின் பக்கமாகப் பேசா மல் தயங்கி நின்றனர். அவர்களது தோற்றம் மிகவும் இரங்கத்தக்கதாக இருந்தது.

''பார்த்தீர்களல்லவா உங்கள் படை வேவு காரர்களின் லட்சணத்தை!'' என்று தலைமைச் செயலக முதல் அதிகாரியிடம் இகழ்ச்சியுடன் கூறிக்கொண்டே காரில் அமர்ந்தார் டிவிஷன்

குரைத்தன. கைத்தறித் துணியால் செய்த திரைச் சீலைகள் அசைந்தது, கொள்ளைக் கூட்டத்தார் களைக் கண்டு பயமுற்றிருந்த ஊர்மக்கள் தங் கள் கிராமத்தினூடே போர்வீரர்கள் செல்வதை மறைவிலிருந்து உற்று நோக்கிக் கொண்டிருந் தனர் என்பதைத் தெளிவுபடுத்தியது.

மேட்டில் தனியாக இருந்த குடிசையை நோக்கி, தனது ஆட்களுடன் டிராவ்கின் சென் றான். ஒரு கிழவி கதவைத் திறந்து, பெரிய காவல் நாயை உள்ளே போகுமாறு விரட்டி னாள். அடர்த்தியான, நரைத்த புருவங்களின் கீழ், பாதி மறைந்து, உள்ளடங்கிக் கிடந்த கண் களால் நிதானமாக அவள் வேவுகாரர்களைக் கவனித்தாள்.

''வணக்கம், பாட்டி! நாங்கள் கொஞ்சநேரம் இளைப்பாறிவிட்டுச் செல்வதற்கு இங்கே வந்தி ருக்கின்றோம்'' என்று டிராவ்கின் சொன்னான்.

அவள் சுத்தமான ஓர் அறைக்குள் அவர்களை அழைத்துச் சென்றாள். தரையில் வர்ணம் தீட்டப்பட்டிருந்தது. அவ்வறையில் மதப் பெரி யாரின் சிறு படங்கள் ஏராளமாக மாட்டப்பட் டிருந்தன. இங்குள்ளவை ருஷ்யாவிலுள்ள மதப் பெரியார் படங்களைப் போலில்லை என்பது அவர்களுக்கு ஏற்கெனவே தெரியும். உலோகச் சித்தரிப்பு அலங்காரங்கள் இவைகளுக்குக் கிடை யா; முகங்கள் மிகைப்பட்ட அழகுடன் விளங் கின. கீவ், செர்னீகவ் முதலிய நகரங்களைச் சுற்றிலுமுள்ள நாட்டுப் புறங்களில் பார்த்த வயோதிகப் பெண்களைப் போலவே அந்தக்

கிழவியும் ஏராளமான துணிப் பாவாடைகளை அணிந்திருந்தாள்; கைகள் எலும்புந்தோலுமாய் இருந்தன. இவளிடத்தில் விசேஷமாகத் தென் பட்டது கண்களில் பளிச்சிட்ட நட்புத் தன்மை யற்ற பார்வை மட்டுமே.

ஏக்கமும் பகைமையும் நிறைந்த மௌனத் தைக் கடைப்பிடித்த போதிலும் கிழவி போர் வீரர்களின் முன்னே புதிய ரொட்டி, பால், உப்பிட்ட வெள்ளரிக்காய்கள், பெரிய பானை நிறைய வெந்த உருளைக்கிழங்கு ஆகியவற்றைக் கொண்டு வந்து வைத்தாள். ஆனால் அவள் வேண்டாவெறுப்போடு, கடுகடுப்புடன் வைத்த உணவை உண்ணவே அவர்களுக்குப் பிடிக்கவில் லை.

''கொள்ளைக்காரனின் தாய் என்பது பார்த் தாலே தெரிகிறதே!'' என்று ஒருவன் முணு முணுத்தான்.

அவன் சொல்லியதில் சரிபாதி பொருத்தமான துதான். கிழவியின் இளைய மகன் கொள்ளைக் கூட்டத்தாருடன் காட்டில் வாழ்ந்து வந்தான்; மூத்த மகன் சோவியத் கொரில்லா வீரர்களுடன் சேர்ந்து போரிட்டான். கொள்ளைக்காரனின் தாயார் விரோதமான மௌனம் சாதித்தாள். கொரில்லா வீரனின் தாய் வேவுக் கூட்டத்தி னருக்குக் கதவைத் திறந்து உண்டியளித்தாள். சிறிது வதக்கிய பன்றியிறைச்சியையும், ஜாடி குவாஸையும்* அவர்கள் முன் வைத்துவிட்டு

---

* புளித்த ரொட்டிச் சாறு.

வீரமகனின் தாய் மறைந்து, கொள்ளைக்கார னின் தாயாக மாறி, குடிசையில் பாதியை அடைத்துக் கொண்டிருந்த கைத்தறியின் பக் கமாகச் சென்று மூஞ்சியைத் தூக்கிக்கொண்டு அமர்ந்தாள்.

''ஏன் பாட்டி! ஊமைபோல வாயே திறக்க மாட்டேன் என்கிறாய்? எங்களுடன் கொஞ்சம் பேசேன்'' என்று அமைதியான முகமும் ஆழ்ந்து நோக்கும் சிறு கண்களும் கொண்ட சார்ஜெண்ட் அனிக்கானவ் அவளிடம் கூறினான்.

''பெண்களின் தோழன் அனிக்கானவ் தானே! கிழவியோடு பேசுவதற்குக் கூட அவன் தயார்!..'' என்று மெலிந்த உடலுடைய சார்ஜெண்ட் மா மச்கின் கேலியாகக் குறித்தான்.

சிந்தனையில் ஆழ்ந்திருந்த டிராவ்கின் வெளி யே சென்று, வாயிற்புறத்தில் நின்றுகொண் டான். ஊர் முழுதும் உறங்கியது. தளை பூட்டிய குதிரைகள் மேட்டில் மேய்ந்து கொண்டிருந்தன. எங்கும் ஒரே அமைதி. சண்டையிடும் இரு பெரும் படைகள் அப்பொழுதுதான் கடந்து சென்றிருந்த ஊரில் மட்டுமே காணப்படக் கூடிய அமைதி அது.

''லெப்டினன்ட் கவலையாயிருக்கிறார்'' என் றான் அனிக்கானவ், டிராவ்கின் வெளியே சென் றதும். ''கர்னல் என்ன சொன்னார்? — அழகான போர்! ஊர்களில் நன்றாகப் பால் சாப்பிடுவதும் பெண்களுடன் சரசமாடுவதுமாக?''

மாமச்கின் சீறி விழுந்தான். ''டிவிஷன் தலை வர் சொல்லியது இருக்கட்டும். அது அவரு

டைய வேலை. நீ ஏன் அதைப் பற்றி அதிகம் அலட்டிக் கொள்கிறாய்? உனக்குப் பால் வேண் டாமென்றால் குடிக்காதே, அதோ தொட்டியில் தண்ணீர் இருக்கிறது. இது உன் வேலையல்ல. லெப்டினன்டிற்குத் தெரியும், அவர் பார்த்துக் கொள்வார்; தலைமைக்காரியாலயத்திற்கும் பதில் சொல்கிறவர் அவரே. நீ அவருக்கு எடுப்பா ளாகப் பார்க்கிறாயா? நீ யாரென்பதை மறந்து விட்டாயா? பட்டிக்காட்டுப் பறங்கி! கோர்ச் நக ரில் நீ அகப்பட்டிருந்தால், ஐந்தே நிமிடத்தில் உன் துணிகளை உருவிக்கொண்டு மீன்களுக்கு விருந்தாக உன்னை வீசியெறிந்திருப்பேன்'' என்று சொன்னான்.

அனிக்கானவ் குரோதமின்றிச் சிரித்துக் கொண்டு, ''இருக்கலாம். உடைகளை உருவு வது உனக்குப் பழக்கமான காரியம்போல் இருக் கிறது. விருந்துகள் அருந்துவதிலும் நீ கெட்டிக் காரன்தான். அதைத் தானே கர்னலும் சொன் னார்'' என்றான்.

எப்போதும் போல அனிக்கானவின் அமைதி மாமச்கினுக்கு ஆத்திரமூட்டியது. அவன் சொன் னான்: ''அதனாலென்ன? அருமையான சாப் பாடு அருந்துவதில் குற்றமொன்றுமில்லையே. மூளையுள்ள வேவுகாரனுக்கு ஜெனரலையும்விட ருசியான சாப்பாடு கிடைக்கும். துணிவிற்கும் யுக்திக்கும் வகையான உணவு அவசியமாகத் தான் இருக்கிறது. புரிந்ததா?''

சிவந்த கன்னங்களும் சணல் போன்ற தலை மயிரும் கொண்ட பிராஜ்னிகவ், மச்சங்கள்

நிறைந்த உருண்டை முகமுடைய பிகோவ், பதினேழு வயதுள்ள, எல்லாராலும் கோலுப் என்று அழைக்கப்பட்ட யூரா கோலுபோவ்ஸ்கிய், உயரமான அழகன் பியக்டீஸ்தவ் ஆகியோர் தென்னாட்டவனான மாமச்கினது கோபக் குமு றலையும் அனிக்கானவின் அமைதியாக அளந்து கொடுக்கும் குத்தலான பதில்களையும் கேட்டுச் சிரித்தார்கள். அகன்ற தோள்களும், மிக வெண் மையான பற்களும், பழுப்பேறிய தோற்றமும் வாய்ந்த மார்சென்கோ மட்டிலுமே, கிழவியின் சிறிய கைகளைக் கவனித்துக்கொண்டு தறியின் பக்கமாய் நின்றான். அதிசயித்துப் போய், ''இது சரியான நெசவாலை தான்'' என்று திரும்பத் திரும்பக் கூறினான்.

மாமச்கினுக்கும் அனிக்கானவுக்கும் இடையே பல்வேறு விஷயங்களைப் பற்றி விவாதம் நடப்ப துண்டு. கடல் மீன், ஆற்று மீன் இவைகளில் எது சுவையானது, ஜெர்மானிய துணை எந் திரத் துப்பாக்கி அல்லது சோவியத் துணை எந்திரத் துப்பாக்கி இவைகளில் எது சிறந்தது, ஹிட்லர் பைத்தியக்காரனா, அயோக்கியனா, எப்பொழுது இரண்டாம் போர்முனை ஆரம்ப மாகும் ஆகிய இவை போன்ற விஷயங்களில் எதைப்பற்றிய விவாதமானாலும், வேடிக்கைப் பேச்சோ உக்கிரமான தர்க்கமோ எதுவானா லும், மாமச்கின் தான் எப்பொழுதும் தாக்கு பவன். ஆனால் அனிக்கானவ் தந்திரப் பார் வையுடன் அமைதியாகச் சுடச்சுடப் பதில் கொ டுப்பான். அதனால் தன் கட்சியை நிலை நாட்டு

வான். அவனுடைய நிதானம் எதிரிக்கு ஒரே ஆத்திரத்தைக் கிளப்பிவிடும்.

நாட்டுப்புறத்து அடக்கமும் மாறாத நற்பண்பும் கொண்ட அனிக்கானவ் கிளர்ச்சி வயப்படும் இயல்பும் சண்டை போடும் பழக்கமும் உள்ள மாமச்கினுக்கு எப்பொழுதும் கலக்கத்தைக் கொடுப்பவனாகவே இருந்தான். இக்கலக்கத்தோடு கூட இரகசியமான பொறாமையும் கலந்திருந்தது. அனிக்கானவிற்கு உயர்ந்த விருது கிடைத்திருந்தது. மாமச்கினுக்கு வெறும் பதக்கம் மட்டுமே கிடைத்திருந்தது. லெப்டினன்ட் அனிக்கானவைத் தனக்குச் சமமானவனாக நடத்தி வந்தான்; மாமச்கினையோ மற்ற வேவுகாரர்கள் போல்தான் நடத்தி வந்தான். இது மாமச்கினுக்கு வேம்பாயிருந்தது. அனிக்கானவ் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்திருந்தமையால் அவனுக்குத் தனிச்சிறப்பு என்று எண்ணித் தன்னைத் தேற்றிக் கொள்ள முயன்றான் மாமச்கின். என்றாலும் அனிக்கானவின் தீரத்தை எண்ணி அவன் அதிசயிக்காமல் இருக்க முடியவில்லை. மாமச்கின் காட்டிய துணிவை ஒரு வித நடிப்பென்றே சொல்லலாம்; அடிக்கடி தற்பெருமையின் தூண்டுதல் அத்துணிவிற்கு அவசியமாயிருந்தது. அவனுக்கே அது தெரிந்தது தான். எனினும், நல்ல வேவுகாரன் என்ற பெயர் பெற்றிருந்தான். உண்மையில் பல தீரச் செயல்களில் பங்கு கொண்டிருந்தான். ஆனாலும் அவைகளில் எல்லாம் மிகச் சிறந்து விளங்கியவன் அனிக்கானவ்தான்.

ஓய்வு நேரங்களில் மாமச்கின் அனைவரின் கவனத்தையும் கவர்ந்தான். இன்றும் செயல் களில் இறங்காதவர்கள், புதிதாய் வந்துள்ள இளஞ்சாரணர்கள் அவனையே பெரிதும் மதித் தனர். தொள தொளவென்றிருந்த பெரிய காற் சட்டைகளையும், பழுப்பு நிற காலணிகளையும் போட்டுக் கொண்டு எடுப்பாக நடந்து வரு வான். சட்டையின் கழுத்துப் பட்டை எப்பொ ழுதுமே திறந்து இருக்கும். தலையில் தனிப்பச் சை நிறத்துணி வைத்த கஸாக் ஆட்டுத்தோல் குல்லாய். அதன் கீழிருந்து கன்னங்கரிய மயிர்ச் சுருள் நெற்றியில் தொடங்கும். பருத்த உடலும், அகன்ற முகமும், எளிமையான சுபாவமும் கொண்ட அனிக்கானவிற்கும் அவனுக்கும் ஒப்பு மை ஏது?

போருக்கு முன் ஒவ்வொருவனும் நடத்தி வந்த வாழ்க்கையின் அடையாளம் அவனவன் நடத்தையிலும் பண்பிலும் இப்போதும் காணப் பட்டது. சைபீரியாவில் கூட்டுப்பண்ணைக்கார னாயிருந்த அனிக்கானவின் அமைதியான தன் னம்பிக்கை; உலோகத் தொழிலாளி மார்சென் கோவின் சமயோசித புத்தி, பிசகா ஒழுங்கு; துறைமுகத் தொழிலாளி மாமச்கினுடைய, எதற் கும் கவலையற்ற துணிவு ஆகியவற்றைக் குறிப் பிடலாம். ஆனால் அவர்களது கடந்த கால வாழ்க்கை சொல்லுக்கு எட்டாத் தொலைவில் இருந்தது போல் காணப்பட்டது. இன்னும் எவ் வளவு காலம் போர் நடக்கும் என்பதைச் சிறிதும் அறியாத அவர்கள் முழுமனத்துடன்

அதில் இறங்கிவிட்டார்கள். போர் அவர்களின் தினசரி வாழ்க்கையாய் விட்டது; இப் பிளாட்டூன் அவர்களது குடும்பமாய் விட்டது.

குடும்பமா? ஆம், அது ஒரு விசித்திரமான குடும்பம்தான். அக்குடும்பத்தில் உள்ளவர் அதிக காலம் சேர்ந்து வாழ்வதில்லை. சிலர் ஆஸ்பத்திரிகளுக்குச் சென்றனர்; மற்றுஞ் சிலர் திரும்பி வராத இடத்திற்குச் சென்றனர். இக் குடும்பத்திற்கும் தனி வரலாறு இருந்தது; மிகச் சுருக்கமானது, இருந்தாலும் விதவிதமான அழகுடையது; அது ''தலைமுறை தலைமுறையாகத்'' தொடர்ந்து வந்தது. அனிக்கானவ் முதன்முதலாக அவர்களிடையே வந்த காலத்தைப் பற்றிச் சிலருக்கு இன்னும் நினைவிருந்தது. பல நாட்கள் வரை அவன் வேவுச் சோதனைக்குச் செல்ல முடியவில்லை. வேவுக் குழுத் தலைவர்களில் எவரும் அவனைத் தங்களுடன் கூட்டிச் செல்வதற்குத் தயங்கினர். இந்த சைபீரியாக்காரனது அஞ்சத்தக்க உடல் வன்மை வேவுத் தொழிலுக்கு மிகவும் வாய்ப்பானது தான். அவனால் எளிதாக ஒரு ஜெர்மானியனை அமுக்கி விட முடியும். அவசியமானால் இரண்டு பேர்களைக் கூடச் சத்தமில்லாது நசுக்கிவிடுவான். ஆனால் அவன் காயமடைந்தாலோ, கொல்லப்பட்டாலோ, அவனை எப்படிக் கொண்டுவந்து சேர்ப்பதென அவர்கள் மிகவும் பயந்தார்கள்; அவ்வளவு பெரிதாகவும் கனமாகவுமிருந்தது அவன், ''உடல் காயமடைந்தால் என்னைத் தூக்கி வர வேண்டாம், நானே மெதுவாக

ஊர்ந்து வந்து விடுகிறேன். கொல்லப்பட்டால், அத்துடன் தொலையட்டும், அங்கேயே என்னை விட்டுவிடுங்கள். இறந்து போய் விட்ட என்னை ஜெர்மானியர் என்ன செய்ய முடியும்?'' என்று அவன் எவ்வளவோ கூறியும் பயனில்லை. சிறிது காலத்திற்கு முன்பு தான் இந்நிலைமை மாறியது. காயமடைந்த லெப்டினன்ட் ஸ்க்வர்ட்ஸோவுக்குப் பதில் லெப்டினன்ட் டிராவ்கின் அவர்களுடைய தலைவனான பிறகுதான் இம் மாற்றம் ஏற்பட்டது.

தனது முதல் வேவுச் சோதனைக்கே டிராவ்கின் அனிக்கானவைத் தன்னுடன் அழைத்துச் சென்றான். அன்று ''மலை போன்ற'' அனிக்கானவ் தடியனான ஜெர்மானியனை இலகுவாக அமுக்கியதைப் பார்த்த மற்றச் சாரணர்கள் திறந்த வாய் மூடாமல் அதிசயித்தனர். புலியைப் போல வேகமாயும் சத்தமில்லாமலும் அவன் காரியத்தை முடித்துவிட்டான்; அனிக்கானவின் மழை அங்கிக்குள் குற்றுயிரும் குலை உயிருமாகச் சங்கடப்பட்டு மூச்சுத் திணறிக் கொண்டிருப்பவன் ஒரு ஜெர்மானியன் என்பதை டிராவ்கின் கூட நம்பவில்லை; ஏனெனில் எதிரிகளைப் பற்றிய தகவல் தெரிவிக்கக் கூடிய யாராவது ஒரு கைதி அகப்பட மாட்டானா என்று ஒரு மாதத்திற்கு மேலாக அவர்களது டிவிஷனைச் சேர்ந்த அனைவருமே அவ்வளவு ஏக்கத்துடன் இருந்தனர்.

மற்றொரு சமயம், சார்ஜென்ட் மார்சென்கோவுடன் சென்றிருந்த பொழுது, அனிக்கானவ்

ஒரு ஜெர்மானிய கேப்டனைப் பிடித்து விட்டான். மார்சென்கோவிற்குக் காலில் காயம்; அதனால் அனிக்கானவ் அவனையும் ஜெர்மானியனையும் ஏககாலத்தில் தூக்கிக் கொண்டு செல்ல வேண்டியதாயிற்று. தனது தோழனை மென்மையாகப் பிடித்துக் கொண்டும், பகைவனைச் சரியாக அழுத்திக்கொண்டும் ஒருவருக்கும் சேதமேற்படாமல் அனிக்கானவே அவர்களைக் கொண்டு சேர்த்தான்.

பழைய சாரணர்களின் பெருஞ்செயல்களைப் பற்றி இரவில் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். அவை புதிதாக வந்துள்ளவர்களின் கற்பனையைத் தூண்டியதுடன் அவர்களை அற்புதமான இந்தத் தொழில்பற்றி மிகுந்த பெருமை கொள்ளும் படி செய்தன. ஆனால் இப்போது நீண்ட காலமாகப் பகைவர்களிடமிருந்து வெகு தொலைவில் ஒரு வேலையுமின்றி இருந்தது அவர்களிடையே சிறிது சுறுசுறுப்புக் குறைவை உண்டாக்கி இருந்தது.

வயிறார உண்ட பிறகு பின்னால் சாய்ந்து கொண்டு மாமச்கின் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தான். அந்த ஊரில் இரவைக் கழிப்பதற்கும், ஏதாவது சாராயம் கிடைத்தால் குடிப்பதற்கும் தனக்கு விருப்பம்தான் என்று தெரிவித்தான்.

''ஆமாம், அவசரப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஜெர்மானியர்களை நாம் விரட்டிப்பிடித்துவிடவோ முடியாது. அவர்களோ வெகு வேகமாய் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று நிச்சயமின்றிக் கூறினான் மார்சென்கோ.

அந்நேரம் கதவு திறந்தது; டிராவ்கின் உள்ளே நுழைந்தான்.

''பாட்டி, அவை யாருடையவை?'' என்று சன்னல் அருகே கட்டியிருந்த குதிரைகளைக் காட்டிக் கேட்டான்.

அவைகளில் ஒன்று பொன்னிறப் பெண் குதிரை; நெற்றியில் வெள்ளைச் சுட்டி கொண்டது. கிழவிக்குச் சொந்தமானது; மற்றவை பக்கத்து வீட்டுக்காரர்களுடையவை என்பது தெரிய வந்தது. இருபது நிமிடங்களுக்குப் பிறகு குதிரைகளின் சொந்தக்காரர்கள் கிழவியின் வீட்டிற்கு அழைக்கப்பட்டு வந்து சேர்ந்தார்கள். டிராவ்கின் அவசரமாக ஒரு ரசீது எழுதி அவர்களிடம் கொடுத்து, ''எங்களுடன் யாராவது ஒரு பையனை அனுப்புங்கள். அவன் குதிரைகளைத் திரும்பக்கொண்டு வந்துவிடுவான்'' என்றான்.

இந்த யோசனை குடியானவர்களுக்கும் பிடித்தது. சோவியத் படைகள் வெகு வேகமாக முன்னேறி வந்ததனால்தான் தங்களுடைய கால்நடைகள் எல்லாவற்றையும் ஜெர்மானியர்கள் ஓட்டிக் கொண்டு போகவில்லை, ஊரைத் தீயிட்டுக் கொளுத்தவில்லை என்பது அவர்கள் எல்லாருக்கும் நன்கு தெரியும். ஆகவே, குதிரைகளைக் கொண்டு செல்வதை அவர்கள் எதிர்க்கவில்லை. உடனே ஒரு மந்தைக்கார இளைஞனைப் போர்வீரர்களுடன் செல்வதற்குத் தேர்ந்தெடுத்தனர். பதினாறு வயதே நிரம்பியிருந்த அச்சிறுவன் ஆட்டுத்தோல் அங்கி அணிந்திருந்

தான். திடீரென்று தனக்கு ஏற்பட்ட இப் பொ றுப்பைக் குறித்துப் பெருமை அடைந்தான்; பயமும் கொண்டான். குதிரைகளைக் கட்ட விழ்த்து, கடிவாளங்களை மாட்டி, நன்றாகத் தண்ணீர் காட்டி விட்டுப் புறப்படுவதற்குத் தயார் என்று அவர்களிடம் கூறினான்.

சில நிமிடங்கள் கழிந்ததும் பன்னிரண்டு பேர் கள் குதிரைகளின்மேல் ஏறி, மேற்கு நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். அனிக்கானவ் டிராவ் கினை அணுகித் தலையை அசைத்துக்கொண்டு மெதுவாய்ச் சொன்னான்:

''தோழர் லெப்டினன்ட்! இவ்வாறு குதிரை களைக் கொண்டு வந்ததற்கு உங்களுக்குத் தண் டனை கிடைக்காதோ?''

''கிடைக்கலாம்'' என்று ஒரு சிறிது யோசித்து விட்டுப் பதிலளித்தான் டிராவ்கின். ''ஆனால் அதற்குள் நாம் ஜெர்மானியர்களை நெருங்கி விடுவோம்.''

பின் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு புன்னகை பூத்தனர்.

வழியில் ஒரு பழமையான காட்டைக் கடந்து சென்றார்கள். அதன் ஓசையற்ற தொலை தூர மெல்லாம் உற்றுப் பார்த்துக்கொண்டே குதிரை யை முடுக்கினான் டிராவ்கின். பலத்த காற்று அவன் முகத்தில் வீசியது. குதிரைகள் பறவைகள் போல் பறந்து சென்றன. மேற்கில் மறையப் போகும் சூரியன் குருதிச் சிவப்பாகப் பிரகாசித் தது. அதைத் துரத்திப்பிடிப்பவர்கள் போல் வேகமாய் ஓடிக்கொண்டிருந்தனர் சாரணர்கள்.

## அத்தியாயம் இரண்டு

ஒரு பெரிய காடு. அங்கு அமைதியின்றித் தூங்கிக்கொண்டிருந்தனர் படைவீரர்கள். அவர்களுக்கிடையே டிவிஷன் தலைமைச் செயலகத்தினர் இரவைக் கழித்தனர். கணப்புகளை மூட்டவில்லை. ஏனென்றால் முன்னேறிச் செல்லும் ருஷ்யப் படைகளின் போக்கைக் கவனிப்பதற்கு ஜெர்மானிய விமானங்கள் மேலே பறந்த வண்ணமாயிருந்தன. ஏற்கெனவே அனுப்பப்பட்டிருந்த ஸேப்பர் அணியைச் சேர்ந்தவர்கள் முந்திய பிற்பகலில் ஓர் அழகிய புது நகரத்தை அமைத்திருந்தனர்: நேரான வீதிகள், தெளிவான அடையாளக் குறிகள், பைன்மரக் கிளைகளால் கூரை வேய்ந்த கச்சிதமான பாசறைகள். இந்தப் போர்க் காலத்தில் இதைப் போன்ற அற்ப ஆயுளையுடைய எத்தனையோ நகரங்களை அந்த ஸேப்பர் படையினர் கட்டிக் கொடுத்திருந்தார்கள்!

ஸேப்பர் கம்பெனியின் தலைவனான லெப்டினன்ட் புகோர்கோவ் செயலகத் தலைவரைப் பார்த்துப் பேசுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தான். ஆனால் லெப்டினன்ட் கர்னல் கலீயெவ் தேசபடத்தில் வைத்த கண் வாங்காமலே இருந்தார். இப்படம் விசித்திரமாக இருந்தது. அதன் பச்சைநிறப் பரப்பில் அந்த டிவிஷனைச் சேர்ந்த அணிகளின் இடங்கள் மட்டுமே குறிக்கப்பட்டிருந்தன. வழக்கமாக நீலநிறக் கோடுகளால் காட்டப்படும் எதிரிப்படைகளின்

இடங்களே அதில் காணவில்லை. பின்னணிப் படைகள் எங்குள்ளன என்பது கடவுளுக்குத் தான் வெளிச்சம். எல்லையற்ற அப் பசுங் காடு களினிடையே படைத்தொகுதிகள் அபாயகர மான நிலையில் பிரிந்து கிடந்தன.

படைகள் இரவைக் கழித்த காட்டின் உருவம் கேள்விக் குறியைப் போல் அமைந்திருந்தது.

அது சேனைத் தலைவரின் ஏளனக் குரலில் லெப்டினன்ட் கர்னல் கலீயெவைப் பின்வருமாறு கேட்பது போலிருந்தது:

''ஏனப்பா, என்ன சேதி? இது வடமேற்குப் போர்முனை அல்ல, நீங்கள் ஓய்வாக உட் கார்ந்து கொண்டு போரின் பாதிநாட்களைக் கழிக்கவும், ஜெர்மன் பீரங்கிப் படை குறித்த நேரங்களில் குண்டு வீசிக் கொண்டிருக்கவும். தெரிகிறதா? படையெழுச்சி செய்துகொண்டே யிருக்க வேண்டிய போராகும் இது!''

எத்தனையோ இரவுகள் கண்ணுறங்காது கழித்திருந்த கலீயெவ் காகேஷியக் கம்பளி மேலா டை அணிந்து, குளிரால் நடுங்கிக்கொண்டு உட் கார்ந்திருந்தார். கடைசியில் படத்திலிருந்து கண் களை மேலே உயர்த்தி, புகோர்கோவைப் பார்த் தார்.

''என்ன செய்தி?''

தன்னுடைய ஆட்கள் கட்டியிருந்த சிறப்பான பாசறையைத் திருப்தியுடன் கண்டு களித்துக் கொண்டிருந்த புகோர்கோவ், ''தலைமைச் செ யலகம் நாளை எங்கே இருக்கும் என்பதைத் தெரிந்து போகவே வந்திருக்கிறேன், தோழர்

லெப்டினன்ட் கர்னல். விடியுமுன் அங்கே ஒரு தொகுதியை அனுப்பி விடுகிறேன்'' எனப் பதில ளித்தான்.

மேலும் ஒரு நாளைக்காவது இதே காட்டில் அவர்களது டிவிஷன் தங்காதா என்று புகோர் கோவிற்கு ஆசை. ஏனெனில் அப்போது கிளை மறைவுகளாலாகிய இந்த அழகிய நகரம் கொஞ்ச நேரத்திற்காவது ஒரு வகையில் பயன் பட்டது எனக் கொள்ளலாம்; யாராகிலும் ஒரு வேளை இந்த அதிசயமிகுந்த பாசறைகளைக் கட்டிக் தந்த புகோர்கோவைப் புகழ்ந்து, சில சொற்களாவது கூற இடமுண்டு. இல்லையேல் அவர்கள் விட்டுச் சென்றவுடன் இளவேனிற் காலக் காற்றுக்கே அவை சொந்தமாகிவிடும். திறமை வாய்ந்த தச்சர்-கொத்தர் வம்சத்தில் வந்த புகோர்கோவிற்குத்தான் சிறந்த தொழி லாளி என்று பெயர் பெறுவதில் ஆர்வம் மிகுந்து இருந்தது.

''எங்கே, உன் தேசபடத்தை இப்படிக் கொடு'' என்று லெப்டினன்ட் கர்னல் சுருக்க மாகக் கூறிவிட்டு, அப் படத்தில் படைகள் அப் போது தங்கியிருந்த இடத்திலிருந்து சுமார் நாற் பது கிலோமீட்டர் தூரத்திலுள்ள மற்றொரு காட்டின் ஓரத்தில் ஒரு சிறிய கொடியடையா ளம் போட்டார். பெருமூச்சை அடக்கிக்கொண்டு புறப்படுவதற்குத் திரும்பினான் புகோர்கோவ். ஆனால் அச்சமயம் நுழைவாயிலில் கட்டியிருந்த நீர் சுவறாத் துணித் திரை ஒரு பக்கமாக விலக்கப்பட்டது; வேவுகாரக் கம்பெனியின் தலை

வனான கேப்டன் பராஷ்கின் அறைக்குள் திடு மென நுழைந்தான். லெப்டினன்ட் கர்னல் கலீ யெவ் கடுகடுப்புடன் அவனை வரவேற்றார்:

''நமது வேவு வேலைகளைப் பற்றி டிவிஷன் தலைவர் மிகவும் அதிருப்தி கொண்டிருக்கிறார், தெரியுமா? இன்று நாங்கள் லெப்டினன்ட் டிராவ்கினையும் அவனது கூட்டத்தார்களையும் கண்டோம். அவர்களுடைய அலங்கோலமும், மழித்துக் கொள்ளாத முகங்களும் பார்க்கவே சகிக்கவில்லை. என்னதான் நினைத்துக் கொண் டிருக்கிறீர்?''

சிறிது நேரம் கலீயெவ் பேசாமலிருந்தார். பிறகு திடீரென்று சினந்து, ''காப்டன் அவர் களே, தயவு செய்து, இப்பொழுதாவது பகைவர் படை எங்குள்ளது என்று சொல்லுவீரா?'' என்று சீறினார்.

லெப்டினன்ட் புகோர்கோவ் சத்தமில்லாமல் குடிசையை விட்டு நழுவி, மறுநாளைக்குச் செல்ல வேண்டிய ஸேப்பர் தொகுதியைத் தேர்ந்து அனுப்புவதற்குப் புறப்பட்டான். வழியே டிராவ் கினைப் பார்த்து, தான் கேட்டவைகளை அவ னிடம் சொல்ல வேண்டுமென்று தீர்மானித் தான். ''அவனுடைய ஆட்கள் மட்டும் சீக்கிர மாக மழித்துக்கொண்டு கச்சிதமாக வரவில்லை யானால் டிராவ்கின் பாடு திண்டாட்டம்தான்'' என்று தனக்குள் எண்ணிக்கொண்டான், இளகிய நெஞ்சுடைய புகோர்கோவ்.

தன்னைப் போலவே வோல்கா பகுதியினனா கிய டிராவ்கினிடம் புகோர்கோவிற்கு மிகவும்

பிரியம். டிராவ்கின் புகழுடைய வேவுகாரனாக விளங்கிய போதிலும், முதலில் அவர்களிருவரும் சந்தித்த காலத்தில் இருந்தது போலவே இப்போ தும் அடக்க ஒடுக்கமாய் இருந்தான். அவர்கள் ஒருவரை யொருவர் காண்பது வெகு அபூர்வம். இருவருக்கும் வேலை அதிகம். எனினும் புகோர் கோவிற்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தது என்னவெனில் நண்பன் வலோத்யா டிராவ் கின் — அடக்கமிருந்தவன், நிதானமானவன், நம் பத்தகுந்தவன், எப்பொழுதும் டிவிஷனிலுள்ள மற்றெவரையும் விடச் சாவிற்கு மிக அருகில், சாவின் வாயிலில் விளையாடித் திரியும் வீரன் — எங்கோ தனது அருகேயிருக்கிறான் என்பது தான்.

புகோர்கோர்வ் டிராவ்கினை எங்கும் கண்டு பிடிக்க முடியவில்லை. பராஷ்கினின் பாசறைக் குள் எட்டிப்பார்த்தான். ஆனால் அன்று கர்னலி டமிருந்து கிடைத்த திட்டுதலினால் இன் னும் அதிர்ச்சி நீங்காமல் இருந்த அந்தக் காப் டன் வசைமாரிகளுடன் அவனுக்குப் பதிலளித் தான்:

''அவன் எங்கேயிருக்கிறான் என்பது சைத் தானுக்குத் தான் வெளிச்சம். என்னைச் சங் கடத்தில் மாட்டிவிட்டு...''

அந்த டிவிஷனிலேயே சோம்பேறித் தனத் திற்கும் வசை மொழிகள் பேசுவதற்கும் பேர் போனவன் பராஷ்கின். தலைமைச் செயலகம் தன்னை உதவாக்கரையாக மதிக்கிறது, எந்த நிமிடத்திலும் தான் பதவியிலிருந்து நீக்கப்பட

லாம் என்பதை நன்கறிந்திருந்த அவன் வேலை செய்வதை அறவே நிறுத்திவிட்டான். தாக்குதல் நடந்த காலமுழுதும் அவனது வேவுப்படை யினர் எங்கிருந்தனர், என்ன செய்து வந்தனர் என்பதைப் பற்றிக்கூட அவனுக்குச் சரியாகத் தெரியாது.

தலைமைச் செயலக லாரியில் இங்குமங்கும் போய் வருவதும், கம்பியில்லாத் தந்தியில் வேலை செய்யப் புதிதாக வந்திருந்த பொன்னிறக் கூந்தலழகி, வனப்பு வாய்ந்த கண்ணினள், வீர மங்கை காத்யாவுடன் குலாவுவதும் தான் அவன் பார்த்த வேலை.

பராஷ்கினின் பாசறையிலிருந்து வெளிவந்த புகோர்கோவ் தான் கட்டிய மனிதர்வாழ் கூடு களுக்கிடையே சென்றான். நேரான பாதைகள் வழியே அவன் நடந்து போகும்போது, போர் முடிந்து விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நினைத்துக்கொண்டான். தான் ஊருக் குத் திரும்பி மறுபடியும் தனது வேலையைச் செய்யலாம் — வீடுகள் கட்டலாம், இழைக்கப் பட்ட பலகையின் நறுமணத்தை நன்கு நுகர லாம், சாரத்திற்குமேல் ஏறலாம், அநுபவசாலி களான பெருங்கொத்தர்களுடன் கசங்கிய கட்டட வரைப்படங்களை விவாதிக்கலாம், என் றெல்லாம் எண்ணலானான்.

உதயத்தில் புகோர்கோவ் மண்வெட்டிகள், கடப்பாரைகள் முதலிய கருவிகளை வண்டியில் ஏற்றிக்கொண்டு தன் ஸேப்பர் தொகுதியுடன் கிளம்பி விட்டான்.

காலைப் பறவைகளின் கீச்சு ஒலி காடு முழு திலும் கேட்டது. குறுகிய சாலையின் இருபுறமு மிருந்த மரங்களின் உச்சிகள் ஒன்றோடொன்று உராய்ந்தன. இராணுவ மேலங்கிகளுக்கு மேல் நீர் சுவறாத் துணிகளைப் போர்த்திருந்த கா வல் வீரர்கள் இரவெல்லாம் குளிரில் நின்றதால் உண்டான விறைப்பைப் போக்குவதற்காகச் சா லை யோரமாக நடந்து கொண்டிருந்தார்கள். முகாமைச் சுற்றிலும் சாலையின் இருமருங் கிலும் அகழப்பட்டிருந்த பள்ளங்களில் எந்திரத் துப்பாக்கி வீரர்கள் தூங்கிவழிந்து கொண்டிருந் தனர். தரை மேல் பிர்மரக் கிளைகளைப் பரப்பிக்கொண்டு ஒருவரோடொருவர் ஒட்டிப் படுத்திருந்தனர் போர்வீரர்கள். காலைநேரக் குளிரால் விழிப்படைந்த சிலர் தீ மூட்டுவதற்காக பிர் நெற்றுகளையும், கிளைகளையும் சேகரித்துக் கொண்டிருந்தனர்.

குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த புகோர்கோவ் நினைத்தான்: ''ஊம், இதுதான் போர். நூறா யிரக்கணக்கான மக்களுக்கு வீடு வாசல் களற்ற நாடோடி வாழ்க்கை.''

முகாமிலிருந்து சுமார் ஆறு மைல் தூரத்தில் மூன்று பேர் குதிரைகள் மீது கனவேகமாய் வருவதைக் கண்ட புகோர்கோவிற்குக் கொஞ் சம் அச்சம் உண்டாயிற்று. தங்களுக்கு முன் னால் ஒரு சோவியத் வீரனும் இல்லை என்பது அவனுக்குத் தெரியும். பாய்ச்சலில் வந்த குதிரை வீரர்கள் விரைவில் அவனை அணுகினர்; அவர் களில் ஒருவன் டிராவ்கின் என்பதைக் கண்டதும்

புகோர்கோவிற்குக் கலக்கம் நீங்கியது.

''அண்மையில் இருக்கிறார்கள் ஜெர்மானியர் கள், பீரங்கிப் படையுடனும், மோட்டார்ப் பீரங்கிகளோடும்'' என்று குதிரையை விட்டு இறங்காமலே கூறினான் டிராவ்கின்.

புகோர்கோவின் தேசபடத்தில் ஜெர்மானி யர்களின் பாதுகாப்பு இடங்களைக் கோடிட்டுக் காட்டினான். அவர்கள் மறுநாளுக்கான பாச றை நகரம் அமைக்கவிருந்த காட்டின் ஓரமாக அவை இருந்தன.

''இந்த இடத்தில் இரண்டு ஜெர்மானியக் கவச மோட்டார்களும் ஓர் மோட்டார்ப் பீரங்கி யும் இருக்கின்றன, ஒருவேளை மறைவிலிருந்து தாக்குவதற்காக இருக்கலாம்...'' என்று சொல் லிவந்த டிராவ்கின் சிறிது நிறுத்திவிட்டு மறு படியும், ''அனிக்கானவ் காயமடைந்திருக்கிறான். ஜெர்மானியருடன் இலேசான பூசல் ஏற்பட் டது'' என்று கூறினான்.

அனிக்கானவ் குதிரை மேல் தடுமாற்றத்தோடு உட்கார்ந்து கொண்டிருந்தான். தனது கவனக் குறைவால் எல்லாரையும் சங்கடத்திற்குள்ளாக்கி விட்டது போலவும், அதற்காக மன்னிப்புக் கோ ருவது போலவும் ஒரு புன்னகை அவன் முகத்தில் தவழ்ந்தது.

''நான் இனி என்ன செய்வதாம்?'' என்று புகோர்கோவ் கலக்கத்தோடு கேட்டான்.

ஸேப்பர் கூட்டத்தினர் அவ்விடத்திலேயே காத் திருக்க வேண்டுமென்றும், டிராவ்கின் தலை மைச் செயலகத் தலைவரிடம் செய்தியைக் கூறி

அவருடைய கட்டளைகளை புகோர்கோவிற்கு அனுப்புவது என்றும் இருவரும் முடிவு செய்து கொண்டனர். வெள்ளைச் சுட்டி வாய்ந்த தன் குதிரையைத் தட்டி விட்டுப் பாய்ந்தான் டிராவ் கின்.

பாசறை நகரத்தின் நடுவே தம்முடைய ஜீப் பின் பக்கத்தில், ரெஜிமெண்டு தலைவர்களான லெப்டினன்ட் கர்னல்கள், மேஜர்கள் ஆகியோர் புடைசூழ கர்னல் ஸெர்பிசேன்கோ நின்றுகொண் டிருந்தார். கொஞ்ச தூரத்தில் அவர்களுடைய சிப்பந்திகளும் நின்று கொண்டிருந்தனர். சடக் கென்று கடிவாளத்தை இழுத்து, குதிரையி னின்று டிராவ்கின் குதித்தான். வழக்கமில்லாத, நீண்ட குதிரைச் சவாரிக்குப் பிறகு சிறிது நொண்டிக்கொண்டு நேராக டிவிஷன் தலைவரி டம் சென்றான்.

''தோழர் தலைவரே, ஜெர்மானியர்கள் அதி கத் தொலைவிலில்லை.''

எல்லாரும் சூழ்ந்துகொண்டு கேட்க, டிராவ் கின் சுருக்கமாகப் பின்வருமாறு அறிவித்தான்: ''அருகாமையிலுள்ள ஆற்றின் கரையோரமாக எதிரிப்படைகள் அரண்செய்து தங்கியிருக்கின் றன. எதிரிகளின் பீரங்கியிடங்களையும் ஆறு மோட்டார்ப் பீரங்கிகளையும் நானே பார்த் தேன். காப்புக் கிடங்குகளில் ஜெர்மன் காலாட் படை வீரர்கள் இருந்தார்கள். இரண்டு கவச மோட்டார்களும் ஓர் மோட்டார்ப் பீரங்கியும் சுமார் பத்து மைல்களுக்கப்பால் பதி போட்டுக் காத்திருக்கின்றன.''

டிராவ்கின் சொன்ன விவரங்களை எல்லாம் டிவிஷன் தலைவர் தமது தேசபடத்தில் குறித்துக் கொண்டார். எங்கும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. ரெஜிமெண்டு தலைவர்களும் செயலக அதிகாரிகளும் தங்களது தேசபடங்களை எடுத்துக் கொண்டார்கள். லெப்டினன்ட் கர்னல் கலீயெவுக்குத் திடீரென்று இருந்த குளிரெல்லாம் போய்விட்டது. மேலங்கியைக் கழற்றி யெறிந்தார். அரசியல் துறையின் தலைவர் தமது அதிகாரிகளைக் கூட்டிப் பேசுவதற்குப் புறப்பட்டார்.

''சரி, இவை பகைவரின் உண்மையான அரண்கள் தான் என நினைக்கிறாயா?'' என்று ஜீப்பின் முகப்பிற்கு மேல் விரித்திருந்த தம்முடைய தேசபடத்தில் கடைசி நீலக் கோட்டைக் கிழித்து விட்டுக் கேட்டார் டிவிஷன் தலைவர்.

''ஆமாம், தோழர் தலைவரே.''

''நீயே பார்த்தாயா?''

''ஆமாம், தோழர் தலைவரே.''

''நீயாக ஒன்றும் சரடு விடவில்லையே?'' என்று எதிர்பாராதபடி முடித்து விட்டார் டிவிஷன் தலைவர்; அதே சமயம் தமது வெண்பச்சைக் கண்களை இடுக்கிக் கொண்டு டிராவ்கினைக் கூர்ந்து நோக்கினார்.

''இல்லை; நான் ஒன்றும் சரடு விடவில்லை.''

''ரோசப்பட்டுக் கொள்ளாதே'' என்று குழைவுடன் கூறினார் டிவிஷன் தலைவர். ''உறுதிப் படுத்திக் கொள்வதற்குத் தான் கேட்டேன்.

ஏனென்றால், சாரணர்கள் எப்போதும் கயிறு திரிப்பதில் பிரிய முள்ளவர்களென்பது எனக்குத் தெரியும்.''

''நான் ஒன்றும் கயிறு திரிக்கவில்லை'' என்றான் டிராவ்கின்.

கட்டளை ஒலித்தது; போர்வீரர்கள் அணி வகுத்து நிற்க முற்பட்டனர். காட்டில் எங்கும் சந்தடியுண்டாயிற்று.

தேசபடத்தில் வைத்த கண்களுடன் டிவிஷன் தலைவர் உத்தரவிட்டார்:

''முன் போலவே ரெஜிமெண்டுகளெல்லாம் உரிய வரிசைகளில் மேற்செல்ல வேண்டும். முதலில் போகும் ரெஜிமெண்ட் ஒரு பட்டாளியனை முன் தாக்கும் படையாக அனுப்ப வேண்டும். காலாட்படையுடன் பீரங்கி ரெஜிமெண்டும் முன் செல்ல வெண்டும். சாரணத் தொகுதியும் துணை எந்திரத் துப்பாக்கிகளும் பக்கங்களில் பாதுகாப்பளித்துச் செல்ல வேண்டும். '108.1' என்ற குன்றை அடைந்ததும், முதலில் போகும் ரெஜிமெண்ட் தாக்குதலுக்குரிய அணி வகுப்பில் உடனே மாறி அமைந்துகொள்ள வேண்டும். அதன் தலைமை இடம் '108.1' குன்று. காட்டுக் காவலன் வீட்டருகே, இக்காட்டின் மேற்கோரத்தில் நான் இருப்பேன். கலீயெவ், நீங்கள் நடைமுறை உத்தரவுகளைத் தயாரித்து தலைமைச் செயலகத்திற்குத் தகவல் தெரிவியுங்கள்.'' திடீரென்று, தமது குரலைத் தாழ்த்திக் கொண்டு அவர் மேலும் கூறினார்: ''தோழர்களே! கவனத்தோடிருங்கள்! பீரங்கி ரெஜிமெண்ட் பின்தங்கி விட்

டது. குண்டுகளும், தோட்டாக்களும் குறை வாயிருக்கின்றன. நாம் சாதகமான நிலையில் இல்லை... நமது கடமையை அனைவரும் கவுரவத் துடன் செய்து முடிக்க வேண்டும்.''

அதிகாரிகள் எல்லாரும் அவரவர் வேலை யைக் கவனிக்கச் சென்றுவிட்டனர். டிவிஷன் தலைவரும், கலீயெவும், டிராவ்கினும் மட்டுமே ஜீப்பின் அருகே நின்றனர். ஸெர்பிசேன்கோ டிராவ்கினையும் அவனது நுரை தள்ளும் குதிரை யையும் பார்த்தார்.

''சபாஷ், பலே வேலை!'' என்று புன்சிரிப்புடன் அவர் சொன்னார்.

''அனிக்கானவ் காயம் அடைந்திருக்கிறான்'' என்று சிறிது திகைப்புற்ற டிராவ்கின் சம்பந் தமில்லாமல் பதிலளித்தான்.

கர்னல் பதிலொன்றும் பேசாது, .கலீயெவிற்குக் கடைசி உத்தரவுகளை யெல்லாம் கூறிவிட்டு, படைகளை நோக்கிப் புறப்பட்டார்.

செயலக அதிகாரிகள் கலீயெவைச் சுற்றி வளைத்துக் கொண்டனர். அவரிடம் ஒரு மாறு தல் காணப்பட்டது; முப்பது ஆண்டுகளுக்குமுன் அவர் பாக்கூவில் குறும்புக்காரப் பையனாயிருந்த போது விளங்கியது போலவே ஒரே துருதுருப்பும் உரத்த பேச்சுமாக விளங்கினார். அப்படிப்பட்ட சமயங்களில், ''கலீயெவ் நாஜிகளை மோப்பம் கண்டுவிட்டார்'' என்று படைவீரர் சொல்லிக் கொள்வார்கள்.

டிராவ்கினை அழைத்து, ''நீ போய் உனது ஆட்களுடன் சேர்ந்துகொள். ஜெர்மானியர்களை

நன்கு கவனித்து, உடனுக்குடன் அஞ்சல்காரர் கள் மூலம் செய்தி அனுப்பு'' என்றான்.

''நல்லது, தோழர் லெப்டினன்ட் கர்னல்!'' என்று சொல்லிவிட்டு டிராவ்கின் தன் குதிரை மேல் தாவினான்.

இதற்கிடையே அவனுடைய தோழர்கள் இரு வரும் அங்குள்ள பாசறை மருத்துவ விடுதிக்குச் சென்றிருந்தனர். அனிக்கானவ் அங்கேயே தங்கி விட்டான். மற்றவன் அவனது குதிரையை ஓட் டிக்கொண்டு டிராவ்கினுடன் சேர்ந்து கொண் டான்.

புகோர்கோவ் அதேயிடத்தில் கவலையுடன் காத்துக் கொண்டிருந்ததை டிராவ்கின் கண் டான். அவன் குதிரையை விட்டு இறங்கி, தனக்குக் கொடுத்த வோத்காவைக் குடித்து விட்டு, டிவி ஷன் செயலகம் அடுத்தபடியாக இருக்க வேண் டிய இடத்தை தேசபடத்தில் குறித்துக் காட் டினான்.

''அப்படியானால், மறுபடியும் போர் தொடங்கு கிறது என்று சொல்'' என்று புகோர்கோவ் டிராவ்கினுடைய ஆழ்ந்த விழிகளைப் பார்த்த வண்ணம் கூறினான்.

வேவுகாரர்கள் தங்கள் குதிரைகளைக் குதி முட்களால் உசுப்பி, இனந்தெரியாத நிகழ்ச்சியை எதிர்கொள்ள விரைந்து சென்றனர்.

சண்டை மறுபடியும் தொடங்கப் போகிறது, சண்டைக்கு முடிவே தென்படவில்லை; முடிவே கிடையாது போலிருக்கிறது என்று தணிந்த குரலில் பேசிக்கொண்டே ஸேப்பர்களும் மேலே சென்றார்கள்.

புகோர்கோவ் சொன்னான்: "இதோ பாருங் கள், தம்பிகளே, இப்பொழுது பாசறைகளுக்குப் பதிலாக நிலவறைகள், தெரிகிறதா?" என்று.

டிராவ்கின் விரைவில் தனது ஆட்களுடன் சேர்ந்துகொண்டான். பெயர் தெரியாத ஓர் ஆற்றின் அருகே மரங்கள் அடர்ந்த மேட்டில் அவர்கள் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந் தனர். எதிரிப் படை ஆற்றிற்கு அப்பால் பதுங்கி யிருந்தது.

ஜெர்மானியர்களை மரத்தின் உச்சியிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த மார்சென்கோ சர் ரென்று இறங்கினான்.

"கவச மோட்டார்களுடனும் மோட்டார்ப் பீரங்கியுடனும் இருந்தார்களல்லவா ஜெர்மா னியர்! அவர்கள் சுமார் அரைமணி நேரம் இக்கரையில் பதிபோட்டுக் கொண்டிருந்து விட்டு அப்புறம் ஆற்றைக் கடந்து அக்கரை சென்று விட்டார்கள்; தங்கள் அணிக்குத்தான் திரும்பிப் போயிருப்பார்கள். ஆறு ஆழமில்லை என்பதைக் கண்டுகொண்டேன். தண்ணீர் கவச மோட் டார்களுக்குப் பாதிவரைதான் வந்தது" என் றான்.

வேவுவீரர்கள் ஆற்றினருகே ஊர்ந்து சென்று அங்கிருந்த புதர்களில் பதுங்கிக் கொண்டார்கள். டிராவ்கின் கிராமச் சிறுவனைக் குதிரைகளுடன் ஊருக்குத் திருப்பியனுப்பி விட்டான்.

"நேராக இந்தச் சாலை வழியே செல். எல்லாக் குதிரைகளையும் நான் இப்போது உன் னிடம் கொடுக்கப் போவதில்லை. இரண்டு குதி

ரைகள் மட்டும் இன்னும் ஒருநாள் இருக்கட்டும். அவைகளையும் நாளைக்கு அனுப்பிவிடுகிறேன். அவைகளில்லாமல் செய்தியனுப்ப முடியாது.''

பிறகு டிராவ்கின் தன்னுடைய ஆட்களிருக்கு மிடத்திற்கு ஊர்ந்து சென்று ஜெர்மானியர் களின் அரண்களைச் சோதிக்க முயன்றான். அவர்களுடைய காப்பகழ் அண்மையில் தான் தோண்டப் பட்டிருந்தது; இன்னும் முடிவடைய வில்லை. அதன் வழியே சென்ற ஜெர்மானியர் களின் தோள் அளவிற்குக் கூட அது வரவில்லை. அதற்கு முன்னால் இரண்டு முட்கம்பி வரிசைகள் நீண்டிருந்தன. வேவுகாரர்களையும் பகைவர் படையையும் பிரித்தது நாணல் செறிந்த அந்தக் குறுகிய ஆறுதான். அரண்மேட்டின் பக்கமாக நின்று கொண்டு பைனாக்குலர் மூலமாக ஒரு ஜெர்மானியன் கிழக்குக் கரையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அந்த நாய்ப் பயலை இதோ ஹிட்லரின் அம்மாவின் இடத்திற்கு அனுப்பி விடுகிறேன்'' என்று முணுமுணுத்தான் மாமச்கின்.

''முட்டாள்தனமாகப் பேசாதே'' என்றான் டிராவ்கின்.

எதிரியின் அரண்களை நன்கு நிதானித்துப் பார்த்தான். ஆமாம், அதோ மங்கலாகத் தெரியும் பழுப்புநிற மண் பட்டை — அது இரண்டாவது காப்பகழ். ஜெர்மானியர்கள் அரணமைப் பதற்குத் தேர்ந்தெடுத்துள்ள அவ்விடம் மிகச் சிறந்தது. மேற்குக் கரை கிழக்குக் கரையை விட அதிக மேடாகவும் மரங்களடர்ந்தும் இருந்

தது. அதோ இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சிதறிய குக்கிராமக் குடிசைகளுக்கு அருகே இருந்தது மிக உயர்ந்த மேடு; வரைப்படத்தில் இது '161.3' என்று குறிக்கப்பட்டிருந்தது. காப்பகழ்களில் ஏராளமான ஜெர்மன் வீரர்கள் இருந்தனர். குக்கிராமத்தின் கிழக்குக் கோடியில் மோட்டார்ப் பீரங்கி ஒன்று நின்று கொண்டிருந்தது.

சட்டென டிராவ்கினுக்கு அனிக்கானவின் நினைவு வந்தது, ஆனால் அது கணப் போதில் தோன்றி மறையும் இனந்தெரியாத நினைவு— வழியில் ரயிலை விட்டிறங்கி இருளில் மறைந்து போன சக பயணியைப் பற்றி எழுமே, அது போல.

''தோழர் லெப்டினன்ட், அதோ பாருங்கள்! ஜெர்மன்காரர்கள் உலாவக் கிளம்பிவிட்டார்கள்'' என்று காதோடு கூறினான் மாமச்கின்.

சுமார் முப்பது ஜெர்மானியர் காட்டிலிருந்து கிளம்பி ஆற்றை நோக்கி வந்தனர். ஆற்றை அடைந்ததும் அவர்கள் தனித்தனியே விலகி, எதிர்க் கரையைப் பதற்றத்துடன் நோட்டமிட்டவாறே கலங்கிய நீரில் இறங்கினர்.

''எங்கே, இந்தப் பயல்களைக் கொஞ்சம் மிரட்டு, பார்ப்போம்'' என்று இலக்குத் தவறாது சுடுவதில் எல்லாரிலும் கைதேர்ந்தவனான மார்சென்கோவிடம் சொன்னான் டிராவ்கின்.

துணை எந்திரத் துப்பாக்கி சடசடவென்று நீண்ட நேரம் வெடித்தது. ஆற்றில் குண்டுகள் பட்ட இடமெல்லாம் சிறுசிறு நீரூற்றுகள்

பீறிட்டெழுந்தன. ஜெர்மானியர் தங்கள் கரை மேல் பாய்ந்தேறி, நெடுஞ்சாண் கிடையாகத் தரையில் விழுந்து, ஒரே பதைபதைப்புடன் அங் குமிங்கும் பார்த்த வண்ணம், வாத்துக்களைப் போலக் குவாக் குவாக்கென்று ஏதோதோ குழறிக்கொண்டு கிடந்தனர். காப்பகழ்களிலோ மிகுந்த கலவரமும் குழப்பமும் ஏற்பட்டன. அடித்தொண்டையிலிருந்து கிளம்பிய ஒரு கட்ட ளை ஒலித்தது; குண்டுகள் சீறிக்கொண்டு பறந் தன. ஊர்ப் புறத்தேயிருந்த மோட்டார்ப் பீரங்கி தடார் தடாரென்று மூன்று குண்டுகளை, ஒன் றன் பின் ஒன்றாகக் கக்கியது. கணப் போதில் ஜெர்மானிய பீரங்கிகள் முழங்கின. குறைந்தது பத்து பீரங்கிகளிருக்கும்; அவை அனைத்தும் சேர்ந்து மூன்று, நான்கு நிமிடங்கள் அக்குன் றைத் தாக்கித் தகர்த்தன. பீரங்கிக் குண்டுகள் சீறிவிழுந்து தரையைத் தொளைத்தன; அவை கிரீச்சிட்டுப் பாய்ந்த சத்தம் காட்டின் அமைதி யைக் குலைத்தது.

பீரங்கிகளின் முழக்கத்தைக் கேட்டு டிவிஷ னைச் சேர்ந்த முன்னணிப் பட்டாளியன் நின் றது. பட்டாளியன் தலைவன் காப்டன் முஷ்டக் கோவ், பேட்டரித் தலைவன் காப்டன் குரேவிச் ஆகியோர் குதிரைகள் மேல் கல்லாய்ச் சமைந்து விட்டனர்.

''பழக்கமில்லாமற் போனதால், தூக்கிவாரிப் போடுகிறது...'' என்றான் முஷ்டக்கோவ், ''ஒரு மாதத்திற்கு மேலாக இந்தச் சங்கீதத்தைக் கேட்கவில்லையல்லவா?..''

வெடிச் சத்தம் விட்டுவிட்டு வந்து கொண்டேயிருந்தது.

கணநேரம் நின்ற பிறகு போர்வீரர்கள் மீண்டும் முன்னேறினர். பாதையின் ஒரு திருப்பத்தில் தோல் மேலங்கி அணிந்த இளைஞன் ஒருவன் குதிரைகளை ஓட்டி வருவதைக் கண்ணுற்றனர். அவன் குதிரையின் முதுகின்மேல் கூனியிருந்தவாறே வெடிச் சத்தம் கேட்ட போதெல்லாம் தலையை நிமிர்த்திக் கொண்டிருந்தான்.

காப்டன் முஷ்டக்கோவ் அவனை அணுகி, ''நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்றார்.

அவ்வாலிபன் ஒரே பயத்துடன் குசுகுசுவென்று சொன்னான்: ''ஓடுங்கள், ஓடுங்கள், ஆற்றின் கரையில் அளவு கணக்கில்லாத ஜெர்மானியர். நமது சாரணர்களோ பன்னிரண்டே பேர் தான்...''

## அத்தியாயம் மூன்று

இராணுவக் குழு உக்குறியில் ''தற்காப்பிற்கு மாறுவது'' என்று குறிப்பிடப்படுவது பெரும்பாலும் பின்வருமாறு ஏற்படுகிறது:

பிரிவுப் படைகள் முன்னேறி வந்த கையோடு போரணி வகுத்து எதிரியின் அணி வரிசைகளைப் பிளந்து ஊடுருவ முயல்கின்றன. ஆனால் வீரர்கள் தொடர்ந்த தாக்குதலால் மிகவும் களைத்திருக்கின்றனர். பீரங்கிப்படையின் ஒரு பகுதிதான் வந்துள்ளது. குண்டு, வெடிமருந்து

குறைவாகவேயிருக்கின்றன. ஆகவே தாக்குதல் முயற்சி பின்னடைகிறது. காலாட்படை இப் போது செய்யக் கூடியதெல்லாம் ஈரத் தரையில் எதிரிகளின் குண்டுகளுக்கு நேரே, இளவேனிற் காலத்து வெண்பனி மழையில் பேசாது விழுந்து கிடப்பதே. ''ஊடுருவிச் செல்லுங்கள், வீரர் களைத் திரட்டி பாஸிஸ்டுகளை விரட்டியடியுங் கள்!'' என்றெல்லாம் மேலதிகாரிகள் ஆத்திர ஆத்திரமாக இடும் கட்டளைகளும் அவர்களது வசை மொழிகளும் ஸிக்னலர்களுக்குக் கேட்கும். இரண்டாவது தாக்குதலும் பயனற்றுப் போன பின், ''தோண்டி இருந்து கொள்க'' என்று உத் தரவு வரும்.

போர் என்பதே பூமியைத் தோண்டும் பெரிய வேலை ஆகிவிடும். இரவு நேரத்தில், ஜெர்மானி யருடைய பல நிற ராக்கெட்டுகளின் வெளிச் சத்தில், அவர்களது பீரங்கிக் குண்டுகள் தாக்கிய தால் தீப்பிடித்து எரியும் கிராமங்களின் ஒளியில் தோண்டுதல் நடக்கும். தரை எங்கும் பெரிய பொந்துகளும், சிறிய பொந்துகளும் நிறைந்த எலிவளையாக மாறிவிடும். சுற்றுப் புறக் காட்சி முழுதுமே மாறிப் போகும். நாணலும் புல்லும் செறிந்த நதியின் மரங்களடர்ந்த கரையானது பீரங்கிவெடிகளும் குண்டுச் சிதறல்களும் பாய்ந்து, தகர்க்கப்பட்டுள்ள ''முன்னணிப் பகுதியாக'' மாறி விடுகிறது. தாந்தே என்ற கவி வர்ணித் துள்ள நரகம் போலவே இதுவும் பல பகுதி களாகப் பிரிக்கப்பட்டு, நீண்ட பள்ளங்கள் இழையோடியிருக்கும் கட்டாந் தரையாகவும்,

விந்தைக் காற்றால் சூறையாடப்படும் வெற்றிட மாகவும் உருமாறும்.

முன்பு ஆற்றின் கரையாக இருந்த (இப்போது எவர்க்கும் உரிமையற்ற நிலம் என்று அழைக்கப் பட்ட) அவ்விடத்தில் இரவுக் காவல் புரி யும் வேவுவீரர்களுக்கு, ஜெர்மானிய ஸேப்பர் கள் தங்கள் முன்பகுதியைக் கெட்டிப்படுத்து வதற்காக மண்ணை வெட்டும் ஓசையையும் ஸேப்பர்களின் பேச்சுக் குரலையும் கேட்க முடி யும்.

எத்தகைய துன்பத்திலும் ஏதாவது இன்பம் இல்லாமல் போகாது. அது போலவே, வெகு நாளாக எதிர்பார்த்தும் வந்து சேராத பின் னணிப் படைகள் இப்பொழுது வரத் தொடங்கு கின்றன. கிரீச்சிடும் வண்டிகளில் குண்டுகள், தோட்டாக்கள், ரொட்டி, குதிரைத் தீனி, டப்பி யுணவு ஆகியவை யாவும் வருகின்றன. கடைசி யாக மருத்துவத் தொகுதி, இராணுவ அஞ்சல கம், பண்டசாலை, கால்நடை மருத்துவமனை ஆகியவையும் வந்து சேர்ந்து, பக்கத்திலுள்ள காடுகளில் ஆங்காங்கே இடம் அமைத்துக் கொள்கின்றன.

பீரங்கி ரெஜிமெண்டுங்கூட வருகின்றது. அதன் வரவு எல்லாருக்கும் மிகுந்த மகிழ்ச்சியைத் தரு கிறது. பீரங்கிகள் அகழ்களில் நிறுத்தப் படுகின் றன; எதிரி அகழ்கள், நிலவறைகள் மீது அவை குண்டுகளைப் பொழிந்து தகர்க்கும் போது நம் வீரர்கள் திருப்தியடைகின்றனர்.

முன்னணியில் இப்போது அமைதியான வாழ்க்

கை தொடங்குகிறது; இது ஈரமிகுந்த, சொத சொதப்பான, இழிந்த, அகழெலி வாழ்க்கை. இருந்த போதிலும் அதுவும் ஒரு வாழ்க்கைதானே. போர்க்கள அஞ்சலகம் வேலை செய்யத் தொடங்கி, முன்னேற்றம் நடந்த ஒரு மாதம் முழுவதும் குவிந்து கிடந்த பருத்த கடிதக் கட்டுகள் குளிரில் விரைத்த வீரர்களின் கைகளுக்கு வந்து சேரும் போதோ, இது இன்ப வாழ்க்கையாகவே ஆகிவிடுகிறது.

நீரின் அருகே, நாணல் கோரைகளுக்கிடையே இருந்த சிறிய கிடங்கில் அமர்ந்துகொண்டு தனக்குக் கிடைத்த கடிதங்களைப் படித்தான் டிராவ்கின். வோல்கா பிரதேசத்திலுள்ள சிற்றூரில் ஆசிரியையாக இருந்த அவனது தாயும், மாஸ்கோவிலிருந்த அவனது சகோதரியும் கடிதங்கள் எழுதியிருந்தனர். தாயின் கடிதங்களில் எல்லாம் பாசமும் பரிவும் பொங்கும்; உயிருக்குத் தீங்கு நேராமல் பார்த்துக் கொள் என்ற ஒரே ஒரு வேண்டுகோள்தான் சொல்லாமல் குறிப்பாக விளக்கப்பட்டிருக்கும். மாஸ்கோ இசைப் பள்ளியில் பிடில் கற்று வந்த அவனுடைய சகோதரி லேனா, தனது முன்னேற்றத்தைப் பற்றி எழுதியிருந்தாள். பாஹ், சய்கோவ்ஸ்கிய் ஆகிய இசையாசான்களைப் பற்றி மிகப்பழக்கமான முறையில் இறுமாப்புடன் குறிப்பிட்டிருந்தாள். "நான் முன்பெல்லாம் எண்ணியிருந்தது போல நமது சய்கோவ்ஸ்கிய் அவ்வளவு கடினமாக இல்லை. நமது பாஹ்ஹின் இசையை நாங்கள் இன்னும் முழங்கிக் கொண்டிருக்கிறோம்..." என்று இவ்

வாறாக. வாலிபப்பருவத்துச் சளசளப்பு, மின் சார விளக்குகளின் வெளிச்சம், பிடில் வாத்தி யங்களின் இதமான பளபளப்பு — இவையெல்லாம் இப்போது வெறும் நினைவாகப் போய்விட் டனவே! உண்மையாகச் சொல்லப் போனால் தானும், அதாவது டிராவ்கினும், தன்னைப் போன்ற பலரும், சாவின் நிழலில் — அதுதான் தொலைகிற தென்றால் — கொட்டும் மழையில் இங்கே குந்தியிருக்கும் போது மற்றவர்கள் நாட கத்திற்குப் போவதும், இசை கேட்பதும், காதல் புரிவதும், கல்வி கற்பதுமாக மகிழ்வுடன் வளைய வருகிறார்கள் என்பதை நினைக்கையில் டிராவ் கினுக்குச் சிறிது எரிச்சல் உண்டாயிற்று.

பைனாக்குலரைக் கண்களில் வைத்த வண்ணம் அவனருகே உட்கார்ந்திருந்த மார்சென்கோ, ''தோழர் லெப்டினன்ட்! கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது?'' என்று கேட்டான்.

''நாம் போரை முடித்து விரைவில் திரும்பு வோம் என்னும் நினைப்புடன் நாளையும் பொ ழுதையும் கழித்து வருகின்றனர்'' என்றான் டிராவ்கின்.

ஜெர்மானியர்களின் அரண்களைப் பார்த்துக் கொண்டிருந்த மார்சென்கோ தலையை அசைத் துச் சிரித்தான்.

''ஜெர்மானியர்கள் எதற்கோ தயார் செய் வது போல் தெரிகிறதே'' என்றான்.

டிராவ்கின் பைனாக்குலரை எடுத்துப் பார்த் தான். காட்டிற்கு வெளியே ஒரு பீரங்கியைச் சில ஜெர்மானியர்கள் உருட்டிக்கொண்டு வந்

தனர். உடனே தனது சகோதரி, ''நமது பாஹ்ஹின் இசைகளை முழங்கிக் கொண்டிருக்கிறோம்'' என்று எழுதியிருந்தது நினைவிற்கு வரவே, சிரித்துக் கொண்டான்.

குரேவிச்சுடன் டெலிபோனில் பேசினான்:

''குரேவிச், வெளியே பாருங்கள். சமீபத் தாக்குதலுக்காக பீரங்கியைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இடிந்த வீட்டிற்கு இரண்டு விரற்கடை வலப் புறமாக, தெரிகிறதா?''

''நன்றி, டிராவ்கின்'' என்று எப்பொழுதும் விழிப்பான அந்த பீரங்கிக்காரனின் குரல் தொலைவிலிருந்து வந்தது. ''நாங்கள் அவர்களுக்கு ஒரு 'பரிசை' அனுப்பிவைக்கிறோம்.''

மாமச்கின் ஈர நாணல் புதருக்கிடையே தலையை நீட்டி, ''தோழர் லெப்டினன்ட், உண்பதற்கு ஏதாவது வேண்டுமா?'' என்றான்.

பொரித்த வாத்தின் ஒரு பாதியைக் காகிதத்தில் சுற்றித் தட்டில் வைத்து, டிராவ்கினுக்காகவே கொண்டுவந்திருந்தான்.

மார்சென்கோவுடன் அதைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுது ''ராணுவப் பங்கீட்டில் இல்லாத'' சுவையுள்ள பலவகைப் பண்டங்களை மாமச்கின் கொஞ்ச காலமாக அடிக்கடி தனக்குக் கொடுத்து வருவது திடீரென்று டிராவ்கினுக்கு நினைவு வந்தது. மாமச்கினைக் கூப்பிட்டு இவையெல்லாம் எங்கிருந்து கிடைத்தன என்று கேட்க விரும்பினான். ஆனால் அந்தச் சமயத்தில் மார்சென்கோ ஜெர்மானியர்கள் பக்கம் அவன் கவனத்தை இழுக்கவே வாத்தைப்

பற்றி டிராவ்கின் மறந்து விட்டான்.

மாமச்கின் பாடு இப்போது கொண்டாட்டம்தான். இவ்வளவு முட்டையும், வெண்ணெயும், கோழியும், உப்பிட்ட வெள்ளரிக்காயும் அவனுக்கு எப்படித்தான் கிடைத்தன என்பது ஒருவருக்கும் புரியாத புதிராயிருந்தது. அதைப் பற்றிய கேள்விகளுக்கெல்லாம் நகைத்துக் கொண்டே, ''அதெல்லாம் ஒரு சாமர்த்தியம் அப்பா'' என்று பதில் சொல்லிவிடுவான்.

உண்மையில் நடந்ததென்னவோ அற்ப விஷயம், மொத்தத்தில் வெட்கக் கேடானது. மீதி இருந்த இரண்டு குதிரைகளையும் சொந்தக் காரர்களிடம் ஒப்படைக்கும்படி டிராவ்கின் மாமச்கினை அனுப்பியிருந்தான். அவனோ அவ்வாறு செய்வதற்குப்பதிலாக அருகேயிருந்த பண்ணையில் தனியே வாழ்ந்து வந்த கிழவனுக்கு அவைகளைத் தற்காலிகமாக ''வாடகைக்கு'' விட்டுவைத்தான். அதற்குப் பணம் வாங்கிக் கொள்ளவில்லை; ஆனால் அக்கிழவன் தனக்கு வேண்டிய சாப்பாட்டுப் பொருள்களைத் தர வேண்டுமென்று ஒப்பந்தம் பேசிக்கொண்டான். அப்பொழுது உழுது விதைக்கும் காலமாயிருந்த படியால் கிழவனும் தாராளமாக அவனுக்கு வேண்டியவைகளைக் கொடுத்து வந்தான்.

புதிதாய் வந்துள்ள இளஞ்சாரணர் மாமச்கினிடம் சிறந்த மதிப்பு வைத்திருந்தனர். அவனது நல்ல வாய்ப்பையும் சாமர்த்தியத்தையும் கண்டு வியந்தனர். பியக்டீஸ்தவ் என்றும் அழகிய வாலிபன்தான் மிக விசுவாசமாக அவனைப் பின்பற்றி

யவன், ஒவ்வொன்றிலும் மாமச்கினைப் போல வே தானும் இருப்பதற்கு முயன்றான். அவனைப் போலவே தானும் அரும்பு மீசை வைத்துக் கொண்டான். மாலை நேரங்களில் மாமச்கின் புதிதாய் வந்துள்ள இவர்களுக்குத் தன்னுடைய தொகுதியைப் பற்றிய செய்திகளைச் சிறிது சிறிதாகச் சொல்லி வருவான். அப்பொழுது தன் சாதனைகளைப் பற்றிப் பிரமாதப்படுத்திக் கொள்வான். அனிக்கானவையும் சிறிது தய வோடு புகழுவான் என்பது உண்மையே. ஏனெ னில் இப்பொழுது அனிக்கானவ் வரலாற்றுள் புதைந்து விட்டான். அவனால் இனி மாமச்கினு டைய புகழை மங்கச் செய்ய இயலாது.

இச்செய்திகளைக் கேட்டுவரும் சாரணர்கள் அடிக்கடி அவனது மதியற்ற சொற்களையும், முரண்பாடுகளையும் கண்டு கொள்வார்கள். ஆனால் அதற்கெல்லாம் அவன் கலங்குகிற ஆள் இல்லை. டிராவ்கின் முன்னால்தான் அவனது வாய்வீச்சு சற்றுத் தணியும். ஏனெனில் பொய் சொல்வது டிராவ்கினுக்குக் கட்டோடு பிடிக் காது. சில சமயம் மாலையில், ஓய்ந்த நேரத்தில், டிராவ்கினே அவர்களுக்குத் தன்னுடைய தொகு தியின் வரலாற்றிலிருந்து ஏதாவது சில செய்தி களைச் சொல்லுவான்; அவை இப்புதிய வீரர் களுக்குச் செவிக்கு விருந்தாகவே இருந்தன.

டிராவ்கினுடைய அடக்கம் அவர்களை வியப் பில் ஆழ்த்தியது. அனிக்கானவைப் பற்றியும், சண்டையில் கொல்லப்பட்ட சார்ஜென்ட் மே ஜர் பிலோவைப் பற்றியும், மார்சென்கோவைப்

பற்றியும், மாமச்கினைப் பற்றியும்தான் அவன் பேசினானே தவிர, தன்னைப் பற்றிப் பேச வேயில்லை. தான் எதிலும் பங்கு கொள்ளாது, வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தவன் போல இருந்தது அவன் பேச்சு.

ஒவ்வொரு செய்தியையும் முடிக்கும் பொழுது, ''நீங்கள் அனிக்கானவைப் போல் நடப்பதற்குக் கற்றுக்கொள்ள வேண்டும்'' என்றே அவன் சொல் வான். அப்பொழுது மூலையிலிருந்து கொண்டு மாமச்கின் பொறாமையால் பொருமிக் கொண் டிருப்பான்.

அப்படிப்பட்ட மாலை நேரங்களில் இளைஞன் யூரா கோலுப் என்பவன் லெப்டினன்டின் கால் பக்கமாக உட்கார்ந்துகொள்வான். வணக்கம் நிறைந்த கண்களுடன் அவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பான். மாமச்கின் பறை சாற்றிக்கொள்ளும் வீர சாகசங்களை அவன் என்னதான் வியந்த போதிலும், அடக்கம் மிகுந்த இளம் லெப்டினன்டையே தனக்கு மாதி ரியாகக் கொண்டிருந்தான்.

மாமச்கின்கூட இம்மாலை நேரங்களைப் பெரி தும் விரும்பினான் என்பதைக் குறிப்பிட வேண் டும். சாதாரணமாக வாயே திறவாத லெப்டி னன்ட் இந்த அபூர்வமான நேரங்களில் தான், அழகு சொட்டப் பேசுவான். அவனுக்கு ஏராள மான கதைகள் தெரியும்; சில வேளைகளில் பெரிய விஞ்ஞானிகள், பெரிய தளகர்த்தர்கள் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளைப் பற்றி யும் அவன் பேசினான். மாமச்கினுக்கோ இவை

களை யெல்லாம் அறிந்துகொள்ள வேண்டுமென் பதில் பெருத்த ஆவல்.

எவருக்கும் தெரியாத தனது இரகசியமான இடத்திலிருந்து டிராவ்கினுக்கு அவன் உணவுப் பொருள்கள் கொண்டு வந்து கொடுத்தான்; ஆனால் அது லெப்டினன்டின் தயவைப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் அல்ல. மனிதர் களின் தன்மையைப் பற்றி நன்கு அறிந்துள்ள வன் மாமச்கின்; அப்படிப்பட்ட வழிகளால் தன்னுடைய லெப்டினன்டினிடமிருந்து எந்தச் சலுகைகளையும் பெற்றுக் கொள்ள முடியாது என்பது அவனுக்கு நன்றாய்த் தெரியும். தான் அருந்துவது இன்னது என்ற சிந்தனை இல்லாம லேயே வாத்துகள் முதலிய இனிய உணவுகளை உண்டு வந்தான் டிராவ்கின். மாமச்கின் தனது மேலதிகாரியை இவ்வாறு பாராட்டி வந்ததற் குக் காரணம் அவனிடமிருந்த பிரியம் தான்; தன்னிடமில்லாத அவனது உயர்ந்த பண்புகளுக் காகத் தான், அதாவது சிறிதும் தன்னலமற் றிருத்தல், கடமையில் கண்ணுங் கருத்துமா யிருத்தல் என்ற இவ்வுயரிய குணங்களுக்காகத் தான் அவனிடம் அவ்வளவு அன்பு கொண்டிருந் தான் மாமச்கின். ஒவ்வொருவருக்கும் லெப்டி னன்ட் மிகத்துல்லியமாக வோத்கா அளந்து கொடுப்பதும், மற்றவர்களையும் விடத் தனக்குக் குறைவாக எடுத்துக்கொள்வதும் அவனுக்குப் பெரிதும் வியப்பாக இருந்தது. எல்லாரையும் விட லெப்டினன்ட் குறைவாகவே ஓய்வெடுத்துக் கொண்டான். இது மாமச்கினுக்குப் புரியவேயில்

லை. லெப்டினன்ட் செய்வது சரியே என்று அவனுக்குப் பட்டது. ஆனால் தான் அவனது இடத்தில் இருந்தால், வேறு விதமாகவே நடந்து கொள்வான் என்பதும் அவனுக்கு நன்றாய்த் தெரியும்.

குதிரைகளுக்கு வாடகையாகத் தான் பெற்று வந்த வாத்துக்கள், கோழிகள் முதலியவற்றை மாமச்கின் ''குதிரையிறைச்சி'' என்று கூறி வந்தான். வழக்கம் போல் ''குதிரையிறைச்சியில்'' உரிய பங்கை லெப்டினன்டிற்குத் தந்த பிறகு மாமச்கின் சாரணர்கள் தங்கியிருந்த களஞ்சிய அறையை நோக்கிச் சென்றான். வழியில் கர்னல் ஸெர்பிசேன்கோவுக்கு எதிர்ப்பட இருந்தவன் அவர் பார்வைக்குத் தப்பி ஒதுங்கிக் கொண்டான். தனிப்பச்சை நிறக் கஸாக் தொப்பியும், இளம் பழுப்பு நிறக் காலணியும் அணிந்திருந்த படியால், அவன் எப்பொழுதும் டிவிஷன் தலைவரின் கண்ணில் படாமல் இருக்கவே முயன்றான். ஏனென்றால் வீரர்கள் வழக்கமான ராணுவ உடையைத் தவிர வேறுவிதமான மாற்று உடை அணிவதைக் காணவே அவருக்குப் பிடிக்காது.

கர்னலின் அருகே, ஜூனியர் சார்ஜென்டிற்குரிய அடையாளப்பட்டைகள் கொண்ட ராணுவ உடையில் ஒரு பெண் நின்றாள். அவளது பொன்னிறக் கூந்தல் ஆண்களின் தலைமுடியைப் போல் குட்டையாகக் கத்தரிக்கப்பட்டிருந்தது. பட்டாளத்திலுள்ள ஒவ்வொரு பெண்ணையும் அறிந்திருந்த மாமச்கின் இவளை இதற்கு

முன் எப்பொழுதும் பார்த்ததில்லை. டிவிஷன் தலைவர் அன்பு கனிந்த புன்னகையுடன் அவளோடு அளவளாவிக் கொண்டிருந்தார்.

கர்னல் ஸெர்பிசேன்கோ பெண்களிடம் ஆதரவும் பரிவும் கொண்டவர். போர்முனை அவர்களுக்குரிய இடமல்ல என்பது அவரது உள்ளக் கிடக்கை. எனினும் அதற்காக மற்றும் பலரைப் போல் அவர் அவர்களைப் பழிப்பதில்லை. போரின் துன்பங்களை நன்குணர்ந்த, அநுபவம் வாய்ந்த போர்வீரர் ஆகையால் அவர்களை இரக்கத்துடன் நடத்திவந்தார்.

''நல்லது, இங்கு இருப்பது உனக்குப் பிடித்திருக்கிறதா?'' என்று கேட்டார் கர்னல்.

''எல்லாம் நன்றாகவே இருக்கிறது — எங்கும் உள்ளது போல் தான் இங்கும்'' என்று அப்பெண் கூச்சத்துடன் பதிலளித்தாள்.

''அப்படியா நினைக்கிறாய்? இல்லை, எனது அருமைப் பெண்ணே! எல்லா இடங்களிலும் போல இல்லை இவ்விடத்தில், என்னுடைய படையில். இது மிகக் கீர்த்திவாய்ந்த டிவிஷன், செங்கொடிப் பட்டாளம்! இங்கே ஒருவரும் உன்னைத் தொந்தரவு செய்வதில்லையே?''

''இல்லை, தோழர் கர்னல்.''

''நல்லது, யாராவது அவ்வாறு செய்தால் நேராக என்னிடம் வந்து விடு. நம் படையில் பெண்கள் அதிகம் கிடையாது; அவர்களுக்கு எவ்விதத் தொந்தரவும் இருக்கக் கூடாது. ஆமாம், உன் சேதி என்ன? அதிக சல்லாபம் உண்டா?''

''சல்லாபமா? எதற்காக?'' என்று அப்பெண் சிரித்தாள்.

''இந்தா, என்னை ஏமாற்றப் பார்க்காதே. எனக்கு எல்லாம் தெரியும். நீ பல தடவைகள் காப்டன் பராஷ்கினுடன் இருந்ததைப் பார்த்திருக்கிறேன்.'' திடீரென்று அவருடைய குரலில் கண்டிப்பு தொனித்தது: ''நீ கவனமாக இருந்து கொள். ஆண்கள் மிகவும் கபடமுள்ளவர்கள். அவர்கள் சொல்வதெல்லாம் எப்பொழுதும் உண்மையல்ல.''

பிறகு அவளிடம் விடை பெற்றுக்கொண்டு, அவர் தமது குடிசையை நோக்கிச் சென்றார். ஒரு மரத்தினடியில் அப்பெண் நின்று கொண்டிருந்தாள்.

அடுத்த நிமிடம் மாமச்கின் அவள் முன்வந்து நின்றான்.

''பணிவுடன் வணங்குகிறேன், குமாரியே!''

அதிசயத்துடன் அவனை மேலும் கீழும் நோக்கினாள்.

''சாரணர் சார்ஜென்ட் மாமச்கின்!'' என்று தன் குதிகள் நெருங்கி ஒலிக்கக் கூறினான்.

நங்கையும் புன்னகை பூத்தாள்.

''இதற்கு முன் உங்களைப் பார்த்ததில்லை; வேறொரு படைத் தொகுதியிலிருந்து வந்திருக்கின்றீர்களா? ஆகாயத்திலிருந்துதான் நேராகக் குதித்திருக்கிறீர்களா?'' என்றான் மாமச்கின்.

அவள் சிரித்துக்கொண்டு, தான் வேறொரு டிவிஷனிலிருந்து அங்கு மாற்றப்பட்டிருப்பதை விளக்கிக் கூறினாள்.

''அங்குள்ள சாரணர்களிடம் சிநேகமாய்த் தானே இருந்தீர்கள்?''

''நான் பின்னணித் தலைமைச் செயலகத்தில் வேலை பார்த்தேன்.''

பிறகு இருவரும் அருகருகே நடந்து சென்றனர். மாமச்கின் சிறந்த துறைமுகப் பாணியில் பல வேடிக்கைப் பேச்சுகள் பேசவும், அவள் கலகலவென்று சிரிக்கவும், இருவரும் போய்க் கொண்டிருந்தனர். அதேசமயம் அவளை எங்கே கூட்டிச் செல்வது என்பதைத் தனக்குள் தீர்மானித்துக் கொண்டுமிருந்தான்.

''காத்யா, நான் சொல்லும் புத்திமதியைக் கேட்டுக்கொள்ளுங்கள்'' — அதற்குள் அவளுடைய பெயர் அவனுக்குத் தெரிந்து விட்டது. ''எப்பொழுதும் வேவுகாரர்களுடன் பழக்கம் செய்து கொள்ளுங்கள். பெண்களுக்கு மிகப் பிரியமான மனிதர்கள் யார்? நிச்சயமாக வேவுகாரர்கள் தான். சுவையான உணவும் பானமும் யாருக்குக் கிடைக்கிறது? வேவுகாரர்களுக்குத்தான். எதற்கும் துணிந்தவர்கள் யார்? வேவுகாரர்கள் தான் என்பதில் சந்தேகமேயில்லை. புரிகின்றதா? வேவுகாரர்களில் ஒருவரைப் பற்றியும் உங்களுக்கு மெய்யாகவே தெரியாதோ?'' என்று விளையாட்டுச் சிரிப்புடன் மேலும் கூறினான். ''காப்டன் பராஷ்கின் என்ற ஒருவர் இருக்கிறாரே, அவர் விஷயம் என்ன?''

''அது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று அவள் கேட்டாள்.

''வேவுகாரர்களுக்குத் தெரியாததே ஒன்றும்

இல்லை'' என்றான் மாமச்கின்.

அவனுடன் காட்டிற்குள் உலாவச் செல்வதற்கு அவள் மறுத்துவிட்டாள், எனினும் என்றாவது ஒரு நாள் அவனை வந்து பார்ப்பதாக வாக்களித்துச் சென்றாள். அவள் மறுத்ததைக் குறித்து முதலில் மாமச்கின் சிறிது கோபங் கொண்ட போதிலும் விரைவில் இழந்த உற்சாகத்தை மீண்டும் வருவித்துக் கொண்டான். இருவரும் நேச முறையில் பிரிந்து சென்றார்கள்.

களஞ்சிய அறையிலிருந்தவர்கள், வேவு நடவடிக்கை தொடங்கு முன்பு எப்போதும் நடக்கும் மும்முரமான தயாரிப்புகளில் பரபரப்பின்றி முனைந்திருந்தார்கள். உள்ளே நுழைந்த மாமச்கின் அவைகளைக் கண்டதும், அன்றிரவு மார் சென்கோ தலைமையில் ஆறு பேர்கள் கொண்ட ஒரு குழுபுறப்படுவதற்கு இருந்தது என்பதை நினைவு படுத்திக்கொண்டான்.

முன்னணிப் பகுதியிலிருந்து அப்பொழுதுதான் மார்சென்கோ திரும்பியிருந்தான். அவ்வறையின் ஒரு மூலையில் துருப்பிடித்த கதிரடிக்கும் எந்திரம் ஒன்றின் பக்கத்தில் உட்கார்ந்து, அவன் கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். அவனுடன் செல்ல வேண்டியவர்கள் தங்களுக்குரிய உருமாற்றுடைகளை அணிந்துகொண்டும், எறி குண்டுகளை எடுத்து வைத்துக்கொண்டு மிருந்தார்கள். விசித்திரமான உறுதிப்பாட்டுடன் இங்குமங்கும் போய்வந்து கொண்டிருந்த அவர்கள் இன்னும் நேரமாகவில்லையா என்று கேட்பது

போன்ற குறிப்போடு மார்சென்கோவை இடை யிடையே நோக்கினர்.

கார்கவிலுள்ள தனது மனைவிக்கும், பெற் றோர்களுக்கும் கடிதம் எழுதிக் கொண்டிருந் தான் மார்சென்கோ. தான் உயிரோடும் உடல் நலத்தோடும் இருப்பதாக அவர்களுக்குத் தெரி வித்தான். போர் அரங்கில் வேறொரு பெண் ணைத் தான் கண்டுவிட்டதாகத் தன் மனைவி எண்ணியிருப்பது தவறு என்றும், அவ்வாறான செய்திக்கே இடமில்லையென்றும் குறிப்பிட் டான். எப்பொழுதும் போல அவன் அடிக்கடி வீட்டிற்குக் கடிதம் அனுப்பிக் கொண்டிருப் பதாயும், ஆனால் தாக்குதலின் காரணமாகத் தபால் வரத் தாமதமாயிற்று என்றும் கூறியிருந் தான். மிகச் சாதாரணமான செய்திகள். ஆயி னும் மார்சென்கோவின் மனோநிலை சாதா ரணமானதாயில்லை. ஒவ்வொரு சொல்லிலும் இதய பூர்வமான உணர்ச்சி பொதிந்திருந்தது. கடிதம் எழுதி முடித்தவுடன் அவன் உணர்ச்சி வசப்பட்டிருந்தான் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. காவல்வீரனிடம் கடிதத்தைக் கொ டுத்துவிட்டு, அமைதியாக, ''நல்லது, தம்பிமாரே, புறப்படுவோம். எல்லாம் தயாராய் விட்டதா?'' என்றான்.

தன்னுடன் செல்லும் வீரர்களை வரிசையாக நிறுத்தி அவர்களை எச்சரிக்கையுடன் கவனித் தான்.

''ஸேப்பர்கள் எங்கே? இன்னும் வரவில்லை யா?'' என்று கேட்டான்.

''வரவாவது, இல்லையாவது? என்னப்பா சொல்லுகிறாய்?'' என்று மூலையிலிருந்த வைக்கோல் குவியலிலிருந்து அமைதியும் மகிழ்வும் நிறைந்த குரல் கேட்டது. ''ஸேப்பர்கள் எல்லாரும் இங்கு தயாராயிருக்கிறோம்.''

வைக்கோலால் மூடப்பட்டிருந்த இரு ஸேப்பர்கள் முன்னே வந்தனர். வேவு குழுவுடன் செல்வதற்கு புகோர்கோவ் அனுப்பியிருந்த வீரர்கள் அவர்கள்.

''நான் தான் முதல்வன்'' என்று அதே குரல் மேலும் கூறியது. அக்குரலுக்குரியவன் சுமார் இருபது வயதுள்ள போர்வீரன்; கட்டையான பருத்த உருவங் கொண்டவன்.

''உன் பெயரென்ன?'' என்று அவனை ஆதரவுடன் பார்த்துக்கொண்டு கேட்டான் மார்சென்கோ.

''மக்ஸீமென்கோ — உன்னைப் போலவே நானும் ஓர் உக்ரேனியன்.''

''எவ்வூரிலிருந்து?'' என்று கேட்கும் போதே மார்சென்கோவின் வெண்ணிறப் பற்கள் புன்சிரிப்பில் பிரகாசித்தன.

''கிரிமென்சூக்.''

''ஆமாம், எங்கள் ஊரிலிருந்து அதிகத் தொலைவிலில்லை அது... உங்களுக்குரிய வேலை என்ன தெரியுமா?''

''தெரியும்'' என்று மக்ஸீமென்கோ துடியாகப் பதிலளித்தான். ''ஜெர்மானியர்களின் சுரங்க வெடிகளை அகற்றுவது, முட்கம்பியை வெட்டிவிட்டு, இடைவெளி வழியே நீங்கள் உட்புக

உதவுவது, அப்புறம் திரும்பி நாளைக் காலை நடக்கவிருக்கும் கம்யூனிஸ்ட் இளைஞர் சங்கக் கூட்டத்திற்கு நேரம் தப்பாமல் வந்து விடுவது — நான் சங்க அமைப்பாளர்களில் ஒருவன். அவ்வளவு தான் எங்கள் வேலை.''

''அருமை, அருமை'' என்று மார்சென்கோ சிரித்தான். ''இப்பொழுது இன்னொரு விஷயத்தில் நாம் நெருங்கியவர்களாகின்றோம். நானும் உன்னைப்போல சங்க அமைப்பாளன் தான். சரி, நாம் புறப்படுவோம்.''

டிராவ்கின் காத்துக் கொண்டிருந்த முன்னணி இடங்களுக்குச் செல்லும் சாலையில் இக் கூட்டத்தினர் ஒற்றை வரிசையில் சென்றனர்.

## அத்தியாயம் நான்கு

மார்சென்கோ தன்னுடைய வீரர்களுடன் வேவு நடவடிக்கைக்குச் சென்ற ஐந்தாம் நாளில் மாமச்கின் மறுபடியும் காத்யாவைக் கண்டான். வேவுகாரர்களின் பாசறைக்கு அவளை அழைத்தான். அங்கு வீட்டில் தயாரித்துள்ள சாராயம் ஒரு புட்டி நிறைய இரகசியமாய் வைத்திருந்தான்.

களஞ்சிய அறையின் ஒரு மூலையில் வெள்ளைத் துணியை விரித்து, பலவகை ருசிகரமான சிற்றுண்டிகளை வைத்து, காத்யாவுக்கு விருந்தளிக்க ஏற்பாடு செய்தான். பியக்டீஸ்தவ் முதலிய நண்பர்களையும் தங்களோடு விருந்துண்ண அழைத்து விட்டுத் தான் காத்யாவினருகில் வைக்கோலின்

மேல் உட்கார்ந்துகொண்டான்.

விருந்து மும்முரமாக நடைபெற்றுக் கொண் டிருந்த போது டிராவ்கின் உள்ளே நுழைந் தான். அவன் வருகையை யாரும் எதிர்பார்க்க வில்லை.

அந்தச் சம்பவம் சிறிது சந்தடியுண்டாக்கி யது. சாராயப் புட்டியையும் கோப்பையையும் மாமச்கின் அவசரமாய் மறைத்து வைத்தான். தனது மேலதிகாரிக்குத் தான் அஞ்சுவதைக் காத் யா பார்க்க நேரிட்டதைப் பற்றி மாமச்கின் மகிழ்ச்சி அடையவில்லை. எனினும் டிராவ்கின் தன்னைக் கண்டிக்கும்படி நேர்ந்திருக்குமேயா னால், அது இன்னும் கேவலமாய்ப் போயிருக் கும் என்பதும் அவனுக்குத் தெரியும்.

மூலையில் உட்கார்ந்திருந்த கூட்டத்தார்களை யும் புதிதாய் வந்துள்ள நங்கையையும் கேள்விக் குறியுடன் ஒரு தரம் நோக்கினான் டிராவ்கின். வீரர்களெல்லாரும் அவனுக்கு மரியாதை செ லுத்தும் முறையில் நேராக நிமிர்ந்து நின்றார் கள். ஆனால் அவன் அவர்களை இயல்பாக இருக் கும்படி குறித்துவிட்டு, அமைதியாகச் சென்று தொலைவிலுள்ள வேறொரு மூலையில் கிடந்த தனது வைக்கோற் படுக்கையில் படுத்துக் கொண்டான். மூன்று நாள், இரவும் பகலும், அவனுக்குத் தூக்கமேயில்லை. மார்சென்கோ திரும்பி வர வேண்டியதற்குப் பிறகும் இரண்டு இரவுகள் கழிந்துவிட்டன. பள்ளத்தில் தூக் கத்துடன் போராடிக் கொண்டு அவன் காத் திருந்தது வீணாயிற்று. இரு ஸேப்பர்கள் கூடத்

திரும்பி வராதது விநோதமாயும் பயத்தைக் கொடுக்கக் கூடியதாயுமிருந்தது. வேவுக் குழு சுரங்கவெடிப் பகுதியுள் சென்றதும் அவ்விருவர் திரும்பி வந்திருக்க வேண்டும். ஆனால் அந்தக் கூட்டமுழுதும் கும்மிருட்டுள் மறைந்து போய் விட்டது; மழை அவர்களின் அடிச்சுவடுகளையும் கழுவி அகற்றிவிட்டது.

டிராவ்கின் கம்பளியில் படுத்து நிம்மதியின்றிக் கண் அயர்ந்தான்.

அடங்கிக்கிடந்த வேவுகாரர்கள் மீண்டும் ஒரு தடவை குடித்தார்கள்.

''அவர் தான் உங்கள் தலைவரா?'' என்று காத்யா மெதுவாய்க் கேட்டாள். ''எவ்வளவு அடக்கம், இவ்வளவு இளமையில்!''

டிராவ்கின் தூக்கத்தில் புரண்டு, திடீரென்று உரக்கப் பேசலானான்:

''ஏன் திரும்பி வருவதற்கு இவ்வளவு நேரம்? விசித்திரமான பேர்வழியாய் இருக்கிறாயே! ஸேப் பர்களும் இன்னும் வரவில்லை. நாங்கள் சய்கோவ் ஸ்கியின் இசையைக் கேட்டுக் கொண்டிருந்தோம். நீ என்னடா என்றால் இவ்வளவு நேரமும் எங் கேயோ போய் விட்டாயே. விந்தையான ஆளப் பா நீ.''

தூக்கத்தில் புலம்புகிறவனைப் போல அல்லா மல், சாதாரணமான குரலில் அவன் பேசினான். அது இயற்கைக்கு மாறாகத் தோன்றியது. அங் கிருந்த வீரர்கள் கலக்கமடைந்து ஒருவர் பின் ஒருவராக அவ்விடத்தை விட்டு அகன்றனர். கடைசியில் வெள்ளைத் துணியினருகே மாமச்

கின் மட்டும் தனியே இருந்தான்.

காத்யா சத்தமின்றிக் களஞ்சியத்தின் குறுக்கே சென்று லெப்டினன்டைக் குனிந்து பார்த்தாள். தூங்கும் குழந்தையின் கண்களைப் போல அவனது கண்கள் பாதி மூடியிருந்தன. மங்கியிருந்த அவனுடைய காக்கிச் சட்டை கழுத்தில் திறந்திருந்தது. கடுந் துயரத்தின் குறி முகத்தில் பதிந்திருந்தது.

''எவ்வளவு அழகு!'' என்று அப்பெண் தணிந்த குரலில் சொன்னாள்.

''அவனை எழுப்பிவிடாதே'' என்று மாமச்கின் வெடுக்கென்று கூறினான். அவள் அதற்குக் கோபப்படவில்லை. ஏனென்றால் தூங்கிக் கொண்டிருக்கும் மனிதனிடத்தில் தன்னைப் போலவே அவன் காட்டிய பரிவை அவள் உணர்ந்து கொண்டாள். கடுகடுப்பான முகத்துடன் மாமச்கின் ''எங்கள் தலைவர் மிகவும் வேதனையுடனிருக்கிறார்'' என்று விளக்கினான்.

ஆமாம், மாலை விருந்து முழுதும் பாழாய் விட்டது. அவர்களெல்லாருக்கும் அது தெரிந்தது.

ஆயினும் களஞ்சிய அறையை விட்டு வெளியே சென்ற போது காத்யாவின் மனத்தில் இனந் தெரியாத கிளர்ச்சி — துயரந் தோய்ந்த, ஆழ்ந்த உணர்ச்சி பொங்கியது. இளவேனில் காலத்தில் காட்டினூடே மெதுவாக நடந்து செல்கையில் அவளுக்குத் தன் மீதே வியப்புண்டாயிற்று. தனது புதிய உணர்ச்சிகளை நினைத்து வியப்பும் சஞ்சலமும் அடையத் தொடங்கினாள். அவளது

இதயத்தைத் தொட்டு, இவ்வளவு கனிவும் ஏற்றமும் பொருந்திய ஏக்கத்தை அவள் உள்ளத்திலே நிறைத்தது எது? லெப்டினன்டின் குழந்தை முகம் மறுபடியும் அவள் கண்ணெதிரில் நின்றது. ஒரு வேளை அம்முகத்தில் அவள் தன் சாயலையே கண்டிருக்கலாம்; சிறு நகரில் பிறந்து வளர்ந்து, போர் முனைக்கு வந்து, வாழ்க்கையில் காணக் கூடிய கொடிதிலும் கொடிய குரூரத்தை நேருக்கு நேர் பார்த்த தனது பெண் உள்ளத்தின் ஆழத்தில் புதைந்திருந்த தீராத வேதனையின் அறிகுறி அம்முகத்தில் அவளுக்குத் தென்பட்டது போலும்.

வேவுகாரர்களின் இருப்பிடத்திற்குக் காத்யா முன்னையும் விட அடிக்கடி வந்து போகத் தொடங்கினாள். விரைவில் மாமச்கினும் மற்றவர்களும் அவளது உணர்ச்சிகளை அறிந்து கொண்டனர். வாழ்க்கை விஷயங்களில், தன்னையே லெப்டினன்டின் பாதுகாப்பாளனாகக் கருதி வந்த மாமச்கின் இதைக் குறித்து மகிழ்ச்சியடைந்தான். காத்யாவுடன் சிறிது சல்லாபம் செய்வது லெப்டினன்டிற்குத் துன்பம் நிறைந்த எண்ணங்களினின்றும் ஓரளவு விடுதலையளிக்கும் என்று மாமச்கின் கருதினான். மார்சென்கோவும் அவனுடைய வேவுக்கூட்டத்தாரும் அழிந்துவிட்டனர் என்பது தெளிவான பிறகு லெப்டினன்ட் மிகவும் மனம் நொந்து போயிருந்தான்.

காத்யாவைத் தங்களிருப்பிடத்திற்குச் சாரண வீரர்கள் ஒருவரோடொருவர் போட்டிபோட்டுக் கொண்டு அழைத்து வந்தனர். லெப்டினன்டைப்

பற்றிய எல்லாத் தகவல்களையும் அவளுக்குச் சொல்வார்கள். அவளுடைய தொகுதிக்குச் சென்று. ''முன்னணிப் பகுதியிலிருந்து எங்கள் லெப்டினன்ட் இன்று திரும்பி வந்திருக்கிறார்'' என்று தெரிவிப்பார்கள். சுருங்கக் கூறின், காத்யா, டிராவ்கின் ஆகிய இருவருக்கும் நட்பு ஏற்படுத்துவதற்குத் தங்களாலானவற்றை அவர்கள் அனைவரும் செய்து வந்தார்கள். இந்தத் தந்திரமான முன்னேற்பாடுகளை யெல்லாம் சிறிதும் அறியாதிருந்தவன் டிராவ்கின் ஒருவனே.

ஒரு நாள் தன் இருப்பிடத்திற்கு வந்ததும், தன்னுடைய மூலை நீர் சுவறாத் துணியொன்றால் திரையிடப்பட்டிருப்பதைக் கண்டான் டிராவ்கின். அதன் பின்னே கம்பளியால் மூடப்பட்ட வைக்கோல் குவியலுக்குப் பதிலாகக் கட்டில் மேல் நல்ல படுக்கை விரிக்கப்பட்டிருப்பதையும் படுக்கையினருகே நறு மலர்கள் நிரம்பிய பூப்படிக்கத்துடன் சிறிய மேசை இருப்பதையும் பார்த்தான்.

''இவைகளெல்லாம் என்ன?'' என்று டிராவ்கின் கேட்டான்.

''விசேஷம் ஒன்றுமில்லை'' என்று எதுவுமறியாதவனைப் போல பதிலளித்தான் பிராஜ்னிகவ். ''செய்தித் தொகுதியைச் சேர்ந்த காத்யாதான் இதை உங்களுக்காகச் செய்திருக்கிறாள், தோழர் லெப்டினன்ட்!''

டிராவ்கின் முகம் சிவந்தது.

''நீங்கள் ஏன் அயலாரை நம்மிடத்திற்குள் வர அனுமதிக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

பிராஜ்னிகவ் திருதிரு வென்று விழித்துக் கொண்டு பதில் பேசாமலிருந்தான். இதைப் பற்றி மாமச்கின் கேள்விப்பட்ட பொழுது ஆச் சரியத்துடன் கைகளை விரித்தான்.

''இப்படியும் ஒரு மனிதனா? ஜெர்மானியர் களைத் தவிர வேறு எனதப் பற்றியும் நினைக்க வே மாட்டான் போலத் தெரிகிறதே! எப்பொ ழுதும் அவர்களின் பாதுகாப்பு அரண்களைப் பற்றிய படங்களைப் போடுவதும், தேசபடத்தைப் பார்ப்பதும் தான் வேலை. முன்னணிப் பகுதிக்கு நாள் தவறினாலும் போகத் தவறுவதில்லை...''

டிராவ்கின் அடக்கமாயிருப்பதையும், அவனது இளமை நாணத்தையும் கண்டு காத்யா முதலில் ஊக்கமிழந்தாள். இது வரை எவனும் அவளிடம் இப்படி - நடந்து கொண்டதேயில்லை. எங்கு சென்றாலும் அவள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள் ளப்படுவதுதான் வழக்கம். அவ்விதம் எல்லோரும் தன்னிடம் பிரியஞ் செலுத்தியதற்குக் காரணம் தனது தனிக் கவர்ச்சியினாலல்ல; அங்கு ஏராள மான ஆண்களுக்கிடையே மிகச்சில பெண்களே இருந்தது தான் என்பதும் அவளுக்குத் தெரியாத தல்ல.

பிறகு திடீரென்று அவளுக்கு இரு மடங்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. அவள் காதலித்தவன் எல்லாரையும் போல் சாதாரண மனிதன் அல்ல; அவன் தன்மதிப்பும், கண்டிப்பும், தூய்மையும் உடையவன். அவ்வாறுதானே அவன் இருக்கவும் வேண்டும். அவன் முன்னிலையில் வழக்கத்திற்கு மாறான ஒரு வெட்கம் அவளை ஆட்கொண்டது.

இது அவளுக்கே வியப்பாக இருந்தது. சிறு குற்றங்களில் பழகிப் போன இளநங்கை என்று தன்னைக் கருதிவந்த அவள்தானா இவ்வாறு வெட்க முற்றது? போர் அரங்கிலுள்ள பரபரப் பிற்கிடையே இரகசியமான முத்தங்கள், அணைப்பு கள் — கண நேரம் இருந்து மறையும் கவர்ச்சி அல்லது சலிப்பின் அடையாளங்களாகிய இவை களையே வாழ்க்கையெனக் கொண்டிருந்தவள் அவள்!

இவையெல்லாம் அவளுக்கு இப்பொழுது அரு வருக்கத்தக்கனவாகவும், நைந்த பழங்கதைகளாக வும் தோன்றின.

பச்சிலைக் கொத்துக்களுடனும் மலர்களுட னும் ஒவ்வொரு நாளும் அவள் சாரணவீரர்கள் பாசறைக்கு வருவாள். மலர்கள் கூட அவ்வளவு முக்கியமில்லை. போர்வீரர்கள் பெண்மையின் எந்த இனிமைக்காகத் தனிமையில் ஏங்கிக் கொண்டிருந்தார்களோ, அதை அவள் தன்னோடு கொண்டுவந்தாள். ஆகவே தங்கள் மேலதிகாரி அப்பெண்ணிடம் அலட்சியமாக இருந்தது அவர் களுக்குச் சரியாகவே படவில்லை. அதே சமயம் அவன் அவ்வளவு எட்டாத் தொலையாக இருந் ததைப்பற்றி அவர்கள் பெருமையுங் கொண்டார் கள்.

ஒரு நாள் காத்யா நீலப் பூப்படிக்கத்தில் புதிய பூக்களைச் சோடித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது டிவிஷனைப் பார்வையிடுவதற்கு வந்த இராணுவ வேவுத் துறைத் தலைவரான கர்னல் செம்யோர்கின், களஞ்சிய அறைக்குள்

நுழைந்தார். சாரணர்கள் எப்படி வாழ்ந்து வருகிறார்கள் என்று பார்வையிட வந்த அவர், சமையல்காரன், காவல் வீரன், ஒரு பெண் ஆகியோரைத் தவிர வேறு ஒருவரும் அங்கு இல்லை என்பதைக் கண்டார்.

''நீ யார்?'' என்று காத்யாவைக் கேட்டார் கர்னல்.

''செய்தித் தொகுதியைச் சேர்ந்த ஜூனியர் சார்ஜென்ட் சிமக்கோவா'' என்று அவருக்கு வணக்கம் செலுத்திவிட்டுக் கூறினாள் அவள்.

''ஓ! யாரோ பூக்காரி என்றல்லவா எண்ணி னேன்'' என்று முனகினார், சிடுசிடுக்கும் சுபாவ முள்ள கர்னல். பிறகு அவர் போய்விட்டார்.

டிவிஷன் தலைவருடன் பின் நீண்ட நேரம் கர்னல் பேசிக் கொண்டிருந்தார். அவர்கள் மரி யாதையுடன் விவாதித்தார்கள்; ஆனால் எதை யும் மறைத்தோ அல்லது குறைத்தோ பேசவில் லை.

''இந்த வளைவில் விரோதியைப் பற்றிய தகவல் உங்களுக்கு ஒன்றுமே தெரியாது அல்ல வா?'' என்று சீறினார் கர்னல் செம்யோர்கின். ''எதிரியின் திட்டங்களைப் பற்றியும் படைபலத் தைப் பற்றியும் தெளிவாகத் தெரியுமென்று நீங்கள் சொல்ல முடியுமா?''

கர்னல் ஸெர்பிசேன்கோவுக்குச் சள்ளையா யிருந்தது. எனினும் அதை அடக்கிக்கொண்டு சிரிப்பில் மறக்க முயன்றார்.

''எனக்குத் தெரிவது எப்படி? தனது படையில் இன்னது நடக்கிறது என்பதே சில சமயங்களில்

டிவிஷன் தலைவருக்குத் தெரியாமல் போகிறது. எதிரி என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பதை எப்படி அறிந்து கொள்வது? சாரணர்களை வேவு பார்த்துவர அனுப்பினேன். அவர்கள் திரும்பி வரவேயில்லை. உங்களுக்கு ஏழு பேர் களென்பது பெரிய விஷயம் இல்லை. ஏனெனில் நீங்கள் சேனையை நிர்வகிக்கிறவர்கள். ஆனால் எனக்கு இந்த ஏழு பேர் போனது பெரிய நஷ்டமாகும், உண்மையில் மிகப் பெரிய நஷ்டம். சண்டையிலும் அநேக வேவுகாரர்களை இழந்து விட்டேன்.''

''அது உண்மைதான். உங்களுடைய வேவுகாரர்களிடையே என்ன நடந்து வருகிறது என்பதைப் பாருங்கள். நான் அவர்களுடைய இருப்பிடத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு ஒருவருமில்லை. காவல் வீரனுக்குங் கூட வேவுகாரர்கள் போன இடம் தெரியாது. ஆனால் அங்கே ஒரு பெண் — மலர்களைச் சோடித்துக் கொண்டிருந்தாள். ஆகா! காட்சி கண் காட்சியே! உங்களுடைய வேவுகாரர்களைப் பற்றி வந்திருக்கும் முக்கியமான புகார் ஒன்றை இப்பொழுது தான் விசாரணை அதிகாரி என்னிடம் தெரிவித்தான். ஆமாம், தோழர் கர்னல்! உங்களுக்கு இதைப் பற்றித் தெரியாமலிருக்கலாம்; ஆனால் எனக்குத் தெரியும். ஏதோ ஓர் ஊரிலிருந்து புகார் வந்துள்ளது. அது தான் இவ்வேவுகாரர்களின் நடவடிக்கை மோசமாய்ப் போனதற்குக் காரணம்.''

கர்னல் ஸெர்பிசேன்கோ விசாரணை அதிகாரியை அழைத்து வரும்படி கூறினார்.

விரைவில் காப்டன் எஸ்கின் வந்தான். சாதாரணமான தோற்றம், சாந்தமான, புள்ளித் தழும்பிட்ட முகம், கும்மட்டம் போன்ற பெரிய வழுக்கைத் தலை. அவன் பக்கத்துக் கிராமத்திலிருந்து வந்துள்ள புகாரைப் பற்றி விவரமாக எடுத்துரைத்தான். வேவுவீரர்கள் நியாயமற்ற முறையில், பன்னிரண்டு குதிரைகளைக் கொண்டு போனார்கள் என்றும் ஆனால் அவைகளில் பத்தைத்தான் திருப்பிக் கொடுத்தனர் என்றும் அதில் கண்டிருந்தது. அதனுடன் கூடப் புரியாத கையெழுத்துள்ள ரசீதுமிருந்தது.

''நமது வேவுவீரர்கள்தான் இதைச் செய்தவர்கள் என்று நீங்கள் எண்ணுவதற்கு என்ன ஆதாரம்?''

விசாரணை அதிகாரி டிவிஷன் தலைவரின் பயமுறுத்தும் பார்வையைக் கண்டு அஞ்சவில்லை.

''அது இன்னும் தெளிவாய் ருசுவாகவில்லை'' என்று சொன்னான்.

''நல்லது, அது உறுதியான பிறகு என்னிடம் தெரிவியும். நீர் போகலாம்.''

விசாரணை அதிகாரி வெளியே சென்றான். டிவிஷன் தலைவர் சலிப்புடன் கர்னல் செம்யோர்கினிடம் கூறினார்:

''நல்லது, எதிரிகளின் பின்னணிப் பகுதிக்கு ஒரு வேவு குழுவை அனுப்பி வைக்கிறேன். ஆனால் இழந்து போன வேவுகாரர்களுக்குப் பதில் ஆட்கள் நீங்கள் தந்து உதவ வேண்டும்.''

வேவுத் துறைத் தலைவர் போன பின்பு கர்னல் ஸெர்பிசேன்கோ நொடிப் போது ஏதோ யோசித்து விட்டு எழுந்து வெளியே சென்றார்.

''விரைவில் திரும்பி வருவேன்'' என்று வாசலில் எழுந்து நின்ற காவல்வீரனிடம் கூறி விட்டு அப்பால் நடந்தார்.

சாவகாசமாய்ச் சுழன்று கொண்டிருந்த ஒரு காற்றாடி எந்திரத்தை நோக்கிச் சென்றார். அதைச் சுற்றியிருந்த சிறு களஞ்சிய அறைகள் ஒன்றின் முன் நின்றுகொண்டு, வாசலிலிருந்த காவலாளியை நோக்கி, ''வேவுகாரர்களின் இடம் தானே?'' என்று கேட்டார்.

''ஆம், தோழர் கர்னல்!'' என்று கூறிவிட்டு அம்மனிதன் களஞ்சிய அறையின் அரையிருட்டான உட்புறம் நோக்கி, ''அட்டேன்-ஷன்!'' என்று கூவினான்.

உள்ளே சிறிது சலசலப்பு ஏற்பட்டது. டிவிஷன் தலைவர் களஞ்சியத்திற்குள் நுழைந்து சுற்றிலும் உற்றுப்பார்த்தார். மங்கிய வெளிச்சத்தில் எட்டுப் பேர்கள் நின்று கொண்டிருந்தனர். ஒரு மூலை நீர் சுவறாத் துணியால் திரையிடப்பட்டிருந் தது. சத்தமில்லாமல் கர்னல் இம் மூலையை நோக்கி நடந்து சென்று, துணியை விலக்கி னார். ஒரு சிறிய மேசையின் அருகே, காத்யா நேராக நின்று கொண்டிருந்தாள். மேசையின் மேல் பூக்கள் சோடித்த நீலப்படிக்கமிருந்தது. அதன் இருபக்கங்களிலும் புத்தகங்களும் குறிப் பேடுகளும் வரிசையாய் வைக்கப்பட்டிருந்தன.

டிவிஷன் தலைவரின் அச்சுறுத்தும் பார்வை

சிறிது சாந்தமடைந்தது. அவளைக் கூர்ந்து நோக்கினார்.

''நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார். அப்போது காவலில் இருந்த சார்ஜென்ட் அவரிடம் வந்தான். அவனைப் பார்த்து, ''உங்களுடைய தலைவர் எங்கே?'' என்றார்.

''எங்கள் லெப்டினன்ட் முன்னணிப் பகுதிக்குச் சென்றிருக்கிறார்.''

''அவர் வந்ததும் என்னிடம் வரச் சொல்.''

பிறகு வாசலருகே சென்று, மறுபடியும் திரும்பிப் பார்த்து, ''காத்யா, நீ இங்கேயே இருக்கப் போகிறாயா அல்லது என்னுடன் வருகிறாயா?'' என்று கேட்டார்.

''உங்களுடன் வருகிறேன்'' என்றாள் காத்யா.

இருவரும் அவ்விடத்திலிருந்து வெளியே சென்றனர்.

''ஏன் இவ்வளவு வெட்கம்?'' என்று கேட்டார் கர்னல். ''வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லையே. டிராவ்கின் நல்லவன், சிறந்த சாரணன்.''

அவள் பதிலொன்றும் சொல்லவில்லை.

''காதலிக்கிறாய் போலும், என்ன, அப்படித் தானே? ஆனால் காப்டன் பராஷ்கின் செய்தி என்னவாயிற்று? அவனுக்குக் கடுக்காய் கொடுத்து விட்டாயா?''

''அப்படி ஒன்றுமேயில்லை, அதாவது உருப்படியாக ஒன்றுமேயில்லை'' என்றாள் அவள்.

கர்னல் ஏதோ முனகினார். பிறகு அப்பெண்ணின் குவிந்த இமைகளைக் கூர்ந்து பார்த்த

வாறே, ''டிராவ்கின் கதை என்ன? அவனுக்குப் பிரியந்தானே? கண் கவரும் பெண், அதோடு மனங்கவரும் மலர்கள் வேறு...''

அவள் ஒன்றும் பேசவில்லை. என்றாலும் அவர் புரிந்துகொண்டார்.

''அவன் உன்னைக் காதலிக்கவில்லையோ?''

ஜூனியர் சார்ஜென்டின் உடையிலிருந்த இந்தக் குஞ்சுப் பெண்ணின் உருவில், ஒருதலைக் காதல் என்ற தொன்று தொட்டு நடிக்கப்பட்டு வரும் சோகநாடகத்தைக் கண்டு கர்னலுக்கு உள நெகிழ்ச்சி யுண்டாயிற்று. விந்தைதான், போர் என்ற நரகத் தீயிலே இளங் காதலின் இறக்கைகள் படபடக்கின்றன — முதலை வாயெதிரே பறவை போல என்று கர்னல் எண்ணமிட்டார். அவர் உதடுகளில் புன்னகை அரும்பியது.

ராணுவ உதவி மருத்துவர் உலீபிஷெவா என்பவளை அவர்கள் கண்டனர். கர்னல் அவளையும் காத்யாவையும் தம்முடன் வந்து தேநீர் அருந்திச் செல்லுமாறு அழைத்தார்.

கர்னலின் குடிசையில் உலீபிஷெவாவும் காத்யாவும் விரைவில் தேநீர் விருந்திற்கு வேண்டியவைகளைத் தயார் செய்ய வேலையாளுக்கு உதவினர். சமோவாரில் நீர் கொதித்ததும், அவர்கள் மேசையின் அருகே உட்கார்ந்து கொண்டு பல்வேறு விஷயங்களைப் பற்றி இன்பமாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

இதற்குள் டிராவ்கின் அவ்விடம் வந்தான்.

''உட்காரும்'' என்றார் கர்னல்.

டிராவ்கினிடம் தான் கொண்டிருக்கும் காத

லைப் பற்றிக் கர்னல் கிண்டல் செய்வார் என்று பயந்தாள் காத்யா. ஆனால் அவர் அவ்விஷயத் தைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. ஏதோ குதிரைகளைப் பற்றிப் பேசினார். லெப்டி னன்டின் இளமை தவழும் கம்பீரமான முகத் தையே கூச்சத்துடன் பார்த்துக் கொண்டிருந் தாள் காத்யா. கர்னலின் கேள்விகளுக்கு அவன் தெளிவாக, நறுக்குத் தெறித்தாற் போலப் பதில ளித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது, அவை களின் பொருளைக் கருதாது ஒலியை மட்டுமே செவிமடுத்தவளாய், அவனது குரலிலே நெஞ்சு செலுத்திய வண்ணமாயிருந்தாள்.

ஏக்கம் அலை போலெழுந்து அவள் உள்ள மெங்கும் பரவியது.

''நானெங்கே அவனெங்கே, எங்களுக்குள் என்ன பொருத்தம்? அவனோ மிகுந்த திறமை சாலி, கண்டிப்புள்ளவன். அவனுடைய சகோ தரியோ பிடில் வாசிக்கிறாள். தவிர அவன் விஞ்ஞானியாகப் போகிறான். நானோ? ஆயிரக் கணக்கான மற்றைப் பெண்களைப் போல் ஒரு சாதாரணப் பெண்தானே.''

காத்யாவின் உணர்ச்சிகளை டிராவ்கின் குறிப் பாகக் கூடத் தெரிந்து கொள்ளவில்லை. அவளு டைய போக்கு அவனுக்குச் சள்ளையாகவும் விளங்காத புதிராகவும் இருந்தது. அவள் திடும் திடுமென்று களஞ்சிய அறைக்கு வருவது, தான் சொல்லாமலே தன்னுடைய வசதிகளைக் குறித்து அவள் எடுத்துக்கொண்ட அக்கறை — இவையெல்லாம் முட்டாள்தனமாகவும், அதிகப்

பிரசங்கித்தனமாகவும், அநாகரிகமாகவுங்கூட அவனுக்குப் புலப்பட்டன. அவள் களஞ்சிய அறைக்கு வந்த பொழுதெல்லாம் சாரணர்கள் குறிப்பாக ஒருவரையொருவர் பார்ப்பதும், அவ ளுடன் அவனைத் தனிமையில் விட்டுச் செல்ல வெளிப்படையாக முயல்வதுமாய் இருந்தார்கள். அதனால் அவர்களைப் பார்க்கவே அவனுக்கு வெட்கமாயிருந்தது.

டிவிஷன் தலைவருடன் அவளிருந்ததையும், அவருடன் தேநீர் அருந்துவதையுங் கண்டு அவ னுக்கு மிகுந்த ஆச்சரியம் உண்டாயிற்று. குதி ரைகள் பற்றிய விஷயத்தைக் கர்னல் பேச ஆரம்பித்ததும், காத்யாதான் இதை வேவுவீரர் களிடமிருந்து தெரிந்து கொண்டு, தொல்லை கொடுக்கிறாள் என்றே டிராவ்கின் எண்ணி னான்.

பிறகு, அது எவ்வாறு நேர்ந்தது என்பதை அவன் கர்னலிடம் சுருக்கமாய் விளக்கிக் கூறி னான். தமது படை முன்னேறி வந்த அந்நாட் களில் நடந்தவைகளெல்லாம் சட்டென்று கர் னலின் நினைவிற்கு வந்தன. படைகள் முடிவில் லாமல் முன்னேறிச் சென்றது, சிறிய கடுந்தாக்கு தல்கள், மார்ச் மாதம் ஒரு பிற்பகலில் தாம் சேறு நிறைந்த சாலையில் நின்றுகொண்டு வேவு வீரர்களை நையாண்டி செய்து கண்டித்தது ஆகிய இவையனைத்தும் அவரது நினைவிற்கு வந்தன. கணநேரம் கர்னல் ஸெர்பிசேன்கோ வின் இடுங்கிய வெண்பச்சைக் கண்கள் வழி யாக, முதல் உலகப் போரில் கைதேர்ந்த வேவு

*வீரராயிருந்த கார்போரல் ஸேர்பிசேன்கோ எட்டிப்பார்த்து டிராவ்கின் சொல்லியதை ஆமோதித்தார்.*

*''சபாஷ், டிராவ்கின்.''*

*பிறகு கர்னல் கேட்டார்:*

*''நிச்சயமாய் எல்லாக் குதிரைகளையும் திருப்பி அனுப்பி விட்டாயல்லவா?''*

*''ஆமாம், அனுப்பி விட்டேன்'' எனப் பதில் அளித்தான் டிராவ்கின்.*

*கதவைத் தட்டிய ஒலி கேட்டது; காப்டன் பராஷ்கின் அறைக்குள் நுழைந்தான்.*

*''என்ன வேண்டும்?'' என்று ஸெர்பிசேன்கோ வெறுப்புடன் கேட்டார்.*

*''என்னை வரச் சொன்னீர்களா, தோழர் கர்னல்?''*

*''மூன்று மணி நேரத்திற்கு முன் உன்னைக் கூப்பிட்டுவிட்டேன். செம்யோர்கின் உன்னிடம் பேசினாரா?''*

*''ஆமாம், தோழர் கர்னல்.''*

*''அப்புறம்?''*

*''பகைவரின் பின்னணிப் பகுதிக்கு ஒரு வேவுக் குழுவை அனுப்பிவைப்போம்.''*

*''யார் தலைமையில்?''*

*''ஏன், டிராவ்கின்தான்'' என்று உள்ளார்ந்த பகைமையுடன் பதிலளித்தான் பர்ராஷ்கின்.*

*ஆனால் அவன் எண்ணியது வீணாயிற்று. அச்செய்தியைக் கேட்டு டிராவ்கினது முகத்தில் துளிக்கூட மாறுதல் தென்படவில்லை. இதைப் பற்றி எதுவுமே அறியாத உலீபிஷேவா நிதா*

னமாகத் தேநீரை ஊற்றிக் கொண்டிருந்தாள். காத்யாவுக்கோ, இந்தச் சொற்கள் தன் காதலையே இலக்காகக் கொண்ட அம்புகள் என்பது அறவே தெரியவில்லை.

காப்டனின் கண்களில் தோன்றிய குறிப்பை, டிவிஷன் தலைவர் மட்டுமே புரிந்துகொண்டார். ஆனால் அவருக்கு பராஷ்கினுடைய தீர்மானத்தை மறுப்பதற்கு வேண்டிய முகாந்தரம் எதுவும் தென்படவில்லை. அசாதாரணமான கடினம் வாய்ந்த இந்த வேவு நடவடிக்கைக்குத் தலைமை தாங்க எல்லாரிலும் மிகத் தகுதியுள்ளவன் டிராவ்கினே என்பதில் சந்தேகத்திற்கே இடமில்லை.

''சரி'' என்று சொல்லி, கர்னல் பராஷ்கினுக்கு விடை கொடுத்தார்.

டிராவ்கினும் அதிக நேரம் தங்கவில்லை.

அவன் புறப்படுவதற்காக எழுந்ததும் ''நல்லது, போய் வா. நீ ஏற்றுக் கொண்டிருப்பது கடுமையான செயல். அதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைத் தக்கவகையில் செய்து கொள்'' என்றார் கர்னல்.

''ஆகட்டும், தோழர் கர்னல்'' என்று கூறி டிராவ்கின் குடிசையிலிருந்து வெளியேறினான்.

அவனுடைய காலடிச் சத்தத்தைக் கேட்டுக் கொண்டிருந்த கர்னல் களிப்பின்றி, ''தங்கமான பையன்'' என்று சொல்லிக்கொண்டார்.

டிராவ்கின் சென்ற பிறகு காத்யாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. அவளும் விரைவில் விடை பெற்றுக்கொண்டு வெளியேறினாள். மங்கிய மதி

யொளி வீசும் இதமான இரவு. காடெங்கும் ஆழ்ந்த அமைதி குடிகொண்டிருந்தது. தொலை வில் குண்டு வெடிக்கும் அதிரொலி அல்லது தனியே செல்லும் லாரியின் கடகடப்பு—இவை தான் இடையிடையே அந்த மௌனத்தைக் கலைத்தன.

காத்யாவின் உள்ளம் களி துள்ளியது. எப்போ தையும்விட அன்று டிராவ்கின் தன்னை அதிகக் கனிவோடு பார்த்ததாக அவளுக்குப்பட்டது. அத் துடன் புதிய யோசனையும் உண்டாயிற்று. சர்வ வல்லமை பொருந்தியவரான டிவிஷன் தலை வர்தான் அவள் மீது எப்போதுமே பரிவு காட்டி வருகிறாரே. காத்யா அப்படி யொன்றும் மோச மான பெண்ணல்ல, பாராட்டத்தக்க இயல்புகள் அவளிடம் உண்டு என்று டிராவ்கினிடம் சொல்லி அவனை வழிக்குக் கொண்டுவருவது அவருக்கு முடியாத காரியமா என்ன? இப்படி எண்ணமிட் டவளாக அவள் நிலவு பொழியும் இரவிலே தன் காதலனைத் தேடி அலைந்து திரிந்தாள். அவள் சுவிசேஷப் பாட்டுக்களைப் படித்ததோ கேட்டதோ கிடையாது. ஆனால் அவற்றில் உள்ளவை போன்ற சொற்களை, தொன்மை வாய்ந்த இனிய மொழிகளை அவள் வாய் முணுமுணுத்தது.

## அத்தியாயம் ஐந்து

''வணக்கம், தோழர் லெப்டினன்ட்! இப்பவும் தங்கள் வேவுவீரனும், சார்ஜென்டும், முதலா

வது பிரிவுத் தலைவனும் ஆகிய நான், இவான் வஸீலியெவிச் அனிக்கானவ், எழுதிக் கொள்வது என்னவென்றால் நான் சுகமாய் இருந்து வருகி றேன். தாங்களும் அதே போல இருந்து வர மனப்பூர்வமாய் விரும்புகிறேன். மருத்துவமனை யில் அறுவை மருத்துவம் செய்து, என் கால் சதைக்குள் பாய்ந்திருந்த குண்டை வெளியி லெடுத்து விட்டார்கள். பிறகு ஒரு சேமப் படைக்கு என்னை அனுப்பினார்கள். முதலில் அவ்வளவு பிடித்தமாயில்லை; ஏனென்றால் சாப் பாடு போர்முனையில் கொடுப்பதைவிட குறை வாகவே கொடுத்தார்கள். எனக்கோ நிறையச் சாப்பிடுவதிலே ஆசை. போர்முனைச் சாப்பாட் டுக்கு ரொம்பப் பழகிப் போனவன் நான். இந்த அழகிலே நாள் முழுதும் பயிற்சி செய் வதும், பட்டாளச் சட்ட திட்டங்களை எல்லாம் ஆரம்பத்திலிருந்து மறுபடியும் படிப்பதும், 'ஹுர்ரா' என்று கூப்பாடு போட்டுத் தாக்கு வதும் வேறு செய்ய வேண்டியிருந்தது. தாக் குவதற்கோ ஜெர்மன்காரர்கள் கிடையாது; சுடு வதற்குத் தோட்டாக்களும் கிடையாது. இதிலே இன்னொரு தொல்லை. என்னுடைய வால்டர் ரிவால்வர், உங்களுக்கு நினைவு இருக்கிறதல்ல வா? அதுதான், கறுப்புக் கண்மூடி போட்டி ருந்த ஜெர்மன் கேப்டனிடமிருந்து நான் எடுத் தேனே, அதை இங்கே என்னிடமிருந்து பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். பட்டாளத் தலைவனி டம் முறையிட்டேன். ஒரு சார்ஜென்ட் ரிவால் வர் வைத்துக்கொண்டிருப்பது சட்ட திட்டங்

களுக்கு விரோதம் என்று அவன் சொல்லிவிட் டான். நான் வெறும் சார்ஜெண்ட் மட்டுமல்ல, வேவுவீரன், இதைப் போல இருநூறு ரிவால்வர் களை உபயோகித்திருக்கிறேன் என்று சொல்லிப் பார்த்தேன். அவன் அதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. பிறகு அந்தப் பட்டாளத் தைச் சேர்ந்த பண்ணைக்கு என்னை மாற்றி னார்கள். அங்கே தான் இப்பொழுது இருந்து வருகிறேன். நல்ல வசதியுள்ள கூட்டுப்பண்ணை விவசாயி போல வசித்து வருகிறேன். சாப்பிடு வதற்குப் பிடித்த பண்டங்கள் — புளித்த பாலே டென்ன, வெண்ணெயென்ன, விதம் விதமான காய்கறிகளென்ன — எல்லாம் கிடைக்கின்றன. இன்னும் சிறப்பு என்ன தெரியுமா? சண்டைக்கு முன் நான் கூட்டுப் பண்ணைத் தலைவனாய் இருந்தது போலவே இங்கேயும் பண்ணைப் பொ றுப்பதிகாரி நான்தான். ஆயிற்றா, நாங்களெல் லாரும் உழுகிறோம், விதைக்கிறோம். மாலையில் உண்பதற்கு அருமையான சாப்பாடு; அதற்கு மேல் குடிப்பதற்குப் பால். எனக்குப் படுப்பதற் குப் பஞ்சிறகுப் படுக்கை. இடையிலே இன்னொரு சேதி. என் வீட்டின் சொந்தக்காரிக்குக் கண வனில்லை. சண்டை தொடங்கிய முதல் ஆண்டி லேயே ஆசாமி தவறிப்போனான். அவளோ, நம்மைச் சுற்றுகிறாள், சுற்றுகிறாள், அப்படிச் சுற்றுகிறாள். தோழர் லெப்டினன்ட்! நான் ஓயாமல் தங்களையும் மற்றத் தோழர்களையுமே நினைத்துக் கொண்டிருக்கிறேன்; நமது போர் நடவடிக்கைகளைப் பற்றியும் எண்ணிக் கொண்

டிருக்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக, போர் முனையில் உங்களுக்குள்ள கஷ்டங்களையும், பெருமை பொருந்திய நமது தாய்நாட்டிற்காக நீங்கள் போரிட்டு வருவதையும் நினைத்தால் எனது நெஞ்சம் குமுறுகிறது. தோழர் லெப் டினன்ட், தாங்கள் தயவு செய்து கர்னல் ஸெர் பிசேன்கோவைப் பார்த்துப் பேச முடியுமா? ஒருவேளை அவர் கேட்டால், இவர்கள் என்னை மறுபடியும் உங்களுடன் வந்து சேருவதற்கு அநு மதிக்கலாம். உங்கள் எல்லாரையும் விட்டுப் பிரிந்து இங்கு எனக்கு இருப்பே கொள்ளவில் லை. உங்களுடன் சேர்ந்து, போர் முடியும் வரையில் நானும் போர் செய்ய வேண்டும். அப்பழுக்கின்றி வசதியுள்ள கூட்டுப்பண்ணை விவ சாயி போல் வசித்து வந்தால் அது எனக்கு எவ்வளவு வெட்கக் கேடு! பாஸிஸ்டுகளிடமிருந்து நீங்கள் என்னைக் காப்பாற்றுவது போல அல் லவா ஆகிறது? தங்களுக்கும், நமது கீர்த்தி வாய்ந்த தொகுதியிலுள்ள எல்லாருக்கும் எனது வணக்கம்.

இப்படிக்கு,

இவான் வஸீலியெவிச் அனிக்கானவ்.''

டிராவ்கின் கடிதத்தைப் பல தடவை படித் தான்; சிறிது சிரித்துக்கொண்டான். உணர்ச்சி ததும்பியது. அனிக்கானவ் எப்படிப்பட்டவன் என்பது மறுபடியும் நினைவிற்கு வந்தது. இந்த நேரம் அவன் தன்னோடு இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்பதையும் எண்ணிப் பார்த் தான். ஒருவகை இகழ்ச்சிக் குறிப்போடு, தூங்கிக்

கொண்டிருந்த வேவுகாரர்களின் முகங்களைப் பார்த்துக் கொண்டு வேறிடத்திலிருந்த அனிக் கானவையும் அவர்களையும் ஒப்பிட்டுப்பார்த்துக் கொண்டிருந்தான் டிராவ்கின்.

''இல்லை, அவனுக்கு ஈடு எவனுமே இல்லை'' என்று எண்ணினான். ''அனிக்கானவின் பட படப்பற்ற ஆண்மையும், நிதானமும், தெளிவான மூளையும் இவர்களுக்கு எங்கே? எப்பொழுதும் அனிக்கானவை நான் உறுதியாக நம்புவதற்கு முடியும். 'பீதி'யென்ற சொல்லின் பொருளே அவனுக்குத் தெரியாது. மாமச்கின் தைரியமுள் ளவன் தான்; என்றாலும் அசட்டுத் துணிவுள்ள வன்; தன்னலமுள்ளவன். பிகோவ் எதையும் சீர்தூக்கி முடிவு செய்யும் குணமுள்ளவன்; அவ னிடம் இந்த இயல்பு சிறிதளவு கூடுதலாகவே யுள்ளது. நெருக்கடியான சமயங்களில் நிதான மான யோசனை பயங்கொள்ளித்தனமே ஆகி விடும். பிராஜ்னிகவிற்குச் சில நல்ல குணங்களிருப் பினும் அவன் தன் பலத்தில் நிற்க முடியாது. கோலுப், செம்யோனவ், முதலியவர்களோ இன் னும் வேவு வீரர்களாகவில்லை. ஆ, மார்சென் கோ — அவன் ஆண் மகன், தங்கமான ஆள். ஆனால் போய்விட்டானே. இனிமேல் திரும்பி வருவானென்றே தோன்றவில்லையே!''

இப்படிப்பட்ட துன்ப நினைவுகளால் உழன்ற டிராவ்கின், களஞ்சிய அறையை விட்டு வெளியே சென்றான். தனது சாரணர்களைப் பற்றிய அவனது மதிப்பீடு சரியானதல்ல; அனிக்கானவ் கடிதத்தின் காரணமாக மனம் குழம்பிப் போக

வேதான், அவன் இவ்வாறு எண்ணினான் என்று சொல்ல வேண்டும். குளிர்மிகுந்த வைகறையில் செங்குத்தான திடரை நோக்கி அவன் மெதுவாக நடந்து சென்றான். தனது போர் வீரர்களுக்குப் பயிற்சியளிக்க அவ்விடத்தை அவன் தேர்ந்தெடுத் திருந்தான்.

இந்த இடம் நில அமைப்பில் ஏறக்குறைய போர் முனைப் பகுதியைப் போலவே இருந்தது. அகன்ற நீரோடை ஒன்று திடரை இரு கூறாக வகிர்ந்து சென்றது. ஓடையின் இருமருங்கிலும் 'அழுகுணி'வில்லோ மரங்கள் அடர்ந்திருந்தன. பயிற்சிகளுக்காகத் திடரில் தோண்டப்பட்டிருந்த ஆழமற்ற அகழியும் இரண்டு முட்கம்பி வரிசை களும் எதிரியின் முன்னணிப் பகுதிகளைக் குறித் தன.

ஒவ்வோர் இரவிலும் டிராவ்கின் தனது வேவு வீரர்களை இந்த ''வேவு நடவடிக்கை அரங் கிற்கு'' அழைத்துச் செல்வான். பனிக்கட்டி போல் குளிரும் ஓடையைக் கடந்து சென்று, கம்பி களை வெட்டி விட்டு, நீண்ட கருவிகளை உப யோகித்து இல்லாத சுரங்க வெடிகளைத் தே டிப்பார்த்து, அதன் பிறகு அகழைத் தாண்டிக் குதித்துச் செல்லும் படி தனக்கு இயல்பான விடா முயற்சியுடன் அவர்களுக்குப் பயிற்சியளிப் பான். முந்திய நாளில்தான், புதியதொரு பயிற்சி யைப் பற்றிய எண்ணம்கூட அவனுக்கு ஏற்பட் டது. சில வேவுவீரர்களை அகழில் இருக்கும் படியும் மற்றவர்களை அகழை நோக்கி ஓசைப் படாமல் ஊர்ந்து செல்லும் படியும் செய்து,

அரவமின்றி நகருவதற்குச் சாரணர்களைப் பயிற்றினான். அவனும் அகழில் உட்கார்ந்து இரவில் ஏற்படும் ஒலிகளைக் கூர்ந்து கேட்டான். ஆனால் அவனது மனம் எதிரியின் உண்மையான முன்னணிப் பகுதிகளைப் பற்றியே — அவை இப்பொழுது பலமாக அரண் செய்யப்பட்டிருக்கும், நாம் விரைவில் அவற்றைக் கடந்து உட்புக வேண்டியிருக்கும் என்றே — எண்ணமிட்டுக் கொண்டிருந்தது.

புதிய பத்து வேவுவீரர்கள் பிளாட்டூனுக்கு வந்து சேர்ந்தனர். ஆகவே, தன்னோடு செல்வதற்குரிய தேர்ந்தெடுக்கப்பட்ட வீரர்களுக்குத் தனிப் பயிற்சி கொடுத்து வருவதோடு, இந்தப் புதிய வீரர்களுக்கும் டிராவ்கின் பயிற்சியளிக்க வேண்டியிருந்தது. இவைகளுக்கு மேலாக, நாள்தோறும் எதிரிகளின் முன்னணிப் பகுதிகளில் கவனஞ்செலுத்தி அவர்களின் அன்றாட வேலை முறை, நடைமுறை ஆகியவைகளையும் கண்டு கொள்ள வேண்டியதாயிருந்தது.

இவ்வாறு இடைவிடாது செய்து வந்த கடும் உழைப்பின் காரணமாக நாளடைவில் அவன் ஒரே சிடுசிடுப்புக்காரனாகிவிட்டான். முன்பு சில்லறைத் தவறுகளைக் கவனிக்காது விட்டு விடுவான். இப்பொழுது எந்தச் சிறிய தவறானாலும் அதற்குத் தண்டனையளித்தான். முதன் முதலில் பலியானது மாமச்கின் தான். சுவையான உணவெல்லாம் அவனுக்கு எங்கேயிருந்து கிடைத்தது என்று டிராவ்கின் அவனிடம் கண்டிப்பாய்க் கேட்டான். அவை எல்லாம் குடியானவர்கள்

தந்த கொடைப் பொருள்கள் என்று மாமச்கின் மென்று விழுங்கினான். உடனே டிராவ்கின் அவனுக்கு மூன்று நாள் காவல் தண்டனை யளித்தான்.

''மூன்று நாட்களாவது இங்குள்ள குடியா னவர்கள் உன்னுடைய தொந்தரவில்லாமல் இருப்பார்கள் அல்லவா?'' என்று சொன்னான் டிராவ்கின்.

காத்யாவிடம், மரியாதையாக ஆனால் கண் டிப்பாய், இப்போதைக்குச் சிலநாள் களஞ்சிய அறைக்கு வந்து போவதை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அவளது வெருண்ட கண்களைப் பார்த்ததும் அவனுக்கே சிறிது கஷ்டமாக இருந்தது என் பது உண்மைதான். தன் வார்த்தைகளை ரத்து செய்து விடலாமா என்ற எண்ணம் கூட அவ னுக்குத் திடீரென்று ஏற்பட்டது. ஆனால் அவ் வாறு செய்யவில்லை.

அவனுக்கு எல்லாவற்றையும் விட அதிக வருத் தத்தைக் கொடுத்தது கஸான் நகருக்கருகில் ஏதோ ஓர் ஊரைச் சேர்ந்த பியக்டீஸ்தவ் என்னும் உயரமான, அழகிய இளைஞன் நடந்து கொண்ட விதம் தான். அதற்கு முன் எவனும் அவ்வாறு நடந்து கொண்டதில்லை.

ஒரு நாட்காலையில் மழை பெய்தது. தன் வீரர்களுக்கு அன்று ஓய்வு கொடுக்கலாம் என்று தீர்மானித்திருந்தான் டிராவ்கின். பராஷ்கினது இருப்பிடத்திற்குப் புறப்பட்டான். அங்கு லேவின் என்ற மொழிபெயர்ப்பாளனிடம் ஜெர்மன் கற்

றுக்கொண்டுவந்தான். காற்றாடி எந்திரத்தின் அருகே புதர்களின் பக்கத்தில் பியக்டீஸ்தவைக் கண்டான். மழை கொட்டிக் கொண்டிருந்தது. அழகிய தேகக்கட்டுள்ள உயரமான இளைஞன் ஒருவன் இடுப்புக்கு மேல் வெற்றுடம் போடு புல்லின் மேல் படுத்திருந்தான். அப்பேர்வழி தான் பியக்டீஸ்தவ். "என்ன கோலமப்பா இது?" என்று ஆச்சரியத்துடன் டிராவ்கின் கேட்டான். பியக்டீஸ்தவ் குதித்தெழுந்து, மிகுந்த திகைப்புடன், "தோழர் லெப்டினன்ட்! குளிர்ந்த தண்ணீரில் குளித்துக் கொண்டிருக்கிறேன். ஊரில் எப்பொழுதும் இவ்வாறு செய்வது வழக்கம்" என்று கூறினான். ஆனால் அன்றிரவு வேவு வீரர்களெல்லாம் சத்தமின்றி ஊர்ந்து செல்லப் பழகிக் கொண்டிருந்த பொழுது, பியக்டீஸ்தவ் பலமாக இருமினான். முதலில் டிராவ்கின் இதைக் கவனிக்கவில்லை; ஆனால் இரண்டாந் தடவை இருமியதும், அவனது தந்திரத்தை உடனே அறிந்து கொண்டான். வேண்டுமென்றே பியக்டீஸ்தவ் தடுமனை வருவித்துக் கொண்டிருந்தான் என்பது தெரிந்து விட்டது. எவனாவது ஒருவன் இருமினாலும் எல்லோர் பாடும் அம்பலமாகி விடுமாதலால் இருமலுள்ளவனை வேவு நடவடிக்கைக்கு ஒருபோதும் கூட்டிச் செல்ல மாட்டார்கள் என்பதை அந்தப் பயல் அநுபவசாலிகளான சாரணர்களின் பேச்சிலிருந்து தெரிந்து கொண்டிருந்தான்.

தனது வாழ்வில் டிராவ்கின் இதற்கு முன் எப்பொழுதுமே இவ்வளவு கடுங்கோபம் கொண்

டதில்லை. அந்தக் கோழைப் பதரை அங்கேயே நிலவில், தன் வீரர்கள் திறந்த வாய் மூடாது பார்த்துக் கொண்டிருக்கையில் சுட்டுத் தள்ள வேண்டும் என்று தன் கை துடித்த துடிப்பை அரும்பாடு பட்டு அடக்கிக்கொண்டான்.

''பதடிப்பயலே, இதற்காகத்தான் நீ குளிர்ந்த தண்ணீரில் குளித்து வருகிறாயோ?''

மறு நாள் பியக்டீஸ்தவ் படையினின்றும் வெளி யேற்றப்பட்டான்.

இப்பொழுதுகூட இந்த நிகழ்ச்சியைப் பற்றி நினைக்கையில் டிராவ்கினுக்கு அருவருப்பால் உடல் குன்றியது.

சூரியன் உதித்தெழும் சமயம். முன்னணிப் பகுதிகளுக்குப் போக வேண்டிய நேரம் அது. இரு வீரர்களைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு ஆற்றை நோக்கிச் செல்லும் வழக்கமான பாதை வழியே புறப்பட்டான் டிராவ்கின்.

எதிரிகளுடைய பாதுகாப்பு இடங்களை அவர் கள் நெருங்க நெருங்க நிலவுலகை விட்டு வேறு ஏதோ மிகமிகப் பிரம்மாண்டமான புதிய உல கிற்கு வந்துவிட்டதுபோலச் சுற்றுப்புறம் அனைத் தும் அச்சமூட்டுவதாய் இருந்தது. எந்திரப் பீரங்கிகள் கக்கும் தீப்பிழம்பு, சட்டிப்பீரங்கிக் குண்டுகளின் செவிடுபடும் வெடி முழக்கம், பின்பு திடீர்ச் சாவு குடிகொண்டுள்ள பயங்கர மௌ னம்... குண்டுகளால் மொட்டையாக்கப்பட்ட மரங்கள், பீரங்கிக் கிடங்குகள் — இவைகளை யெல்லாம் தாண்டி, ஒருவன் பின் ஒருவனாக, வேவு வீரர்கள் தங்கள் பச்சை மேலாடையுடன்

போர் அரங்கை மேன்மேலும் நெருங்கினர்.

இரண்டாம் எண் பட்டாளியணிலிருந்த அகழ்களில் டிராவ்கின் மாமச்கினைச் சந்தித்தான். மூன்று நாள் காவலுக்குப் பிறகு அவனை ''கோழிகளிடமிருந்து தொலைவிலும், விரோதிகளின் அருகிலும்'' இருப்பதற்காக இந்தச் சோதனை இடத்திற்கு அனுப்பி வைத்திருந்தான். காலணிக் குதிகளை ஒன்றோடொன்று மோதி டக்கென்று ஒலித்துவிட்டு, மாமச்கின் கடந்த இருபத்து நான்கு மணி நேரத்தில் எதிரிகளின் நடமாட்டத்தைக் காட்டும் பார்வைப் படத்தையும், குறிப்புகளையும் அவனிடம் கொடுத்தான்.

எந்திரத் துப்பாக்கிகளின் வரிசைகளின் இடையே இருந்த் தொலை நோக்கியின் மூலம் எதிரிகளின் முன்னணிப் பகுதிகளைக் கூர்ந்து நோக்கினான் டிராவ்கின். வழக்கம் போல் பட்டாளியன் தலைவனான காப்டன் முஷ்டக்கோவ், பீரங்கிப் படையைச் சேர்ந்த காப்டன் குரேவிச் ஆகிய இருவரும் அவனை இங்கே சந்தித்தனர். வேவுக் குழு விரைவில் சோதனைக்குப் போக இருப்பது பற்றி அவர்களுக்குத் தெரியும். அவர்கள் முகங்களில் தோன்றிய ஒருவித பரிவுக்குறி டிராவ்கினுக்குச் சிறிது எரிச்சலுண்டாக்கிற்று. ''சீக்கிரம் நீங்கள் அங்கே போகப் போகிறீர்கள்; நாங்கள் சுகமாகப் பாதுகாப்பு நிலவறைகளில் அமர்ந்திருப்போம்'' என்பது போல் இருந்தது அக்குறி.

அவர்கள் காட்டிய மரியாதையும், உதவி

செய்ய ஆவலாக முன்வந்ததும் அவனுக்குச் சள்ளையாக இருந்தன. அவன் உயிரோடு திரும்ப மாட்டான் என்பது போன்ற அவர்களுடைய எண்ணங்களைக் குறித்து அவன் மனம் வெகுண்டது. கண்களை இடுக்கிக்கொண்டு தொலை நோக்கியின் மூலம் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது, அவன் வறட்டுப் புன்னகையுடன் எண்ணினான்: ''பொறுங்கள், நண்பர்களே! உங்கள் எல்லாருக்கும் பிறகுதான் என் முறை வரும்!''

அவர்களுக்குக் கேடு வருவதை அவன் விரும்பினான் என்பதல்ல. அதற்கு நேர்மாறாக அவர்களிருவரிடமும் அவனுக்குப் பிரியம் அதிகம். அந்தப் பிரிவிலேயே மிகச்சிறந்த பட்டாளியின் தலைவன், அழகிய இளைஞன் முஷ்டக்கோவ் தான். எப்பொழுதும் தூய்மையான உடையில் விளங்கும் குரேவிச், கணிதத்திலும் தேர்ச்சி பெற்றவன், டிராவ்கினுக்கு மிகவும் பிடித்தமானவன். அவனது பேட்டரி துல்லியமாக இலக்குப் பார்த்துத் தாக்குவதில் பேர்போனது ஜெர்மானியர்களுக்குப் பெரும் பீதியை உண்டு பண்ணியது. குரேவிச் காலையிலிருந்து இரவுவரை, அகழை விட்டு நகராமல் ஜெர்மானியர்களையே கவனித்த வண்ணமாயிருப்பான். பாஸிஸ்டுகள் மீது அவனுக்கிருந்த வெறுப்பு அவனை அவ்வாறு செய்யத் தூண்டியது. டிராவ்கினுக்கு வேண்டிய உபயோகமான முக்கிய தகவல்கள் அவனிடம் எப்பொழுதும் கிடைக்கும். தன்னைப் போல் கடமையில் ஒரு வெறி குரேவிச்சிடம்

உண்டு என்பதை டிராவ்கின் அறிவான். தன்னலங் கருதாது கடமையே கண்ணாயிருப்பதே டிராவ்கினுடைய பழக்கம். குரேவிச்சும் அதே கருத்தும் பழக்கமும் உள்ளவன். அவர்கள் தங்களைச் ''சகோதரர்கள்'' என்று அழைத்துக் கொண்டார்கள்; அது முற்றிலும் சரியானதே. தங்கள் இலட்சியத்தில் நம்பிக்கை கொண்டு அதற்காக உயிரையும் கொடுக்கத் தயாராயிருக்கும் நமது தேசத்திலுள்ள சிறந்த மனிதர்களைச் சேர்ந்தவர்கள் அவர்களிருவரும்.

ஜெர்மானியரின் அகழ்களையும், முட்கம்பி வேலிகளையும் டிராவ்கின் உற்றுப் பார்த்தான். தரையின் அமைப்பையும் மேடு பள்ளங்களையும் மனத்தில் நன்கு பதியவைத்துக் கொண்டான். எதிரிகளின்´ எந்திரத் துப்பாக்கி குண்டுகள் செல்லக்கூடிய திசையையும், நடை அகழ்களில் இடையிடையே ஏற்பட்ட நடமாட்டத்தையும் கவனித்தான் டிராவ்கின்.

தமது முன்னணிப் பகுதிகளுக்கும் எதிரிகளின் இடங்களுக்கும் இடையே பறந்து சென்ற காகங்களைக் கண்டு ஒரு விதப் பொறாமை அவனுக்கு உண்டாயிற்று. அவைகளுக்குப் பயத்தைக் கொடுக்கும் தடைகள் கிடையா. ஜெர்மானியர் பகுதியில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அவை தான் சொல்ல முடியும். பேசும் காக்கையைப் பற்றியும், வேவு பார்க்கும் காக்கையைப் பற்றியும் அவன் கனவு கண்டான். தான் மட்டும் அவ்வாறு ஆக முடியுமேயானால் தனது மனித உருவத்தை மிக

மகிழ்ச்சியோடு தியாகம் செய்திருப்பான் டிராவ் கின். தலை சுற்றும் வரையில் நன்கு கவனித்து, வேண்டிய குறிப்புகளை எல்லாம் செய்து கொண் டதற்குப் பிறகு, தன்னுடன் வந்த இரு வீரர் களையும் மேலும் அங்கிருந்து சோதனை நடத் தும்படி கூறிவிட்டு, டிராவ்கின் முஷ்டக்கோவின் இருக்கைக்குச் சென்றான்.

அங்கு இளந் தலைவர்களின் கூட்டம் ஒன் றைக் கண்டான். ராணுவப் பள்ளியிலிருந்து அப் போது தான் வந்துள்ள ஜூனியர் லெப்டினன்டு கள் அவர்கள்; புதுச் சுவடு மாறாத ராணுவ உடைகளும், அகலக் காலணிகளும் அணிந்திருந் தார்கள். அவன் வந்ததும் சளசளப்பை நிறுத்தி விட்டு, மரியாதையோடு மௌனமாக அவனை வரவேற்றார்கள். மேசையின் அருகே உட்கார்ந் திருந்த டிராவ்கின் அவ்விளம் அதிகாரிகள் எல் லாரும் ஆவல் நிறைந்த விழிகளுடன் தன்னையே பார்ப்பதை உணர்ந்தான். ஆகவே அவர்களைப் பற்றி நினைக்கத் தொடங்கினான்.

இவ்வாலிபர்கள் வாழ்க்கையில் சாதிப்பதற் குரியது வெகு சுருக்கம் என்றே சொல்ல வேண் டும். உரிய வயதில் பள்ளிக்குச் செல்கிறார்கள்; படிப்படியாக அவரவர்களது தனி நம்பிக்கை களும், இன்பங்களும், துன்பங்களும் உருவாகின் றன. இவைகளின் முடிவு தான் என்ன? மங்க லான ஒரு காலைப் பொழுதில் தங்கள் வீரர் களை எழுப்பித் தாக்குதலுக்குத் தயாரித்து விடுவது தான். சில சமயங்களில் ஈரமான தரைமீது வீழ்ந்து, பின்னர் எழுவதேயில்லை.

அந்நிலையில் காணும் தலைவனைப் பற்றிச் சிற்சில சமயங்களில் போர்வீரர்கள் ''ஐயோ, பாவம்'' என்பதைத் தவிர வேறு ஒரு வார்த்தை கூடச் சொல்வதற்கு முடியாது. ஏனென்றால் அவனோடு அவர்கள் பழகியுள்ளதெல்லாம் குறு கிய காலம் தான். அவன் எப்படிப்பட்ட மனி தன்; எவ்விதமான உணர்ச்சிகளை உடையவன், எவ்விதமான எண்ணங்கள் அவனது மூளையில் வேலை செய்தன என்பதெல்லாம் அவர்களுக்குத் தெரியாது.

டிராவ்கின் ஏறக்குறைய அதே வயதுடையவன் தான் என்றாலும் அவர்களை விட முதியவன் போல உணர்ந்தான். ஏற்கெனவே நாம் ஏதோ சிறிது சாதித்துள்ளோம் என்ற எண்ணத்தில் அவனுக்கு மகிழ்ச்சி தான்; இறந்து வீழ்ந்தாலும் தன்னுடைய போர்வீரர்கள் வருத்தப்படுவார்கள். டிவிஷன் தலைவர்கூட தன் நினைவாக ஒருசில வார்த்தைகளாவது கூறுவார். ''அப் பெண்ணும் கூட — அவள் தான் காத்யா'' என்று அவளை வேறு நினைத்துக்கொண்டான்.

தான் நிற்பதே மரணத்தின் வாயிலில் என்றா லும் அங்குள்ள இளம் லெப்டினன்டுகளைப் பரி வோடும் தயையோடும் அவன் பார்க்காமலிருக்க முடியவில்லை.

அவர்களில், அவனையே உற்று நோக்கிய வண்ணம் இருந்தான் ஒரு வாலிபன்; நீலக் கண்களையுடையவன். டிராவ்கினுடைய கவனம் அவன்மீது சென்றது. வேவுவீரனின் பார்வை தன்மேல் விழுந்ததோ இல்லையோ அவ்விளை

ஞன் வெகு கூச்சத்தோடு, ''தயவு செய்து என்னையும் அழைத்துச் செல்லுங்கள். வேவுக் குழுவில் சேரவே எனக்கு மிகவும் விருப்பம்'' என்றான்.

''மிகவும் விருப்பம்'' என்று அவன் சொன்ன தோரணையைக் கேட்டு டிராவ்கின் முகத்தில் புன்னகை பூத்தது.

''நல்லது. உன்னையும் என்னோடு வருவதற்கு அநுமதிக்கும் படி, நானே செயலகத் தலைவரி டம் சொல்லி விடுகிறேன். எனக்கும் ஆட்கள் அதிகம் இல்லை.''

எனவே டிராவ்கின் தலைமைக் காரியாலயத் திற்குச் சென்ற பொழுது, லெப்டினன்ட் கர்னல் கலீயெவிடம் இவ்வேண்டுகோளையும் தெரிவித் தான். கலீயெவும் சம்மதித்து, அதற்குரிய உத்தரவு களை டெலிபோன் மூலம் அந்த இளம் லெப் டினன்ட் இருக்கும் படைப் பிரிவிற்கு உடனே அனுப்பிவிட்டார்.

இவ்வாறு வந்து சேர்ந்தவனே ஜூனியர் லெப் டினன்ட் மெஷ்சேர்ஸ்கிய். நல்ல உடற்கட்டும், நீலக்கண்களுமுடைய இருபது வயது வாலிபன். ஏராளமான புத்தகங்கள் நிறைந்த தனது சிறிய கைப்பெட்டியோடு வேவுவீரர் இருப்பிடம் வந்து அடைந்தான். ஒழிந்த நேரத்தில் வேவுவீரர் களுக்குச் செய்யுள் படிப்பான். களஞ்சிய அறைக் குள் மங்கலான வெளிச்சத்தில் அவர்களும் உட் கார்ந்து கொண்டு ராகத்தோடு வரும் அவனது சொற்களின் இசையை விடாது கேட்டுக் கொண் டிருப்பார்கள். கவியின் கலைத் திறமையும் மெஷ்

சேர்ஸ்கியின் உணர்ச்சிப் பெருக்கும் அவர்களுக்கு வியப்பை ஊட்டின.

டிராவ்கின் இல்லாத சமயத்தில் காத்யா களஞ்சிய அறைக்கு வருவாள். மெஷ்சேர்ஸ்கிய் அவளை வரவேற்றுக் கைகுலுக்கி, அமரும்படி மிக மரியாதையுடன் கூறுவான். மற்ற வேவுவீரர்களுக்கும் இது பிடித்திருந்தது. ஏனெனில் இவ்விதமாக வரவேற்கும் பழக்கத்தையே அவர்கள் ஏறக்குறைய மறந்துவிட்டனர்.

ஒரு நாள் மெஷ்சேர்ஸ்கிய் டிராவ்கினிடம் ''அந்த ரேடியோ ஆப்பரேட்டர் இருக்கிறாளே, அவள் அற்புதமான பெண்'' என்று கூறினான்.

''எந்தப் பெண்?''

''அவள் தான் காத்யா சிமக்கோவா. அடிக்கடி இங்கு வருகிறாளே அவள்தான்.''

டிராவ்கின் ஒன்றும் பேசவில்லை.

''என்ன, அவளைத் தெரியாதா உங்களுக்கு?'' என்று கேட்டான் மெஷ்சேர்ஸ்கிய்.

''எனக்குத் தெரியும். ஆனால் அவ்வளவு அதிசயிக்கும்படி அவளிடம் நீங்கள் என்ன கண்டுவிட்டீர்கள்?''

''என்ன, அப்படிச் சொல்லுகிறீர்கள்? அவள் மிக அன்புள்ளவள். வேவுகாரர்களின் துணிமணிகளைச் சலவை செய்து கொடுக்கிறாள். அவர்களும் அவளிடத்தில் பிரியங்கொண்டு ஊரிலிருந்து வரும் கடிதங்களைப் படித்துக் காட்டுகிறார்கள்; செய்திகள் எல்லாம் சொல்கிறார்கள். அவள்வந்தாலே போதும், எல்லாருக்கும் முகம் மலர்ந்து விடுகிறது. தவிர இனிமையாகப் பாடுகிறாள்.''

மற்றொரு சமயம் தனக்கு இயல்பான உற்சாகப் பெருக்குடன் மெஷ்சேர்ஸ்கிய் திடீரென்று கூறினான்:

''அவள் உங்களைக் காதலிக்கிறாள்! நான் இதை உறுதியாகக் கூறுவேன்! நீங்கள் அதைக் கவனிக்கவில்லை யென்றா சொல்கிறீர்கள்? ஏன், யாருக்கும் அது பார்த்தவுடன் தெரியுமே. ஆகா, அற்புதம், அருமை! உங்களது நல்லதிர்ஷ்டத்தைக் குறித்து நான் உண்மையில் மகிழ்ச்சி அடைகிறேன்.''

டிராவ்கின் சிரமப்பட்டுப் புன்னகையை வருவித்துக்கொண்டான்.

''ஆமாம், உங்களுக்கு அது எப்படித் தெரிய வந்தது? உங்களிடம் ஒருவேளை சொன்னாளோ?''

''இல்லை, ஏன், எனக்குத் தெரியாவிட்டால் அல்லவா அவள் சொல்ல வேண்டும்? அவள் அருமையான மங்கை என்றே நான் மீண்டும் சொல்கிறேன்.''

''ஊம், அவள் யாரை வேண்டுமானாலும் காதலிக்கக் கூடியவள்'' என்று அன்பற்ற முறையில் டிராவ்கின் கூறினான்.

மெஷ்சேர்ஸ்கிய்க்கு மூஞ்சியிலடித்தாற் போலிருந்தது. அவன் முகம் வேதனையால் சுளித்தது.

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று கை அசைத்து மறுத்தான். ''இவ்விதமான எண்ணம் உங்களுக்கு எப்படித் தான் வந்ததோ? இது உண்மையில்லை.''

''சரி, நமது இரவுப் பயிற்சிக்கு நேரமாகி

விட்டது'' என்று சொல்லி, விஷயத்தை அத்துடன் முடித்து விட்டான் டிராவ்கின்.

மிகுந்த ஆர்வத்தோடு மெஷ்சேர்ஸ்கிய் உரிய பயிற்சிகளையெல்லாம் செய்து வந்தான். சிறு குழந்தைக்கு உண்டாகும் ஆனந்தம் போல அவனுக்கும் அதில் இன்பம் உண்டாயிற்று. களைத்துப்போகும் வரை ஊர்ந்து செல்வான். பனிக்கட்டி போல் குளிர்ந்த தண்ணீரில் தைரியமாக மூழ்குவான். பிளாட்டூனின் தீரச் செயல்களைப் பற்றிய கதைகளை எல்லாம் இரவு முழுதும் உட்கார்ந்து கேட்டுக்கொண்டேயிருப்பான்.

மேன்மேலும் டிராவ்கினுக்கு மெஷ்சேர்ஸ்கியினிடம் பிரியம் அதிகரித்தது. ஒருவித உவகையுடன் நீலக்கண் வாலிபனை உற்று நோக்கிய வண்ணம், தனக்குள் சொல்லிக் கொள்வான்: ''பயல் சிங்கக்குட்டி...''

## அத்தியாயம் ஆறு

''நாளை இரவு நாம் புறப்பட வேண்டும். மையிருட்டாயிருக்குமென்று தான் நினைக்கிறேன் — வேவு நடவடிக்கைக்கு அது தானே மிக முக்கியமானது'' என்று மாமச்கின் இளம் வேவுவீரர்களிடம் பெருமிதத்தோடு கூறினான்.

அவன் குடிப்போதையில் உற்சாகமாயிருந்தான். விரைவில் வேவு நடவடிக்கைக்குக் கிளம்பப் போவது குறித்து டிராவ்கின் முன்னணிப் பகுதியைப் பார்வையிடும் அலுவலிலிருந்து மாமச்கினுக்குச் சிறிது விடுமுறை அளித்திருந்தான்.

அதைப் பயன்படுத்திக்கொண்டு உடனே மாமச் கின் ''தனது'' கிழவனைத் தேடிப் புறப்பட்டு விட்டான். அவன் திரும்பிய பொழுது ஒரு குவளை நிறையத் தேன், வீட்டில் இறக்கிய ஒரு பாட்டில் சாராயம், ஒரு டப்பா வெண் ணெய், முட்டைகள், மசாலையிட்டுச் சமைத்த மூன்று கிலோ இறைச்சி ஆகியவற்றைக் கொண்டு வந்தான். இவ்வளவு பண்டங்கள் காணிக்கை யாகக் கொடுப்பது கட்டிவராது என்று கிழவன் தயக்கத்துடன் மறுத்துப் பார்த்தான். அதற்கு மாமச்கின் துயரம் தோய்ந்த பின்வரும் பதிலை யளித்தான்:

''பெரியவரே, இதைப் பொருட்படுத்தாதே, தெரிந்ததா? மறு முறை இனிமேல் என்னை நீ பார்ப்பதோ நிச்சயமில்லை. நான் நேராகச் சுவர்க்கத்திற்கே செல்வேன். அது உறுதி. அங்கே உன் வீட்டுக்காரியைக் காண்பேன். நீ எவ்வளவு நல்ல மனிதன் என்பதைக் கட்டாயம் அவளிடம் சொல்வேன். இப்பொழுது இதைப் பற்றிய விவ காரம் எதுவும் வேண்டாம். இதுவே எனக்குக் கடைசிமுறையாக நீ கொடுப்பதாயிருக்கலாம்...''

சந்தர்ப்பங்களை உத்தேசித்துத் தனது ''பண்ட சாலையின்'' இரகசியத்தை வெளியிடுவதற்குத் துணிந்தான் மாமச்கின்; பிகோவ், செம்யோனவ் ஆகிய இருவரையும் தன்னுடன் அழைத்துச் சென்றிருந்தான். போதும் போதுமென்னும் வரை அவர்களுக்கு விதவிதமான பண்டங்கள் கொடுத்தான். மகிழ்ச்சி பொங்கச் சிரித்துக் கொண்டு, அடிக்கடி அவர்களிடம், ''என்ன, எப்

படியிருக்கிறது?'' என்று கேட்பான.

மாமச்கினுக்கு ஏற்பட்டுள்ள இன்னதென்று புரியாத மந்திர சக்தி வாய்ந்த இவ்வதிர்ஷ்டத்தைக் கண்டு அதிசயத்தில் ஆழ்ந்து விட்டான் செம்யோனவ்.

''ரொம்பப் பிரமாதம்! ஆமாம், இதெல்லாம் உனக்கு எப்படி?...''

ஆனால் பிகோவ் இதில் ஏதோ சூது இருக்க வேண்டுமென்று உடனே சந்தேகித்தான்.

''மாமச்கின், எச்சரிக்கை லெப்டினன்ட் கண்டு பிடித்துவிடுவான்'' என்று அவன் எச்சரித்தான்.

கிழவனுடைய வயலைக் கடந்து செல்கையில் ஏரில் பூட்டிய ''தனது'' குதிரைகளை மாமச்கின் கடைக்கண்ணால் ஒரு தடவை நோட்டமிட்டான். அவைகளை அக்கிழவனுடைய மகனும் மருமகளும் ஓட்டிக்கொண்டிருந்தனர். மகன் கூனன், அசமந்தன், பேசாவாயன். அவனுடைய மனைவியோ உயரமான, அழகிய நங்கை. வெள்ளைச் சுட்டி வாய்ந்த பெரிய இளஞ்சிவப்புக் குதிரையைக் கண்டதும், மாமச்கினுக்கு அது வேவுவீரர்கள் முன்னாள் தங்கியிருந்த வீட்டுக்காரக் கிழவிக்குச் சொந்தமானது என்பது நினைவிற்கு வந்தது.

''அந்தக் கிழவி நம்மை எப்படித் திட்டிச் சபித்துக் கொண்டிருப்பாளோ'' என்ற எண்ணம் அவன் மனத்தில் பளிச்சிட்டது. மனச்சாட்சியால் உண்டாகும் வேதனை ஒரு நொடிப் பொழுது இருந்து மறைந்தது. ·ஏனெனில் இப்பொழுது இதெல்லாம் முக்கியமல்ல. இதோ,

வேவு நடவடிக்கைக்குப் போக வேண்டும். அது எப்படி முடியுமென்று யார் கண்டது?

மாமச்கின் வேவுவீரர்களின் பாசறையில் நுழைந்தான். அங்கே டிராவ்கின் கதிரடிக்கும் எந்திரத்தின் அருகே பென்சிலும் கையுமாக உட்கார்ந்து தாய்க்கும் தங்கைக்கும் கடிதமெழுதத் தயாராகிக் கொண்டிருந்தான். அதைக் கண்டதும் மாமச்கின் முகம் வெளுத்தது; கண்களில் பயத்தின் அறிகுறி தென்பட்டது. மெதுவாய் லெப்டினன்ட் அருகில் செல்லவே, ''என்ன விஷயம்?'' என்று கேட்பது போல், டிராவ்கின் அவனைப் பார்த்தான்.

''தோழர் லெப்டினன்ட்'' என்றான் மாமச்கின். ''ரேடியோ செட் என்ன ஆயிற்று? நாம் போகும் பொழுது ஒன்று கிடைக்குமா?''

''ஆமாம், பிராஜ்னிகவ் அதற்காகத்தான் போயிருக்கிறான்.''

''ரேடியோ வேலை தெரிந்தவன் ஒருவன் வேண்டுமே.''

''நானே அதைக் கவனித்துக் கொள்வேன். இதற்கென்று தனி ஆள் அவசியமில்லை. வருகிறவன் கோழையாகவோ, தடுமாறியாகவோ இருந்து விட்டால் பிறகு என்ன ஆகும்? வேண்டாம், நாமே அதைப் பார்த்துக் கொள்வது நல்லது. எனக்கும் ரேடியோவைப் பற்றிச் சிறிது தெரியும்.''

''அப்படியா...''

மாமச்கினுக்கு மேலே பேசுவதற்கு எதுவுமில்லை; என்றாலும் சிறிது நேரம் அங்கேயே

தயங்கித் தயங்கி நின்று கொண்டிருந்தான்.

''தோழர் லெப்டினன்ட், மசாலை இட்டபன்றி இறைச்சி சிறிது வேண்டுமா?'' என்று முடிவில் மென்று விழுங்கிக்கொண்டு கேட்டான்.

''மறுபடியும் குடியானவர்களைச் சூறையாட ஆரம்பித்துவிட்டாயா?'' என்று லெப்டினன்ட் தன் மீது எரிந்து விழுவான் என எதிர்பார்த் தான் மாமச்கின். ஆனால் டிராவ்கின் வேண் டாம் என்று சுருக்கமாக நன்றிடன் மறுதலித்து விட்டுக் கடிதம் எழுதுவதில் முனைந்தான். பின் மாமச்கின் ஏதோ நினைத்துக்கொண்டது போல, திடீரென்று குரல் தடுமாற, ''தோழர் லெப்டி னன்ட், இங்கிருந்துகொண்டு கடிதம் எழுத வேண்டாமே'' எனக் கூறினான்.

''என்ன நேர்ந்துவிட்டது உனக்கு?'' என்று வியப்புடன் கேட்டான் டிராவ்கின்.

''மார்சென்கோவும் புறப்படு முன்பு கதிர டிக்கும் இந்த எந்திரத்தின் அருகே அமர்ந்து கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். இது கெட்ட சகுனம். எங்கள் ஊரிலுள்ள செம்படவர்கள் இந்தச் சகுனங்களை நம்புகிறவர்கள். அவர்கள் கூறுவது சரிதான் என்று நானும் உறுதியாக நினைக்கிறேன்.''

''அட சே, மாமச்கின். அதெல்லாம் பாட்டிக் கதை'' என்று கேலியாகப் பதிலளித்தான் டிராவ் கின். எனினும் அவனது குரலில் கடுமையில்லை.

பிறகு மாமச்கின் அப்பால் சென்றான். டிராவ் கின் மறுபடியும் தனது பென்சிலை எடுத்தான். ஆனால் அச்சமயம் நுழைவாயில் அருகே கிடந்த

இருண்ட வைக்கோல் குவியலின் மேல் அவனது பார்வை விழுந்தது. அதன் ஓரத்தில், நாள் பட்டதால் அழுக்கேறி, மழை நீரிலும் வியர்வை யிலும் நனைந்த தோற்பை ஒன்று கிடந்தது. அது மார்சென்கோவின் பை.

டிராவ்கின் கடிதத்தை எழுதி முடிக்கவில்லை. அதற்குள்ளாகச் சிறிய ரேடியோ செட்டும் தானு மாக, பிராஜ்னிகவ் வந்து சேர்ந்தான். அவ னைத் தொடர்ந்து பிரிவின் செய்தி அறிவிப்பு இலாகாத் தலைவனான மேஜர் லிகச்சோவும் காத்யாவும் இன்னும் இரு ரேடியோ ஆப்ப ரேட்டர்களும் வந்தனர். மறுபடியும் லிகச்சோவ் மறை சொற்களாலான வரைப்படத்தையும் அதன் விளக்க அட்டவணையையும் டிராவ்கி னுக்குத் தெளிவுபடுத்தினான்:

''இதோ பார், டிராவ்கின். எதிரிகளின் டாங்கி களுக்கான குறிச்சொல் '49', காலாட்படைக்கு '21'. படம் சதுரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்தப் பகுதியில் இருக்கும் டாங்கிகளைப் பற்றித் தகவல் கொடுக்க விரும்புகிறாய் என்று வைத்துக் கொள். 'நாற்பத்து ஒன்பது, காளைச் சதுக்கம் நான்கு' என்று நீ சொல்ல வேண்டும். காலாட் படையாயிருந்தால் 'இருபத்து ஒன்று காளை நான்கு' என்றும், இதே போல மற்றவை களை யும் கூற வேண்டும்.''

கடைசித் தடவை அவர்கள் பயிற்சி நடத்தி னார்கள். சோதனைக் கூட்டத்தின் ரேடியோ அழைப்புக் குறி ''விடி வெள்ளி'', டிவிஷனின் அழைப்புக் குறி ''பூமி''.

மறைபொருளிலுள்ள புதிய, விசித்திரமான சொற்கள் பல, களஞ்சிய அறையின் அமைதியில் ஒலித்தன. லிகச்சோவ், டிராவ்கின் ஆகிய இரு வரையும் சுற்றி நின்ற வேவுவீரர்கள் மயிர்க் கூச்சலுடன் இவைகளைக் கவனித்தனர்.

''பூமி... விடி வெள்ளி பேசுவது. பேசுவது விடி வெள்ளி. இருபத்து ஒன்று, எருமை மூன்று —இருபத்து ஒன்று, எருமை மூன்று. முடிந்தது.''

லிகச்சோவும் உள்ளக் கிளர்ச்சியுடன் மந்த மான கனத்த குரலில் பதிலளித்தான்:

''விடி வெள்ளி, பூமி பேசுவது. விடி வெள்ளி, பூமி பேசுவது. நான் சரியாகப் புரிந்து கொண் டேனா, இல்லையா என்று பார். திருப்பிச் சொல்கிறேன்: 'இருபத்து ஒன்று, எருமை மூன்று. முடிந்தது.' ''

''பூமி, விடி வெள்ளி பேசுவது, சரிதான். மேலும் தொடர்ந்து சொல்கிறேன்: 'நாற்பத்து ஒன்பது, புலி இரண்டு.' ''

இந்த அதிசயமான வானுலக உரையாடல் களஞ்சிய அறையின் அமைதியில் மேலும் நடந்து கொண்டிருந்தது. அதைக் கவனித்த வீரர்களுக்கு வான வெளியில் தாங்கள் மறைந்து விட்டது போலவே இருந்தது. ஆனால் விட்டங்களுக்கு நடுவே கூடுகட்டியிருந்த தகைவிலாங் குருவி களோ ஒரு கண நேரங்கூட, தங்கள் கவலையற்ற உழைப்பை நிறுத்திவிட்டு வாளாயிருக்கவில்லை.

வெளியே செல்கையில் லிகச்சோவ் டிராவ்கின் கையை நன்கு அழுத்திக் குலுக்கிவிட்டுக் கூறி னான்:

''எதற்கும் ஓர் ஆப்பரேட்டர் உன்னோடு வந்தால், என்ன? தகுந்த இளைஞர்கள் என்னிட மிருக்கிறார்கள்; அவர்களும் வேவு நடவடிக்கை யில் கலந்து கொள்ள விரும்புகிறார்கள். இன்று கூட, புதிதாய் வேறொரு ஆளின் வேண்டு கோள் வந்திருக்கிறது'' — அத்துடன் முகத்தில் ஒரு அசட்டுச் சிரிப்பு — ''ஜூனியர் சார்ஜென்ட் சிமக்கோவாவிடமிருந்து. அவள் உன்னோடு வரு வதற்கு விரும்புகிறாள்.''

இதைக் கேட்டதும் டிராவ்கின் முறைத்துப் பார்த்தான்.

''வேண்டவே வேண்டாம், தோழர் மேஜர்! எனக்கு ஆப்பரேட்டர் யாருமே தேவையில்லை. நாங்கள் பூங்காவில் உலாவப் போகவில்லை தெரிகின்றதா?''

இதய பூர்வமான தனது வேண்டுகோளுக்குக் கிடைத்த கருணையற்ற மறுதலிப்பைக் கேட்ட தும், காத்யா அவ்விடத்தை விட்டே ஓடிவிட் டாள். டிராவ்கினுடைய இகழ்ச்சிச் சொற்கள் அவள் மனத்தைக் குதறிப் புண்படுத்திவிட்டன.

''எவ்வளவு கொடிய மரியாதை அற்ற மனி தன்!'' என அவள் எண்ணினாள். நெஞ்சில் ஆத்திரம் பொங்கி வழிந்தது. ''இப்படிப்பட்ட மனிதனைப் போய்க் காதலித்தேனே! எவ்வளவு முட்டாள்தனம்...''

காப்டன் பராஷ்கினுடைய இருப்பிடத்தைக் கடந்து செல்லும் போது, அவள் நடையைத் தளர்த்திக் கொண்டாள். எரிச்சலைத் தீர்த்துக் கொள்வதற்காகவாவது உள்ளே போக வேண்டு

மென்று விரும்பினாள். காப்டன் செய்த தேன் கசியும் உபசரணைகள், அவன் காட்டிய மரியா தை, அவனது மெல்லிய குரல், அவன் மந்தன மாக உரைத்த காதல் மொழிகள் எல்லாம் சட்டென அவள் நினைவுக்கு வந்தன. அந்த நினைவு அவளுக்கு இதமாயிருந்தது. பராஷ்கின் சொன்ன காதல் மொழிகளென்னவோ, சுவை நைந்த பழஞ்சொற்கள் தாம். எனினும் தனி மையில் ஏங்கும் உள்ளத்திற்கு அவை அமுதம் போலிருந்தது இயல்பே அல்லவா? மனத்தில் அவனைப் பாராட்டத் தொடங்கினாள். அவை களில் குறிப்பிட்ட சிறப்போ, அல்லது கவர்ச்சி யோ இல்லை. கவிதைகளும் பாட்டுகளும் எழுதி யிருந்த அவனுடைய தடித்த குறிப்பேட்டைக் கூட அவள் இப்போது மகிழ்வுடன் நினைவு கூர்ந்தாள். அம்மனிதனுடைய சொற்களும் செ யல்களும் மிகச் சாதாரணமானவை, எளிதில் புரிந்து கொள்ளக்கூடியவை. அவ்வாறு இருப் பதில் தான் இன்பம் என்று இப்பொழுது அவ ளுக்குப்பட்டது.

எனவே, அவனுடைய நிலவறைக்குள் நுழைந் தாள். சிறிது ஆச்சரியமடைந்த போதிலும், பராஷ்கின் மகிழ்ச்சி தோன்றப் புன்சிரிப்போடு அவளை வரவேற்றான். டிராவ்கின் இப்போது புறப்பட்டுச் செல்வதினால், தன்னையும் இழந்து விடக்கூடாதென்று தீர்மானித்துக்கொண்டு, அத் தந்திரக்காரி தன்னிடம் வந்திருக்கிறாள் என்ற எண்ணம் அவன் மனத்தில் உதித்தது. சினிமாப் படங்களிலிருந்தும், காதல் சிந்துகளிலிருந்தும்

பொறுக்கி எடுக்கப்பட்ட பாட்டுகள் பலவற்றைக் கொண்ட அந்தக் குறிப்பேட்டை எடுத்து வந்தான். ஆனால் காத்யாவோ அன்று பாடும் நிலையில் இல்லை.

மொழிபெயர்ப்பாளனை அவ்விடத்திலிருந்து போகச் செய்வதற்கு பராஷ்கின் பெரிதும் முயன்றான். முடிவில் அவன் வெளியேறியதும் பராஷ்கின் சந்தோஷமாய்ச் சிரித்துக் கொண்டு காத்யாவின் மேல் கைகளைப் போட்டான். அவளுக்கு அது பெரும் வெறுப்பை அளித்தது. உடனே அவனை ஒரு தள்ளு தள்ளிவிட்டு, சலசலக்கும் காட்டிற்குள் ஓடிவிட்டாள். இனி ஒருக்காலும் கூடாது. ''வழக்கமாயுள்ள'' இவ் விவகார மனைத்தும் இப்பொழுது அவளுக்கு ஒவ்வாததாயும் அருவருப்பைத் தருவதாயும் இருந்தது. அவள் கண்களில் நீர் வழிந்தது.

இதற்கிடையில் டிராவ்கின் மனத்திற்குப் பிடிக்காத சொல்லாடலில் ஈடுபட்டிருந்தான்.

எளிமையும் சாந்தமும் கொண்ட விசாரணை அதிகாரி, புள்ளிமுகக் காப்டன் எஸ்கின் வேவுகாரர்களின் பாசறைக்கு வந்திருந்தான். இப்பொழுது நடந்த உரையாடலில் வானுலகைப் பற்றிய செய்தி எதுவுமில்லை. நீர் சுவறாத் துணித்திரைக் கப்பால் டிராவ்கினுடன் எஸ்கின் உட்கார்ந்து இருந்தான். எப்பொழுது, எவ்வாறு, எதற்காக, எந்தச் சந்தர்ப்பத்தில் குதிரைகள் வாங்கப்பட்டன, திருப்பிக் கொடுக்கப்பட்டன, திருப்பிக் கொடுத்ததற்கான ரசீது ஏன் வாங்கிக்

கொள்ளவில்லை என்று ஒவ்வொரு செய்தியை யும் டிராவ்கினிடம் இருந்து விவரமாக விசாரித் தான்.

எல்லாம் எவ்வாறு நிகழ்ந்தன என்பதை டிராவ் கின் மனச் சடைவுடன், ஆனால் விவரமாகச் சொல்லி வந்தான். ரசீதைப் பற்றிய பேச்சு வந்தபோது சிறிது நேரம் நிதானித்து யோ சித்துப் பார்த்தான். அடேடே, இரு குதிரை களை மறு நாள் அனுப்புவதற்காக வைத்திருந் தான். மாமச்கின் தான் அவைகளைத் திரும்பக் கொடுத்துவிட்டு வந்தவன்.

மாமச்கினைக் கூப்பிட்டான்; அவனோ அச் சமயம் அங்கு காணவில்லை. காப்டன் எஸ்கின் சற்று நேரத்தில் மீண்டும் வருவதாகக் கூறினான். அவ்விடத்தை விட்டுக் கிளம்புமுன் போகிற போக்கில் பார்ப்பது போல அறையை நோட்ட மிட்டான். மாமச்கின் ஒருவனது படுக்கைமீது வெண்ணிற மேசை விரிப்பும் மற்றப் படுக்கை கள்மீது நீர் சுவறாத் துணிகளும் போர்த்தியிருந் தது அவன் கண்ணில் பட்டது. ஆனால் அவன் ஒன்றும் கூறாமல் வெளியேறினான்.

மாமச்கின் திரும்பி வந்ததும், அவனைத் தன் னிடம் வருமாறு டிராவ்கின் அழைத்தான். ஆனால் சிறிது யோசித்துவிட்டுக் குதிரைகளைப் பற்றிய பேச்சை அவனிடம் எடுக்காமலே விட்டு விட்டான். என்னவானாலும் இப்பொழுது அவன் தன்னோடு சோதனைக் குழுவில் வருவ தற்குள்ளவன். ஆகவே, பழைய குப்பையைக் கிளற வேண்டாமென்று தீர்மானித்து

இரண்டு மணி நேரமாக எங்கே சென்றிருந்தாய் என்று மட்டும் கேட்டான். தான் ஸேப்பர்களிடம் சென்றிருந்ததாக விடையளித்தான் மாமச்கின். அத்துடன் அவர்கள் பேச்சும் முடிந்தது.

புகோர்கோவைப் பார்ப்பதற்கு டிராவ்கினும் மெஷ்சேர்ஸ்கியும் புறப்பட்டனர். மெஷ்சேர்ஸ்கிய் எதையோ பற்றிக் கவலை கொண்டிருப்பது போல் தோன்றிற்று. திடீரென்று அவன் சொன்னான்:

''டிராவ்கின், நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள், நான் காத்யாவைக் கூட்டிக் கொண்டுவரத்தான் போகிறேன். நீங்கள் ஒன்றையுமே கவனிப்பதில்லை. நான் அறிந்தவரையில் அவளுக்காகப் பெரிதும் வருந்துகிறேன். அவள் வெளியே ஓடிய பொழுது எவ்வளவு வேதனையுடன் சென்றாள் தெரியுமா? ஓ, டிராவ்கின், நீங்கள் அவளை இவ்வாறு நோக அடித்திருக்கக் கூடாது.''

புகோர்கோவின் நிலவறைக்கு அவன் காத்யாவை அழைத்து வந்தான். அவள் மிகவும் நாணத்தோடு இருந்தபோதிலும் டிராவ்கினுடைய குற்றமுள்ள பார்வையைக் கவனிக்காமலில்லை. உடனே மனத்தில் இனிய நம்பிக்கைகளும் பிறந்தன. டிராவ்கினுக்கு மகிழ்ச்சி தரும் சம்பவத்துடன் அம்மாலைப் பொழுது முடிவடைந்தது.

அவர்கள் எல்லாரும் மிகக் களிப்புடன் பேசிக் கொண்டிருந்தனர். திடீரென்று பிராஜ்னிகவ்

மூச்சு வாங்க அறைக்குள் பாய்ந்தான்; தனது குல்லாவைக்கூட மறந்துவிட்டான். சணல் மயிர் நெற்றியில் சிதறிக் கிடந்தது. கண்கள் பிரகாசித் தன.

''தோழர் லெப்டினன்ட், உங்களைப் பார்ப் பதற்கு யாரோ ஒருவன் வந்திருக்கிறான். சீக்கிரம் வந்து பாருங்கள்'' என்றான்.

களஞ்சிய அறையைச் சுற்றி ஒரே கூச்சல். வேவுவீரர்கள் டிராவ்கினிடம் ஓடினர். ''வந்தி ருப்பது யார் என்று பாருங்கள்!'' எனக் கூக் குரலிட்டனர்.

டிராவ்கின் அவர்களைக் கையமர்த்திவிட்டு ஏறிட்டுப் பார்த்தான். வாயெல்லாம் பல்லாக நகைத்த வண்ணம், சாமர்த்தியம் சுடரும் கண் கள் பிரகர்சிக்க, அனிக்கானவ் தான் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தான். தனது மேலதி காரியான லெப்டினன்டைத் தழுவிக் கொள் வது முறையல்ல என்ற திகைப்புடன், அவனை நெருங்கி ஒரு காலிலிருந்து மற்றொரு காலாக மாறி, மாறி நின்றவாறு அனிக்கானவ்:

''நல்லது, தோழர் லெப்டினன்ட், நான் இங் கேயே வந்துவிட்டேன்'' என்று கூறினான்.

டிராவ்கின் அவன் மீது வைத்த கண் வாங் காமல் அடித்த சிலைபோல நின்றான். பேச நாவெழவில்லை என்றாலும் தோள் மேலிருந்த ஒரு பெரும் பாரம் திடீரென்று நீங்கியதே போன்ற ஓர் உணர்ச்சி டிராவ்கினுக்கு ஏற் பட்டது. கடந்த பல வாரங்களாகத் தனக்குச் சங்கடத்தைக் கொடுத்து வந்த சந்தேகங்கள்,

சஞ்சலங்கள் இவைகளின் ஆழத்தை அப்பொழுது தான் அவன் அறிந்துகொண்டான்.

கடைசியில் சிறிய மேசையின்முன் இருவரும் உட்கார்ந்தனர்.

''சரிதான், நீ எவ்வாறு இங்கே வந்து சேர்ந் தாய்? ஒரேயடியாய் இங்கேயே திரும்பி வந்தி ருக்கிறாயா, வேறொரு தொகுதிக்குப் போகும் வழியில் பார்த்துவிட்டுப் போவோம் என்ற நினைப்புடன் வந்திருக்கிறாயா?'' என்று டிராவ் கின் அனிக்கானவிடம் கேட்டான்.

''என்னை வேறொரு தொகுதிக்குத் தான் போட்டிருக்கிறார்கள்'' எனப் பதிலளித்தான் அனிக்கானவ். ''நமது பழைய தோழர்களையும் லெப்டினன்டையும் பார்த்துவிட்டுப் போவோம் என்று எண்ணி, ரயிலை விட்டு வந்தேன். எங்கள் டிவிஷனைச் சேர்ந்த ஒருவன், நீங்கள் இன்னும் இங்குதான் இருக்கிறீர்கள் என்று என் னிடம் சொன்னான்.'' சிறிது நேரம் அனிக் கானவ் எதுவும் பேசவில்லை. கடைசியில் புன் சிரிப்புடன், ''அங்கு போய், பிறகு பார்த்துக் கொள்ளலாம் என நினைத்தேன்'' என்று முடித் தான்.

உணவும் வோத்காவும் அனிக்கானவிற்குக் கொண்டு வரப்பட்டன. நன்றாகச் சுவைத்துக் கொண்டே, அவசரமின்றிச் சாப்பிட்டான். நாட்டுப்புற மரியாதையோடு சமையல்காரனை ஒவ்வொரு உணவு வகைக்கும் வாழ்த்தினான். இவைகளைக் கண்டு மகிழ்ச்சியடைந்தான் டிராவ் கின். அதே நிதானமான முறையில், அனிக்

*கானவ் மேலும் கூறினான்: ''ரிஸெர்வ் படை வயலில் விதைப்பு முடிந்ததும், என்னைப் போர் முனைக்கு அனுப்புமாறு விண்ணப்பம் செய்து கொண்டேன். புதுப்படைத் தொகுதி ஒன்றிற்கு நியமிக்கப்பட்டேன்.''*

*பிறகு, ''நீங்கள் ஜெர்மானியரின் பின்ன ணிக்குப் போகிறீர்கள் அல்லவா?'' என்று லெப்டி னன்டைக் கேட்டான். ''யார் உங்களுடன் வரு கிறார்கள்?''*

*''இதோ உள்ள ஜூனியர் லெப்டினன்ட் மெஷ் சேர்ஸ்கிய், மாமச்கின், பிராஜ்னிகவ், பிகோவ், செம்யோனவ், கோலுப்.''*

*''மார்சென்கோ இல்லையா? அவன் எங்கே?''*

*சுற்றியிருப்பவர்களின் வாட்டமுற்ற முகங் களைக் கண்டதும், அத்துடன் நிறுத்திக்கொண் டான். விஷயத்தைப் புரிந்துகொண்டு நளின மாகத் தனது சாப்பாட்டுத் தட்டை அப்பால் நகர்த்தி வைத்தான். ஒரு சிகரெட்டைச் சுருட் டிக்கொண்டு மேலும் சொன்னான்:*

*''நல்லது, அவன் எப்பொழுதும் நம் நினை விலிருப்பானாக.''*

*சிறிது நேரம் யாரும் பேசவில்லை. பின் டிராவ்கின் அனிக்கானவைக் கேள்விக் குறிப் போடு பார்த்துக்கொண்டே, ''சரி, உன் விஷ யம் என்ன? என்னுடன் வருகிறாயா, அல்லது நியமித்திருக்கும் இடத்திற்குப் போகிறாயா?'' என்று கேட்டான்.*

*அனிக்கானவ் உடனே பதிலளிக்கவில்லை. தான் ஒருவரையும் பார்க்காவிட்டாலும் வீரர்*

களெல்லாரும் தன்னுடைய பதிலைக் கேட்க ஆவலுடன் எதிர் பார்க்கிறார்கள் என்பதை அவன் அறிந்துகொள்ள முடிந்தது.

''உங்களோடு வரலாம் என்று தான் எண்ணம். நீங்கள் என்னுடைய பட்டாளத்திற்கு எழுதி விடுங்கள். சார்ஜென்ட் அனிக்கானவ் எங்கும் கள்ளத்தனமாய் ஓடி விடவில்லை என்பதையும், இன்னும் தெரியப் படுத்த வேண்டிய வேறு விஷயங்கள் எவை யெல்லாம் உண்டோ அவை களையும் எழுதி அனுப்புங்கள்'' என்றான்.

கதவோரத்திலிருந்து இவ்வுரையாடலை அதி சயத்தோடும் பொறாமையோடும் கவனித்துக் கொண்டிருந்தான் மாமச்கின். அனிக்கானவ் ஒரு வன்தான் இவ்வாறு செய்யமுடியும் என்பதும் அவ னுக்குத் தெரியும். அந்த நிமிடம், தான் அனிக் கானவாக இருப்பதற்குத் தன் உயிரை வேண்டு மானாலும் கொடுத்திருப்பான் மாமச்கின்.

இதற்கிடையே அனிக்கானவ் தன்னைச் சுற்றி லும் கண்ணோட்டம் இட்டுக் கொண்டிருந்தான். வைக்கோலின் மேலிருந்த நீர் சுவறாத் துணி களையும், பச்சை நிற உருமாற்றுடைகளையும், மூலையிலுள்ள எறிகுண்டுக் குவியலையும், சுவர் களில் தொங்கிய துணை எந்திரத் துப்பாக்கி களையும், வீரர்களின் இடைவாரிலுள்ள குட் டைக் கத்திகளையும் கண்டான். வாழ்க்கை இன்னதென்பதை அறிந்துள்ள தத்துவ ஞானி யைப் போல் பெரு மூச்செறிந்து, இப்பொழுது தான், தனக்குப் பிடித்தமான இடத்தில் இருப்ப தாக எண்ணி மகிழ்ந்தான்.

டிராவ்கினுடைய கவலையும், சிடுசிடுப்பும் போய்விட்டன. தன்னிடமிருந்த தேசபடத்தை எடுத்து வேவுக் குழுவின் செயல் திட்டத்தை அனிக்கானவிற்கு விளக்கப் புறப்பட்டான். அப் பொழுது தலைமைச் செயலகத்திலிருந்து ஒரு வன், டிவிஷன் தலைவர் டிராவ்கினைத் தம்மிடம் வரும்படி அழைப்பதாகச் செய்தி கொணர்ந் தான். எனவே, வேவுச் சோதனை பற்றிய எல் லா விஷயங்களையும் அனிக்கானவிற்கு எடுத்துச் சொல்ல மெஷ்சேர்ஸ்கியை ஏற்பாடு செய்துவிட்டு டிராவ்கின் கர்னலைப் பார்க்கச் சென்றான்.

டிவிஷன் தலைவரின் குடிசையில் வெளிச்சம் தெரியவில்லை. கர்னல் ஸெர்பிசேன்கோவிற்கு உடம்பு சரியில்லை. ஆகையால் சன்னலின் பக்கத் திலிருந்த கட்டிலின் மேல் செயலக அதிகாரியின் அறிக்கை யொன்றைக் கேட்டவாறு படுத்திருந் தார்.

''என்னப்பா மரவுரி மிதியடி போட்டிருக் கிறாய்?''

டிராவ்கினைப் பார்த்ததும் வழக்கத்திற்கு மா றான மிதியடிகள்தான் முதலில் அவருடைய கவனத்தைக் கவர்ந்தன.

''இவைகளைப் போட்டுப் பழகிக்கொண்டு வரு கிறேன், தோழர் கர்னல். ரியஸான் பகுதியிலி ருந்து வந்துள்ள செம்யோனவ் எங்கள் வீரர்கள் அனைவருக்கும் இம்மாதிரி மிதியடிகள் செய்து கொடுத்திருக்கிறான். இவை சத்தம் செய்வதில் லை; காலுக்கு இதமாகவும் இருக்கின்றன.''

கர்னல் ஆமோதிக்கும் முறையில் ஒரு கனைப் புக் கனைத்து, ''இந்த வேவுவீரர்கள் எவ்வளவு கெட்டிக்காரர்கள் பார்த்தாயா!'' என்று சொல் வது போலச் செயலகத் தலைமை அதிகாரி, லெப்டினன்ட் கர்னல் கலீயெவை வெற்றிக் குறிப் போடு பார்த்தார்.

கர்னல் ஸெர்பிசேன்கோ அடிக்கடி ஆபத்தான வேலைகளுக்குத் தம் வீரர்களை அனுப்ப வேண் டியதிருந்தது. ஆனால் இன்று டிராவ்கினைக் குறித்து அவர் ஒருவாறு வருத்தப் பட்டார். கர்னல் செம்யோர்கின் சொல்லியது நிச்சய மாய்ச் சரிதான். படைத் தலைமைச் செயலகத் தைப் பொருத்த வரையில் வேவு நடவடிக்கை என்பது பெரிய காரியம் அல்ல; அங்கங்கேயுள்ள அதிகாரிகளின் வழக்கமான வேலை அது. அறிக் கைகள், தகவல் குறிப்புகள், செயல் படங்கள், பெருத்த அளவில் செய்துள்ள தீர்மானங்கள், முடிவுகள் ஆகியவைகளைக் கொண்டது. ஸெர்பி சேன்கோவிற்கோ மரவுரி மிதியடிகளும் பச்சை உருமாற்றுடையும் அணிந்து மீசை, தாடியுடன் அழகான வனதேவதை போலத் தோற்றமளித்த இவ்வாலிபன் வேறுவிதமாக இருந்தான்.

அபாயகரமான வேலை மேற்செல்லும் மகனி டம் தந்தையோ, தாயோ சொல்லும் வார்த் தைகளை டிராவ்கினுக்குத் தாம் கூற வேண்டு மென்ற ஆர்வம் அவருக்கு ஏற்பட்டது. ''எச் சரிக்கையாக இருந்து கொள். கடமையைச் செய்து முடிக்க வேண்டியதுதான். ஆனால் அதற் காகப் பல அபாயங்களுக்கு உள்ளாக வேண்டு

மென்பதில்லை. போர் எல்லாம் சீக்கிரம் முடிந்து போகும்'' என்று சொல்வதற்கு அவரது நா துடித்தது.

ஆனால் தாமே முன்பு வேவுவீரராக இருந்தவர் அவர். புறப்பட்டுச் செல்லும் போது கூறும் இப்படிப்பட்ட சொற்களால் ஒரு நன்மையும் உண்டாகாது என்பது அவருக்கு நன்கு தெரியும். அவை மிகுந்த கடமையுணர்ச்சி உள்ளவனுக்குங் கூட அசதியை உண்டாக்கிவிடும். உளவுச் சோதனையின் போது ஒருவன் எத்தனையோ விஷயங்களை மறந்து விடுவான்; ஆனால் பெரிய அதிகாரியிடமிருந்து வந்த ''எச்சரிக்கையாக இருந்து கொள்'' என்பன போன்ற சொற்கள் மட்டிலும் மறந்து போகா. எடுத்த காரியம் நிச்சயமாய்த் தோல்வி அடைவதுதான் அவற்றால் விளையும் பயன். ஆகையால் டிராவ்கின் கையைக் குலுக்கிவிட்டு, ''விழிப்பாய் இரு!'' என்று மட்டுமே கர்னல் கூறினார்.

## அத்தியாயம் ஏழு

உருமாற்றுடையைப் போட்டுக் கொண்டு, அதன் மேலுள்ள சுருக்குக் கயிறுகளை எல்லாம் கணுக்கால்களுக்கு மேலும், இடுப்பிலும், முகவாய்க் கட்டையின் கீழும், கழுத்துப் பிடரியிலும் நன்றாக இழுத்துக் கட்டிக்கொண்ட பிறகு வேவுவீரன் உலகக் கவலைகள் அனைத்தையும் — அவை பெரியவைகளாயிருப்பினும் சரி, சிறியவைகளாயிருப்பினும் சரி — அறவே துறந்து விடுகி

றான். அவன் தனக்கோ, தன்னுடைய தலைவர் களுக்கோ, பழைய நினைவுகளுக்கோ உரியவன் அல்ல. இடைவாரில் எறிகுண்டுகளையும் கத்தி யையும் கட்டிக்கொள்கிறான்; மார்புக்கு அடுத் தாற் போல ஒரு ரிவால்வரைச் செருகிவைத்துக் கொள்கிறான். இவ்வாறு மனிதர்களுக்குரிய மரபு ஒழுங்குகளை எல்லாம் உதறிவிடுகிறான். அந்த நிமிடத்திலிருந்து அவன், தன் பலத்தையே நம்பி யுள்ள சட்டப் புறம்பான நபர் ஆகிவிடுகிறான். தனக்குரிய தஸ்தாவேசுகளையும், கடிதங்களை யும், போட்டோ படங்களையும், விருதுகளை யும், பதக்கங்களையும் சார்ஜென்ட் மேஜரிடம் ஒப்படைத்து விடுகிறான். கம்யூனிஸ்ட் கட்சிச் சீட்டையோ, கம்யூனிஸ்ட் இளைஞர் சங்கச் சீட்டையோ கட்சி அமைப்பாளரிடம் கொடுத்து விடுகிறான். இதயத்தே ஊடாடும் நினைவுகளை அன்றித் தனது இறந்தகால வாழ்க்கையை யும் எதிர்கால வாழ்க்கையையும் துறந்துவிடு கிறான்.

இனங் கண்டுகொள்ள முடியாத காட்டுப் பறவை அவன். மனிதர் பேசும் மொழியைக்கூட அவன் கைவிட்டுவிடக் கூடும். தோழர்களை அழைப்பதற்குப் பறவைகளைப் போலவே கூவி னால் போதுமானது. காடுகள், வயல்கள், நீர்க் கால்கள் ஆகியவைகளுடன் அவனும் ஒன்றி, அந்த இடங்களுக்குரிய ஆவியாகி விடுகிறான். அதுவும் எப்படிப் பட்ட ஆவி? அபாயகரமான ஆவி, தாக்குவதற்குப் பதிபோட்டுக் காத்திருக் கும் ஆவி. அவனுடைய அறிவு முழுவதும்

ஒரே நோக்கத்தில் — அவனுடைய கடமையில் குறியாயிருக்கிறது.

இவ்வாறு தொடங்குகிறது மனிதன், மரணம் என்ற இரண்டே ஆட்டக்காரர்களைக் கொண் டதும் தொன்று தொட்டு நடந்து வருவது மான விளையாட்டு.

வேவுவீரர்கள் முன்னணிப் பகுதிகளுக்குச் சென் றிருந்தார்கள். மெஷ்சேர்ஸ்கிய், புகோர்கோ வுடன் கூட டிராவ்கின் பின்னால் புறப்பட்டான். மெஷ்சேர்ஸ்கிய் மிகவும் வருத்தத்துடன் இருப் பதுபோல் காணப்பட்டான். அனிக்கானவ் திரும் பிவந்த செய்தியைக் கேட்டதும் லெப்டினன்ட் கர்னல் கலீயெவ் சிறிது நேரம் யோசனை செய்து விட்டு, டிராவ்கினுக்குப் பதிலியாக மெஷ் சேர்ஸ்கிய் இருந்து வர வேண்டுமென்று தீர்மா னித்தார்.

''என்ன நடக்கும் என்பது ஒருவருக்கும் தெரி யாது. வேவுவீரர்களுக்கு மேலதிகாரி ஒருவர்கூட இல்லாமற் போகலாம்'' என்று அவர் டிவிஷன் தலைவரிடம் சொல்லவே ஸெர்பிசேன்கோவும் ஒப்புக்கொண்டார்.

காட்டுப் பாதைகள் வழியே நடக்கையில் மூன்று அதிகாரிகளும் தணிந்த குரலில் பேசிக் கொண்டே சென்றார்கள். பேசியதனைத்தும் உண்மையில் புகோர்கோவ் தான்; மெஷ்சேர்ஸ் கிய் மனச்சோர்வுடன் கேட்டு வந்தான். முன் னால் சென்ற டிராவ்கின் வேறு சிந்தனையில் மூழ்கி, குத்திட்ட பார்வையுடன் நடந்தான்.

டிராவ்கினுடைய கடுகடுப்பான முகத்தைக் கடைக்கண்ணால் பார்த்த புகோர்கோவ், ஒரு சம்பந்தமுமின்றி, ''போர் மட்டும் விரைவில் முடிந்துவிட்டால்'' என்று அரைகுறையாகக் கூறி நிறுத்தினான்.

டிராவ்கின் பதில் ஒன்றும் சொல்லவில்லை. வேவு நடவடிக்கைக்குச் செல்லுமுன்பு அவன் எப்பொழுதும் மௌனமாகவே இருப்பான். உறக்கத்தைப் போன்ற ஓர் அமைதி நிலையில் இருந்து வருவான். ''எல்லாம் செய்தாய் விட்டது; இனி மேல் விதிவிட்ட வழி நடக்கிறபடி நடக்கட்டும். போகப் போகப் பார்த்துக்கொள்வோம்'' என்று விதியின் கையில் தன்னை ஒப்புவித்துக் கொண்டவனது போல இருக்கும் அவனது தோற்றம்.

ஸ்புரூஸ் கன்றுகள் மண்டிக் கிடந்த அகன்ற மலைமுகட்டில் பீரங்கி ரெஜிமென்டைச் சேர்ந்த ஒரு பேட்டரி வைக்கப்பட்டிருந்தது. பீரங்கிகளைச் சுற்றி வீரர்கள் சுறுசுறுப்பாக இருந்தனர். டிராவ்கினைக் கண்டவுடன் அவர்கள் கையசைத்து, ''மறுபடியும் புறப்பட்டுவிட்டீர்களா?'' என்று உரத்த குரலில் கேட்டார்கள்.

''ஆமாம்'' என்று சுருக்கமாய்ப் பதிலளித்தான் டிராவ்கின். அங்கே, அகழில் எல்லாம் தயாராயிருந்தது. காப்டன் குரேவிச், மார்டார்ப் பீரங்கித் தொகுதிகளின் இரு தலைவர்கள், காப்டன் முஷ்டக்கோவ் ஆகியோர் அங்கேயிருந்தனர். அனிக்கானவும் மற்ற வேவுவீரர்களும் குந்திட்டு உட்கார்ந்து கொண்டு தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

காப்டன் குரேவிச் செயல் திட்டத்தை விவரித் தான்:

"ஆறாம் இலக்கில், ஜெர்மானியரின் கவனத் தை வேறு புறம் திருப்பும் பொருட்டு நான் முதலில் பீரங்கிக் குண்டுகளால் தாக்கி வழி மறிக்கிறேன். நீயும் உன் ஆட்களும் அதிக தூரம் இடது புறம் விலகிப் போகாமல் பார்த்துக் கொள்ளுங்கள், டிராவ்கின்! இல்லாவிடில் என்னு டைய பீரங்கித் தாக்குதலுக்கு இலக்காகி விடுவீர் கள். அதன் பிறகு மார்டர்களும், பீரங்கிகளும் நாலாம் இலக்கைத் தாக்கும். உங்களிடமிருந்து சிவப்பு வாண வெடி கிளம்பக் கண்டால், இலக்கு கள் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஏழு இவைகளைத் தாக்கி நீங்கள் திரும்பிவருவதற்குப் பாதுகாப்பளிப்பேன்."

"மார்டர்த் தொகுதிகள் குறிச் சோதனை நடத்தியாக விட்டதா?" எனக் கேட்டான் டிராவ்கின்.

"ஆம், எல்லாம் தயாராகிவிட்டது" என்று மார்டர்த் தொகுதிகளின் இரு தலைவர்களும் உறுதி கூறினர்.

"முட்டுக்குத் தப்புக்கு எனது எந்திரத் துப் பாக்கிகள் கூடத் தயாராயிருக்கின்றன" என் றான் முஷ்டக்கோவ்.

அவர்கள் அனைவரும் மிகுந்த உள்ளக்கிளர்ச்சி யுடன் இருந்தனர் என்பது வெளிப்படை.

டிராவ்கின் அரண் மேட்டின் மேலேறித் தலை யை உயர்த்தி ஜெர்மானிய வீரர்களின் அகழ் வரிசைகளிலிருந்து கிளம்பிய ஒலிகளைக் கூர்ந்து

கேட்டான். எங்கேயோ தொலைவில் கிராம போனிலிருந்து நடன சங்கீதம் கேட்டது. தூரத் தில் இடது பக்கமாக வெள்ளை வாண வெடிகள் ஒன்றன் பின் ஒன்றாக மேலே சென்றன.

பின்பு அவன் அகழில் குதித்திறங்கி வேவுவீரர் களையும் ஸேப்பர்களையும் பார்த்து, ''இதோ, நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள கட்டளைகள்'' என்றான்.

வீரர்கள் மெதுவாக எழுந்து நின்றனர்.

''இந்த வளைவு விரோதிகளின் நூற்றி முப்பத்து ஒன்றாவது காலாள் டிவிஷன் வசம் இருந்து வருகிறது. நமக்குக் கிடைத்துள்ள தகவல்களிலிருந்து அகழ் வரிசைகளுக்குப் பின் னால் அவர்கள் அணி மாற்றி வகுத்துக் கொண் டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. டிவிஷன் தலைவரின் உத்தரவு என்னவென்றால் நாம் எதிரிகளின் பின்னணியில் வேவுபார்த்து அணி மாறுதல் எப்படி நடைபெறுகிறது, விரோதி களின் மூலப்படைகள், டாங்கிகள் இவைகளின் எண்ணிக்கை என்ன என்பன போன்ற தகவல் களை ரேடியோ மூலம் தலைமைச் செயலகத் திற்கு அறிவிக்க வேண்டும் என்பதே.''

கடைசியில் டிராவ்கின் வேவுவீரர்கள் செல்ல வேண்டிய கிரமம், வேலைகள் ஆகியவை பற்றிய கட்டளைகளைக் கூறிவிட்டு, அனிக்கானவ் தான் தனக்கு அடுத்த அதிகாரி என்பதைத் தெரி வித்தான். பிறகு அவன் சுற்றியுள்ள அதிகாரி களைப் பார்த்து மௌனமாகத் தலையை அசைத்து விடை பெற்றுக்கொண்டு, அரண் மேட்

டின் மேல் ஏறி, சத்தமில்லாமல் ஆற்றின் கரை யை நோக்கி நடந்தான். ஒவ்வொருவராக பிராஜ் னிகவ், மாமச்கின், கோலுப், செம்யோனவ், பிகோவ் ஆகியோரும் அவர்களுக்கு உதவ வந் திருந்த ஸேப்பர்கள் மூவரும், அவனைத் தொ டர்ந்து சென்றனர். அனிக்கானவ் தான் கடைசி யில் சென்றான்.

அகழியிலிருந்தவர்கள் பல நிமிடங்கள் அசை யாது நின்றார்கள். பிறகு குரேவிச் நீண்ட வசை மொழியால் திட்டி விட்டு, முஷ்டக் கோவிடம் சிறிது வோத்கா ஊற்றித் தரும்படி கேட்டான். வெறுப்புடன் முகத்தை வலித்துக் கொண்டு ஒரு கிளாஸ் நிறையக் குடித்து விட் டான். இதற்கு முன் குரேவிச் குடிப்பதோ, வசை பேசுவதோ கிடையாது. ஆகவே முஷ்டக் கோவிற்கு இது ஆச்சரியத்தைக் கொடுத்தது; எனினும் அது பற்றி ஒன்றும் பேசவில்லை.

ஆற்றின் கரைமேலிருந்த தாழ்ந்த புதர்களில் டிராவ்கின் நின்று விட்டான். வீரர்கள் காத்திருந் தனர். என்ன காரணத்தினாலோ டிராவ்கின் அசையவேயில்லை. சுமார் மூன்று நிமிடங்கள் கழிந்தன. திடீரென்று ஒரு ஜெர்மானிய வாண வெடி இருட்டைக் கிழித்துச் சீறிக்கொண்டு, கண்கூசும் ஒளித் துண்டுகளாகச் சிதறியது. அவ் வொளித் துண்டுகள் ஆற்றுக்குமேல் பாலொளி பரப்பி, விரைந்து மறைந்தன. டிராவ்கின் இதற் காகத்தான் காத்துக் கொண்டிருந்தான் என்று தெரிந்தது. காரிருளில் குளிர்ந்த நீரிலிறங்கி அவன் நடக்கலானான்; மற்றவர்களும் பின்

னால் சென்றனர். விரைவில் ஆற்றைக் கடந்து, மேற்குக் கரையின் நிழலில் ஒண்டியவாறு அடுத்த வாண வெடிக்குக் காத்துக் கொண்டிருந்தனர். அது மறைந்த பின் மறுபடியும் முன்னேறினார் கள். இப்பொழுது ஸேப்பர்கள் முதலில் சென் றனர்.

அவர்கள் ஒரு கிடங்கைக் கடந்தார்கள். சுரங்க வெடிகள் நிறைந்த இடம் ஆனபடியால் ஸேப்பர்கள் நின்றனர்.

இப்பொழுது அவர்கள் நீண்ட கம்பிகளால் தரையை மெதுவாகச் சோதித்துக் கொண்டு ஊர்ந்து சென்றனர். அவர்களில் ஒருவன் மார் பில் கட்டியிருந்த சோதனைக் கருவியைக் கவ னத்துடன் கேட்டுக்கொண்டே சென்றான்.

மற்றொரு வாணவெடி மேலே கிளம்பியது. இயல்பாகத் தோன்றிய அச்சம் வேவுகாரர் களைத் தரையோடு தரையாக ஒட்டிக்கொள்ளச் செய்தது. அவர்கள் ஓர் உயரமான சமதளத்தில் படுத்துக் கொண்டிருந்தனர். அந்தக் கொடிய பயங்கர வெளிச்சத்தில் உலகம் முழுதும் தங் களைப் பார்க்கக் கூடும் என்று அவர்களுக்குப் பட்டது. ஆனால் அவ்வொளி விரைவில் மறைந்து விட்டது; மறுபடியும் எங்கும் அமைதியும் இரு ளும் நிலவின.

அவ்விருட்டில் எச்சரிக்கையாக வேலை செய்து கொண்டிருந்த ஸேப்பர்கள் அநேகச் சுரங்க வெடிகளின் விசைகளை அகற்றி விட்டார்கள். தொடர் வெடி படார்படாரென அதிர்ந்தது. ஒளிப் பிழம்புகளுடன் குண்டுவெடிகள் தலைக்கு

மேல் மின்னிச் சென்று தொலைவில் மறைந்தன. வேவுகாரர்கள் கல்லாய்ச் சமைந்து விட்டனர். மற்றொரு தொடர் வெடி சிறிது இடது பக்கத்தில் வறட்டொலியுடன் வெடித்தது. சோவியத் பகுதிகளிலிருந்தும் ஒரே மக்சீம் எந்திரத் துப்பாக்கி சடசடத்தது. அதன் குண்டுகள் அவர்களுக்குக் கடைசி வாழ்த்தாக ஷ்ஷூ என்று இரைந்துகொண்டு வலது பக்கம் எங்கேயோ சென்று வெடித்தன.

கரிய இருளின் ஊடே முதலில் சென்ற ஸேப்பர் முட்கம்பியைக் கண்டான். தனக்குப் பின் ஊர்ந்து வரும் டிராவ்கினை அவன் திரும்பிப் பார்த்தான். ''வேலையைத் தொடங்கலாம்'' என்று டிராவ்கின் அவன் காதில் கூறினான். பெரிய கத்தரிகளால் கம்பியை ஸேப்பர்கள் வெட்டினர். மறுபடியும் ஒரு வாணவெடி பிரகாசித்தது. மற்றொரு தடவை குண்டுவெடிகளின் ஒரு வரிசை புகைக் கீற்றுடன் கும்மிருட்டில் மின்னிமறைந்தது.

வாணவெடி வெளிச்சத்தில் டிராவ்கின் ஜெர்மானியரின் தற்காலிகப் பாதுகாப்பு இன்னது என்பதைக் கண்டுகொண்டான். மேட்டின் பக்கத்தில் கிடந்த சில உத்தரத் தடிகள், இரண்டாம் வரிசைப் பள்ளங்களுக்கப்பால் உள்ள காட்டின் ஓரம், குண்டுகளால் அடிபட்டிருந்த மூன்று மரங்கள் — ஜெர்மானியரின் வரிசைகளைக் கவனிக்கும் பொழுதெல்லாம் வழக்கமாகக் கண்டிருந்த அடையாளங்கள் அவை. ஒரு சிறிது வலது பக்கம் தள்ளி வந்துவிட்டான். அவ்விருட்டில்

திசை காட்டும் கருவியின் முள் பச்சை நிறத்து டன் நன்றாகப் பிரகாசித்தது.

இரவில் அமைதி நிலவியது. ஆனால் இந்த அமைதி உண்மையான அமைதியைக் குறிப்ப தல்ல என்பதும் அவ்விருட்டில் எத்தனையோ கண்கள் அவர்களைப் பார்த்துக் கொண்டிருக்க முடியும் என்பதும் டிராவ்கினுக்குத் தெரியும். தன்னுடைய தோளை ஒரு ஸேப்பர் தொட்ட வுடன் லெப்டினன்ட் திடுக்கிட்டுப் போனான். முட் கம்பிகளின் ஊடே செல்வதற்கு ஒரு பாதை வெட்டித் தயாராய் விட்டது. டிராவ்கி னும் அவனுடைய ஆட்களும் பின்வாங்க நேரிட் டால் அவர்கள் வந்துசேரும் வரை ஸேப்பர்கள் திறப்பைப் பாதுகாத்துக் கொண்டிருப்பதாக ஏற்பாடு. அவ்வாறின்றி எல்லாம் அமைதியாக இருந்தால் ஸேப்பர்கள் அரை மணி நேரத்தில் ''வீட்டிற்கு'' ஊர்ந்து போய்விடுவார்கள்.

ஸேப்பர்களில் ஒருவன் பிரிந்து போகுமுன் டிராவ்கின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் குலுக்கினான். இருட்டில் பார்த்துப் பழக்கமாய் விட்ட கண்களால் டிராவ்கின் அவனது முகத் தை உற்று நோக்கினான். பெரிய மீசையும், ஆழத்தில் பதிந்துள்ள, அன்பு ஒளிரும் கருங்கண் களும் தெரிந்தன. அவன் தான் மெட்ஜீடோவ்; அப்பிரிவிலேயே மிகத் தேர்ந்த ஸேப்பர் வீரன். முடிந்த அளவுக்கு புகோர்கோவ் அருமையிலும் அருமையாகத் தான் ஏற்பாடு செய்திருக்கிறான் என்பதை டிராவ்கின் கண்டுகொண்டான்.

முட்கம்பியில் வெட்டப்பட்டிருந்த திறப்பின்

வழியாக வேவுகாரர்கள் ஊர்ந்து சென்றனர். ஜெர்மானியரின் பாதுகாப்பு மேட்டிற்கு வந்ததும் அவர்கள் நிலைத்து நின்றார்கள். ஏனெனில் இடது பக்கத்தில் பீரங்கிக் குண்டுகள் வெடிக்க ஆரம்பித்தன. தரை அதிர்ந்தது. ஒரு விநாடிக்குப் பிறகு வலது பக்கம் குண்டுகள் வெடித்தன. ''குரேவிச்சின் கைவரிசை'' என்று டிராவ்கின் எண்ணிக் கொண்டான்.

அவனது இடப்புறத்தில் ஜெர்மானியர்களின் பேச்சுக் குரல் கேட்டது. அனிக்கானவும் பிராஜ்னிகவும் ஏற்கெனவே அகழுக்குள் வந்து விட்டார்கள். பேச்சொலியோ மேன் மேலும் அருகே நெருங்கிக் கொண்டிருந்தது. டிராவ்கின் மூச்சுக் கூட விடவில்லை. பக்கத்திலிருந்த நடையகழ் வழியே இரு ஜெர்மானியர்கள் வந்து கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவன் என்னவோ தின்று கொண்டிருந்தான். அவன் மொச்சு மொச்சென்று சவைக்கும் சத்தம் கூட டிராவ்கினுக்குக் கேட்டது. நல்ல வேளையாக வந்தவர்கள் வேறு திசையில் திரும்பி விட்டார்கள். அனிக்கானவ் பாதுகாப்பு மேட்டின் மீது எட்டிப் பார்த்து, டிராவ்கின் உள்ளே வருவதற்கு உதவி செய்தான்.

இவ்வாறு ஏழு பேர்களும் ஒருவர் அருகில் ஒருவராக ஜெர்மானியரின் அகழில் நின்றனர்.

ஏதாவது சத்தம் வருகிறதா என்று டிராவ்கின் உற்றுக் கேட்டான். பின்பு இரு ஜெர்மானியர்களும் வந்த நடையகழில் முன்னே சென்றான். அகழ்ப் பாதையில் பல கிளைகள் பிரிந்து சென்

றன. முன்னால் சென்று கொண்டிருந்த அனிக் கானவ் ஒரு திருப்பத்தில் தன்னை எச்சரிப்பதற் காகத் தொட்டதை டிராவ்கின் உணர்ந்தான். பாதுகாப்பு மேட்டின் வழியாக ஒரு ஜெர் மானியன் நடந்து கொண்டிருந்தான். வேவு காரர்கள் அகழ்ச் சுவரோடு சுவராக ஒட்டிக் கொண்டார்கள். ஜெர்மானியன் இருட்டில் மறைந்தான். அது வரைக்கும் நன்மை தான். இனிமேல் அவர்கள் செய்ய வேண்டியது காட் டிற்குள் செல்வதே.

நடையகழை விட்டு வெளியே ஏறிவந்து சுற்றி லும் பார்த்தான் டிராவ்கின். தொலைநோக்கி வழியாகத் தான் அடிக்கடி பார்த்திருந்த காட்டுக் காவலாளின் குடிசையை அடையாளங் கண்டு கொண்டான். அக்குடிசையின் பக்கம் எந்திரத் துப்பாக்கி மேடையொன்றிருந்தது. அங்கு உரக்க விவாதித்துக் கொண்டிருந்த ஜெர்மானியர்களின் குரல்கள் கேட்டன. காட்டிற்குச் செல்லும் சா லை நேராகத் தான் இருக்க வேண்டும். சாலை யின் இடது புறம் ஒரு மேடும், அதில் இரண்டு பைன் மரங்களும் இருக்கும். மேட்டிற்கு இடது புறத்தில் சதுப்பு நிலம். இந்தச் சதுப்பு நிலத் தைக் கடந்துதான் அவர்கள் காட்டிற்குள் செல்ல வேண்டும்.

ஒரு மணி நேரத்திற்கெல்லாம் வேவுகுழுவினர் காட்டினுள் இருந்தனர்.

ஆற்றின் கிழக்குக் கரையில் மெஷ்சேர்ஸ்கியும் புகோர்கோவும் அகழில் நின்று கொண்டு, இருட்

டில் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். அடிக் கடி முஷ்டக்கோவ் அல்லது குரேவிச் வந்து மெதுவாக, ''ஏதாவது செய்தி உண்டா?'' என்று கேட்டுச் செல்வான்.

வேவுகோஷ்டி எதிரிகள் கண்ணில் பட்டுவிட் டதால் திரும்புகிறது என்பதற்கு அடையாள மான சிவப்பு வாணவெடி காணவில்லை. பகை வர்களின் எந்திரத் துப்பாக்கிகளிலிருந்து மூன்று முறை குண்டு வரிசைகள் படபடவென வெடித் தன. ஆனால் அவை மனம் போன போக்கில் வெறுமே சுட்டவை போலிருந்தது. மெஷ்சேர்ஸ் கிய், புகோர்கோவ் இரண்டு காப்டன்களும், வாய் பேசாமல் அகழில் காவல் புரிந்து கொண் டிருந்த போர்வீரர்களும் ஆற்றையும், அதன் உயரமான மேற்குக் கரையையும், நாணல் கோ ரைகளையும், புதர்களையும், ஜெர்மானியரின் முட்கம்பி வேலியையும், அவர்களின் பாதுகாப்பு மேட்டையும் உற்று நோக்கினர். ஆனால் ஒன் றும் விசேஷமாய்க் காணப்படவில்லை.

''நாசமற்றுப்போக, எப்படி மாயமாய் மறைந்து விட்டார்கள் பார்த்தாயா, காட்டுப் பிசாசுகள் போலே!'' என்று ஒரே வியப்புடன் கூறினான் முஷ்டக்கோவ்.

''பகைவர்களின் அகழ் வரிசைகளைத் தாண்டி விட்டார்கள் என்று தான் நினைக்கிறேன்'' என்று சஞ்சலம் நீங்கப் பெரு மூச்சு விட்டான் மெஷ்சேர்ஸ்கிய். அவன் தலையோடு காலாகக் குப்பென்று வியர்த்து வழிந்தது.

ரெஜிமென்ட் தலைமைச் செயலகம் ரேடியோ

டெலிபோன் மூலமாக காப்டன் முஷ்டக்கோ வைக் கூப்பிட்டது. ஆப்பரேட்டர் பரபரப்புடனி ருப்பது தெரிந்தது.

''அறுநூறு'' என்று அவன் சொன்னான்.

டிவிஷனிலிருந்த அனைவருக்கும் பழக்கமான கர்னல் செர்பிசேன்கோவின் மந்தமான குரல் இருளினூடே கேட்டது.

''டிராவ்கின் எப்படியிருக்கிறான்?''

''எல்லாம் சரியாயிருப்பது போல் தான் தெரி கிறது, தோழர் அறுநூறு!''

''ஆகவே உன்னுடைய பகுதியில் எல்லாம் அமைதியாக இருக்கிறது அல்லவா?''

''ஆமாம், தோழர் அறுநூறு.''

''புகோர்கோவின் வீரர்கள் இன்னும் திரும்பி வரவில்லையா?''

''இன்னும் வரவில்லை, தோழர் அறுநூறு.''

சிறிது நேரம் பேசாமலிருந்துவிட்டு, டிவிஷன் தலைவர், ''நல்லது, அருமை. நீ போய்க் கொஞ் சம் தூங்கிக் கொள் அப்பா, முஷ்டக்கோவ்'' என்று கூறினார்.

''ஆகட்டும், தோழர் அறுநூறு.''

மறுபடியும் சிறிது நேரத்திற்குப் பிறகு:

''அப்படியானால் ஜெர்மானியர்கள் அமைதி யாகத் தானிருக்கிறார்கள் என்று சொல்கிறாய், இல்லையா?''

''மூச்சுப் பேச்சுக் காணோம்.''

''ஒளி வாணங்கள் ஏதாவது?''

''உண்டு; ஆனால் அடிக்கடி இல்லை.''

''குண்டு?''

''எப்போதாவது.''

''ஆனால் இலக்குப் பார்த்துச் சுடுவது போல...''

''இல்லவேயில்லை, தோழர் அறுநூறு. சாதாரணமாய் வழக்கம் போல் சுடுவது தான்.''

''பாவம், பெரியவருக்கு ஒரே கவலை'' என்று முஷ்டக்கோவ் ரிசீவரை வைத்துவிட்டுச் சொன்னான்.

## அத்தியாயம் எட்டு

அதிகாலையில் ஒரே குளிரும் மூடுபனியுமாக இருந்தது. குளிரில் நடுங்கும் பறவைகளின் கீச்சொலி எங்கும் நிறைந்தது.

டிவிஷன் படைக்குக் கிடைத்திருந்த செய்திகளுக்கு மாறாகக் காடெல்லாம் ஏராளமான ஜெர்மானியர்கள் மொய்த்துக் கிடந்தனர். வேவு வீரர்களின் பார்வை சென்ற இடங்களிலெங்கும் பெரிய லாரிகளும், பஸ்களும், கனத்த வண்டிகளுமிருந்தன. எங்கும் ஜெர்மானியர் தூங்கிக் கொண்டிருந்தனர். கட்டைக் குரலில் பேசிக் கொண்டு ஜெர்மானியக் காவலாட்கள் இணையிணையாய்க் காட்டுப் பாதைகளில் ரோந்து சுற்றி வந்தனர். வேவுவீரர்களுக்கு இருந்த பாதுகாப்பெல்லாம் அந்தக் கும்மிருட்டுத்தான்; எந்த நிமிடத்திலும் காட்டிக் கொடுக்கப் படலாம். இடையிடையே தீக்குச்சி வெளிச்சமோ, பாட்டரி லைட்டின் ஒளியோ அவ்விருட்டை ஊடுருவிச் செல்லும். அப்பொழுது டிராவ்கினும் அவனு

டைய வீரர்களும் அபாயம் செறிந்த அவ்விடத் தில் தரையோடு தரையாய் ஒட்டிக் கொள் வார்கள். வெட்டி வீழ்த்தப்பட்ட மரங்களின் துவியல்களுக்கிடையே, சுரீர் சுரீரென்று குத்தும் பிர் ஊசி இலைகளுக்கு மேல், ஒரு முறை அவர்கள் ஒரு மணி நேரத்துக்கும் மேலாகப் படுத்துக் கிடக்க வேண்டியதாயிற்று. ஏனெனில் வெறுங்காலோடு ஒரு ஜெர்மானியன் பாட்டரி விளக்கும் கையுமாகச் சிரமத்துடன் நடந்து வந்தான். மிகவும் அண்மையில் வந்ததால், பாட் டரி விளக்கு வெளிச்சம் அநேகமாக டிராவ்கினு டைய முகத்தில் நன்றாகப் பட்டது. ஆனால் அந்தத் தூங்கு மூஞ்சி ஜெர்மானியன் ஒன்றையும் கவனிக்கவில்லை. கால்சட்டையை இறக்கிவிட்டு, கமறிக்கொண்டும் மூச்சு வாங்கிக் கொண்டும் உட்கார்ந்தான்.

மாமச்கின் தனது கத்தியை எடுக்கக் கைநீட்டி னான். அதைப் பார்க்காமலேயே, அசைவால் உணர்ந்து, டிராவ்கின் மாமச்கினுடைய கை யைப் பிடித்துத் தடுத்துவிட்டான்.

ஜெர்மானியன் விரைவில் எழுந்து போய்விட் டான். போகும்பொழுது அவனுடைய பாட்டரி விளக்கின் ஒளியில் காட்டின் ஒரு சிறு பகுதி நன்கு தெரிந்தது. டிராவ்கின் தலையை நிமிர்த்தி மரங்களின் ஊடே ஜெர்மானியர்கள் அதிகம் இல்லாத ஒரு பாதையைத் தேர்ந்துகொள்ள முடிந்தது.

அவர்கள் அக்காட்டை விட்டு வெளியேற வேண்டியிருந்தது; எவ்வளவு விரைவில் முடியு

மோ, அவ்வளவு அவர்களுக்கு நன்மையாகும் எனத் தெரிந்தது.

ஒரு மைல் தூரம் வரை, தூங்கிக் கொண்டிருந்த ஜெர்மானியர்களுக்கிடையில் அவர்கள் ஊர்ந்து கொண்டே சென்றார்கள். வழியில் சமயோசிதமான தந்திர முறைகளைக் கைக்கொண்டார்கள். ஜெர்மானியக் காவற்காரர்கள் பக்கத்தில் வரும் போதெல்லாம், அல்லது சுற்றித் திரியும் ஜெர்மானியப் போர்வீரர்களைக் காணும் பொழுதெல்லாம், வேவுவீரர்கள் தரையில் அசைவின்றிப் படுத்துக் கிடந்தனர். இரு தடவை பாட்டரி விளக்கு வெளிச்சங்கூட அவர்களின் மேல் விழுந்தது. ஆனால் டிராவ்கின் எதிர்பார்த்தபடி அந்த ஜெர்மானியர்கள் இவர்களைத் த்ங்களுடைய ஆட்கள் தான் என்று எண்ணிப் போய் விட்டனர். இவ்வாறு ஊர்ந்து கொண்டும், தூங்கும் ஜெர்மானியர்கள் போல் பாசாங்கு செய்துகொண்டும், மறுபடியும் ஊர்ந்து கொண்டும் அவர்கள் சென்றார்கள். பனி மூட்டமாயிருந்த விடியற்காலையில் அவர்கள் காட்டின் ஓரத்தை அடைந்தனர்.

இங்கே அவர்களுக்கு மிகுந்த அச்சத்தைக் கொடுத்த ஒரு சம்பவம் நடந்தது. உண்மையில் அவர்கள் மூன்று ஜெர்மானியருக்கருகே — தூங்கிக் கொண்டிருந்த மூவரல்ல, நன்கு விழித்துக் கொண்டுள்ள மூவருக்கு அருகில் — நடந்து சென்றனர். அந்த ஜெர்மானியர் ஒரு லாரியில் பாதி படுத்துக்கொண்டும், பாதி உட்கார்ந்து கொண்டும் இருந்தனர். கம்பளிகளைப் போர்த்த

படியே மெல்லப் பேசிக் கொண்டிருந்தார்கள். பக்கத்திலுள்ள வெளியை அவர்களில் ஒருவன் தற்செயலாகப் பார்த்து விட்டான். திடுக்கிட்டுப் போய் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டான். ஓசையின்றி, வலது பக்கமோ இடது பக்கமோ திரும்பிப் பார்க்காமல், ஊர்வலம் போல், ஒரு வர் பின் ஒருவராக விசித்திரமான உடைகளை அணிந்துள்ள ஏழு பேர் நடைபாதையில் வந் தனர். மனிதர்களல்ல — பெரிய பச்சை நிற மே லாடைகளையுடைய ஏழு நிழல்கள்; அவர்கள் முகங்கள் பிரேதங்கள் போல வெளிறிப் பசுமை படர்ந்திருந்தன.

இந்தப் பச்சை நிற நிழல்களின் விபரீதமான தோற்றமோ, அவ்விடியற்கால மூடுபனியில் தெ ரிந்த அவர்களது மங்கலான உருவமோ இவர் களைப் பேய் பிசாசுகள் என்று எண்ணும்படி செய்தது. அந்த நேரத்தில் விரோதிகளைப் பற்றி, ருஷ்யர்களைப் பற்றி, அந்த ஜெர்மானி யனுக்கு ஓர்மையே வரவில்லை.

அவன் பயந்து போய், "Grüne Gespenster... பச்சை நிறப் பேய்கள்" என்று வாயைப் பிளந்தான்.

டிராவ்கினோ, அவனுடைய வீரர்களோ பயந்து போய்க் காப்பாற்றிக்கொள்ளவோ, எதிரி களைத் தாக்கவோ சிறிதும் முயன்றிருப்பார் களானால் அந்த மூன்று ஜெர்மானியர்களும் அச்சமுற்று, அபாயக் குரல் கொடுத்து மற்ற வர்களையும் கிளப்பி விட்டிருப்பார்கள். மூடு பனி கவிந்துள்ள காட்டின் ஓரத்தில் சிறிது நேரம் ஒரு கடும் போராட்டம் நடந்து முடிந்து

போயிருக்கும். எந்த விதத்திலும் அதன் முடிவு எண்ணற்ற பகைவர்களுக்குத் தான் சாதகமா யிருந்திருக்கும்; டிராவ்கினைக் காப்பாற்றியது அவனது கலங்கா அமைதி ஒன்று தான். மூன்று ஜெர்மானியர்கள் தங்களைப் பார்த்து விட்டார் கள் என்பதற்காக அவர்களைத் தாக்கப் புறப்படு வதில் அருத்தமில்லை என்பதை அவன் உடனே அறிந்து கொண்டான். தாங்கள் அடுத்த தோப் பிற்குள் சென்று விட்டால், அங்கே ஜெர்மானி யர்கள் இல்லாமல் இருக்கலாம். இந்த மூன்று பேர்கள் சிறிது தாமதித்து அபாய அறிவிப்புக் கொடுத்தாலுங்கூட, தானும் தன்னுடைய ஆட் களும் தப்பித்துக்கொள்வதற்கு இடமுண்டு. ஆக வே ஓடுவது கூடாதென்று அவன் நிச்சயித்துக் கொண்டான். எதிரி பயப்படுகிறான் என்பதைத் தெரிந்துகொண்ட நாய் உடனே பயங்கரமாகக் குரைக்க ஆரம்பிக்கும். ஆகவே, நாயைப் பார்த் தால் ஓடக் கூடாது என்பது போல், டிராவ்கின் இயல்பாக அம்முடிவைச் செய்தான்.

நிதானமாக அடியெடுத்து வைத்து, வேவு வீரர்கள் அரண்டு போய்க்கிடந்த ஜெர்மானியர் களை ஒருவர் பின் ஒருவராகக் கடந்து சென் றனர். சோலையினுள் புகுந்த பின்னர் டிராவ் கின் சுற்றிலும் பதற்றத்துடன் கண்ணோட்டி விட்டு, உடனே வேகமாய் ஓடத் தொடங் கினான். மற்ற வேவுவீரர்களும் அவனைப் பின் பற்றினர். விரைவில் அச்சோலையைக் கடந்து, சேற்று நிலத்திற்கு வந்தார்கள். அதையும் தாண்டி அங்குள்ள பறவைகள் திடுக்கிட அடுத்

தாற் போலிருந்த தோப்பிற்கு வேகமாய் ஓடி னர். மூச்சு வாங்கிக்கொள்வதற்கு இங்கே அவர் கள் தாமதித்தனர். அனிக்கானவ் சுற்றிப்பார்த்து வந்து, ''அவ்விடத்தில் ஜெர்மானியர்களில்லை'' என்று கூறினான். களைத்துப் போய் அவர் கள் புல்லின் மேல் விழுந்தார்கள். சிகரெட்டு களைப் பற்றவைத்துக் கொண்டார்கள். முந்திய மாலை பேசியதற்குப் பிறகு முதல் தடவையாக டிராவ்கின் இப்போது தான் பேச ஆரம்பித் தான்:

''மயிர் இழை தப்பினோம்.''

அவன் சிரித்தான். பேசுவதற்குச் சிரமமாகத் தான் இருந்தது. இரவு முழுதும் பேசாமலே யிருந்ததால் நாக்கு மரத்துப் போய்விட்டது.

தாங்கள் விட்டு வந்த சோலையை ஜெர்மா னியர்களின் கூட்டமொன்று எச்சரிப்போடு துரு விப்பார்ப்பதை அவர்கள் கவனித்தனர். அதன் மேற்கு ஓரம் வரை சென்று, வேவுவீரர் தாண்டி வந்த மைதானத்தையும் எதிரிகள் பார்வையால் துழாவிப் பார்த்தார்கள். பிறகு அவர்கள் எல் லாரும் கும்பலாக நின்றுகொண்டு ஏதேதோ பேசிக் கெக்கலி கொட்டி நகைத்தார்கள். பச் சைப் பேய்களைக் கண்டதாகச் சொல்லிய அந்த மூவரையும் குறித்தே அவர்கள் சிரித்திருக்க வேண்டும். பின்பு புகை பிடித்துக் கொண்டு திரும்பிச் சென்றனர்.

செம்யோனவ், கோலுப் ஆகிய புதியவர்கள் இருவரும் ஜெர்மானியர்களை இகழ்ச்சி நிறைந்த வியப்புடன் பார்த்தார்கள். இவ்வளவு அருகில்

விரோதிகளை முதன்முதலாக அவர்கள் கண்டது இப்பொழுதுதான். டிராவ்கின் எப்போதும் அவர் களிருவர் பேரிலும் ஒரு கண் வைத்திருந்தான். அவர்கள் மற்றவர்களைப் போலவே நன்கு நடந்து கொண்டார்கள். செம்யோனவ் வேவு நட வடிக்கைக்குப் புதியவனாக இருந்த போதிலும் போர் அநுபவம் உள்ளவன். இரு முறை அவன் காயம் அடைந்திருந்தான். பழுத்த போர் வீர னின் நிதானம் அவனிடமிருந்தது. சுறுசுறுப்பு வாய்ந்த கோலுப், கூர்ஸ்க் வாசி. பதினேழு வயதான உற்சாக மிகுந்த வாலிபன். அவனு டைய தகப்பனார் சோவியத் அதிகாரியாயிருந்த வர். நாஜிகள் அவரைத் தூக்கிலிட்டுக் கொன்று விட்டார்கள். அவனது இளமை யுள்ளம் தனது தகப்பனாரைக் கொன்ற கொலைகாரர்களிடத் தில் உண்மையான வெறுப்பு கொண்டிருந்தது. அத்துடன் புதிய இடங்களைக் கண்டுபிடித்துள்ள தீரர்கள், செவ்விந்தியர்கள் ஆகியோரின் வீரச் செயல்களைப் பற்றி அவன் படித்துள்ள கதை களின் கற்பனைக் கருத்துகளும் கலந்திருந்தன. தானே நேரடியாகப் பங்கு கொண்டிருந்த இந்தச் சாகசச் செயல்களால் அவன் உள்ளத்தில் உவகை ஊற்றெடுத்துப் பொங்கியது.

டிராவ்கினிடம் காணப்பட்ட உயரிய தன்னடக் கத்தைக் குறித்து மாமச்கின் அதிசயிக்காமல் இருக்க முடியவில்லை. கடந்த பல நாட்களி லும் திடீரென்று முதல் தடவையாக இப்போது தான் தங்களுடைய அபாய மிகுந்த வேலையில் வெற்றியுண்டாகும் என்ற நம்பிக்கை அவனுக்கு

ஏற்பட்டது. முந்திய நாள் மாலையில் காத்யாவுடன் தான் பேசிக் கொண்டிருந்தது அவன் நினைவிற்கு வந்தது. லெப்டினன்டைக் கவனித்துக்கொள்ள வேண்டுமென்று அவள் அவனைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். அதற்கு அவன் உபசாரமான புன்சிரிப்புடன் அவளைத் தோளில் தட்டிக்கொடுத்தான்.

''கவலைப்படாதே, காத்யா! மாமச்கின் பக்கத்திலிருக்கும் வரை உன்னுடைய லெப்டினன்ட் அரசாங்க பாங்கில் உள்ள பணம் போல் பத்திரமாக இருப்பான்'' என்று கூறினான்.

''இங்கே என்னடா என்றால் விஷயம் நேர் மாறாக இருக்கிறது—லெப்டினன்ட் அருகிலிருக்கும் வரை மாமச்கினுக்கு ஆபத்தில்லை என்பது போல'' என்று இப்போது மாமச்கின் மனத்திற்குள் ஒப்புக்கொண்டான். முன்போலவே துடுக்குத்தனம் கண்களில் பளிச்சிட டிராவ்கினைப் பார்த்துக் கொண்டே ஒவ்வொருவருக்கும் சமைத்த இறைச்சித் துண்டு ஒன்று கொடுத்தான். லெப்டினன்டிற்கு மிகப் பெரிய துண்டு ஒன்றும், தன் ஜாடியிலிருந்து ஒரு கிண்ணம் நிறைய வோத்காவும் கொடுத்தான்.

அத்தோப்பில் ஜெர்மானியர்களில்லை என்பதை நிச்சயமாகக் கண்டறிந்த பின்னர், டிராவ்கின் சிலரைக் காவலுக்கு வைத்துவிட்டு முதல் முதலாகச் செய்தி தெரிவிக்க, பிராஜ்னிகவ் முதுகிலிருந்த ரேடியோ செட்டை எடுத்தான்.

அவனுக்குப் பதில் கிடைக்க வெகு நேரமாயிற்று. வான் ரீங்காரமிடுவதும் முறுமுறுப்பது

மாயிருந்தது. இசை, உரையாடல் இவைகளின் துணுக்குகள் கேட்டன. அவனுடைய ஒலி அலைக்கு அருகில் கண்டிப்பு தொனிக்கும் அதி கார தோரணையில் ஒரு ஜெர்மானியன் பேசிக் கொண்டிருந்ததும் கேட்டது. வெகு சமீபத்தில் இருப்பதால் தனது 'விடி வெள்ளி'யைக் காட்டிக் கொடுத்து விடுமோ என்று தன்னையறியாமலே பதைத்தான்.

கடைசியில் அவனது குறியொலிகளுக்குத் தெ ளிவற்ற முறையில் பதிலொலி வருவது கேட்டது. ஒரே சொல்லைத் திரும்பத் திரும்பக் கூறியது ஒரு குரல்: ''விடி வெள்ளி, விடி வெள்ளி, விடி வெள்ளி.''

வெற்றிக் குறிப்புடன் டிராவ்கின் ''ஆகா'' என்று ஆர்ப்பரித்தான். தொலைவிலிருந்த 'பூமி' யின் ஆப்பரேட்டரிடம் இருந்தும் அதே ஒலி எதிரொலித்தது.

''உனக்குத்தான் தெரிவிக்கிறேன்'' என்றான் டிராவ்கின். ''இருபத்து ஒன்று ஆந்தை இரண்டு. இருபத்து ஒன்று ஆந்தை இரண்டு.''

தொலைவிலிருந்து 'பூமி', ஒரு நிமிடம் பேசா மலிருந்து, பிறகு அறிந்துகொண்டதாகக் கூறியது. நன்றாக அறிந்துகொண்டதாய்ச் சொல்லியது.

''பல இருபத்து ஒன்று, மிகப் பல'' என்று வலியுறுத்திக் கூறினான் டிராவ்கின். ''இருபத்து ஒன்று இப்பொழுது தான் வந்து சேர்ந்தது.''

'பூமி' அதையும் அறிந்துகொண்டு, எதிரொலி போல, ''பல இருபத்து ஒன்று'' என்று திரும்பக் கூறியது.

எல்லாருக்கும் உற்சாகம் பொங்கியது. அப்ப டிப்பட்ட முன்னணியைக் கடந்து, ஜெர்மானி யர்கள் மொய்த்துக் கிடக்கும் காட்டையும் தாண்டி, ரேடியோ தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு, ஜெர்மானியர்களைப் பற்றிச் செய்தி தெரிவிப்பது என்றால்—ஆகா, இது அல்லவா வாழ்வு!

மீண்டும் மீண்டும் டிராவ்கின் தன்னுடைய தோழர்களின் முகங்களை நுட்பமாகப் பார்த் தான். இனிமேல் அவர்களெல்லாரும் தனக்குக் கீழ்ப்பட்டவர்கள் அல்ல, தனது உண்மையான தோழர்களே. ஒவ்வொருவனையும் பொறுத்தி ருந்தது மற்றவரின் உயிர்கள். அவர்களைத் தன்னிலும் வேறானவர்களென்றோ, பிரிந்துள்ள வர்களென்றோ அவன் கருதவில்லை; தனது சரீரத்தின் அவயவங்களாகவே எண்ணினான். அந்தப் 'பூமி'யிலிருக்கும் பொழுது அவரவர்கள் வெவ்வேறு வாழ்க்கையை நடத்தவும், மனக் குறைகளைத் திருப்தி செய்து கொள்ளவும் அநு மதிக்கலாம்; இந்தத் தனிமையான 'விடி வெள்ளி' யிலிருக்கும் பொழுது, அவர்களெல்லாரும் ஒரு முழுமையின் பகுதிகளாக விளங்கினர்.

தன்னைக் குறித்து—ஏழு மடங்கு பல்கிவிட்ட தன்னைக் குறித்து—டிராவ்கின் அகமகிழ்ந்தான்.

அனிக்கானவுடன் கலந்தாலோசித்த பிறகு தேசபடத்தில் குறிக்கப் பட்டிருந்த ஓர் ஊருக்குச் செல்வதென்று அவன் தீர்மானித்தான். அங்கே ஒரு பெரிய சாலை ரயில்பாதைக்குக் குறுக் காகச் சென்றது. பகலில் போவது அபாயம் என்

பது உண்மைதான்; ஆனால் அவர்கள் காட்டை ஒட்டினாற் போலவும் சதுப்பு நிலத்தின் ஓர மாகவும் சென்று சாலைகளுக்கும் ஊர்களுக்கும் அப்பால் விலகி இருக்கலாம். ஜெர்மானியர்கள் அநேகமாய் அவ்விடங்களுக்கு வருவதில்லை.

ஆனால் தோப்பின் மேற்கு ஓரத்திற்கு வந்த வுடன், சதுப்புநிலப் பாதை வழியாக ஒரு ஜெர்மானியப் படைவரிசை சென்று கொண் டிருந்ததை அவர்கள் கண்டனர். வழக்கமான பச்சைநிற அங்கிகளுக்குப் பதில், அவர்கள் கரிய உடைகளை அணிந்திருந்தனர். அவர்களுடைய மேலதிகாரி அணிந்திருந்த வில்கண்ணாடி அச் சுறுத்துவது போல ஒளிவிட்டது.

''எஸ் எஸ் படையினர்'' என்று அனிக்கானவ் முணுமுணுத்தான்.

இந்த எஸ் எஸ் படைப்பகுதிக்குப் பின்னால் ஏராளமான தளவாடங்களுடன் இருபது பெரிய வண்டிகளின் தொடர் சென்றது.

வேவுவீரர்கள் பக்கத்திலிருந்த காட்டினுள்ளே தாவிப் புகுந்து மறைந்துகொண்டார்கள். அப் போது தான் சென்றிருந்த 'காடர்பில்லரின்' அடையாளங்கள் இங்கே தென்பட்டன. அவற் றைப் பின் தொடர்ந்து எச்சரிக்கையாகச் சென்று ஒரு சோலை வெளிக்கு வந்தார்கள். அங்கே ஆள் ஏற்றிச் செல்லும் பன்னிரண்டு கவச மோட்டார்கள் மறை உருவில் வைக்கப் பட்டிருந்ததைக் கண்டார்கள். அவை சற்று முன்பு தான் வந்து சேர்ந்திருந்தன என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. மிகுந்த சத்தத்

துடன் ஜெர்மானியர்கள், அங்குமிங்கும் சென்று கொண்டும், மரங்களை வெட்டிச் சாய்த்துக் கொண்டும், விறகிற்காகக் கிளைகளைத் துண் டித்துக்கொண்டும், கூடாரங்களை அடித்துக் கொண்டும் — சுருங்கக் கூறின் ஒரு புதிய இடத் திற்கு வந்தால் என்னென்ன செய்வார்களோ, அவையெல்லாம் செய்து கொண்டும் — இருந் தனர்.

இந்த அபாயகரமான சோலை வெளியிலிருந்து ஊர்ந்து சென்று, வேவுகாரர்கள் சுற்றுவழி யாக வலது பக்கம் வெகு தூரம் போனார்கள். ஆனால் அங்கும் மற்றொரு ஜெர்மானிய முகா மைக் கண்டனர். பீரங்கிக் குண்டுகளை ஏற்றி வந்துள்ள லாரிகள் ஏராளமாக இருந்தன.

அக்காட்டிலுள்ள புல்தரைமேல் காலி சிகரெட் பெட்டிகளும், தகர டப்பாக்களும், 'கோதிக்' எழுத்துக்களை உடைய செய்தித் தாள்களின் அழுக்குத் துண்டுகளும், காலி பாட்டில்களும் — வெறுப்பிற்குரிய அந்நிய வாழ்க்கையின் சின்னங் கள் பலவும் நிறைந்து கிடந்தன. மரங்களில் அநேக அறிவிப்புக்குறிகள் ஆணியடித்து மாட் டப்பட்டிருந்தன. அவைகளில் பெரும்பாலான வற்றில் '5' என்ற எண்ணும், 'W' என்ற எழுத் தும் இருந்தன.

வேவுவீரர்கள் இருட்டும்வரை காத்திருக்க வேண்டியது அவசியமாயிற்று. பகலில் செல்வது நிச்சயமாய் முடியாது. கத்துபவர்களும், தூங்கு பவர்களும், நடப்பவர்களும், லாரிகளில் வரு பவர்களுமாக ஜெர்மானியர் அங்கு அப்படி ஒரே

யடியாகக் குழுமிக் கிடந்தனர். ஜெர்மானியப் படைகள் அங்கு திரண்டு குவிந்து கொண்டிருந்தன.

பரந்த காட்டின் இருண்ட நிழலிலே ஜெர் மானியர் இப்படிப் புதிய படைகளை மறை முகமாகத் திரட்டிச் சேர்ப்பது ஏதோ பெருத்த நடவடிக்கைக்கு முன்னேற்பாடாகத்தான் என் பதை டிராவ்கினும் மற்றைய வேவுவீரர்களும் நன்கறிந்துகொண்டனர். தங்களது வேலையின் முக்கியத்தையும் பெரும் பொறுப்பையும் இப் போதுதான் முதன்முதலாக அவர்கள் உணர்ந்து கொண்டார்கள் எனலாம். ஒரு பள்ளத்தில் மீதிப் பகற்பொழுதை உறங்கிக் கழித்துவிட்டு, இரவு வந்ததும் மறுபடியும் புறப்பட்டனர்.

சீக்கிரத்தில் பெரிதும் சிறிதுமான பல ஏரிகள் உள்ள ஓரிடத்தை அடைந்தனர். ஏரிகளின் கரை களை பிர்ச் மரங்கள் அலங்கரித்தன. தவளை கள் ஓயாது கத்திய வண்ணமிருந்தன.

அவ்வேரிகள் ஒன்றிற்குச் சமீபத்தில், கொட் டைப் புதர்கள் அடர்த்தியாக வளர்ந்திருந்த ஓர் ஆழமான உள்வெளியில் டிராவ்கின் எல் லாரையும் நிற்கும்படி கூறினான். எதிர்க்கரை யில் பெரிய இரண்டடுக்குக் கல் கட்டிடம் ஒன்று தெரிந்தது. அங்கேயிருந்து ஜெர்மானியர் பேசும் சத்தம் கேட்டது. அவ்வீட்டிற்கு வலப் புறத்தில் ஒரு சிறிய குறுகலான பாதை சென் றது. இருபுறமும் வரிசையாகத் தந்திக் கம்பங் கள் கொண்ட பெரிய சாலை தொலைவில் தெரிந்தது.

இப்பெரிய சாலைக்கு அருகாமையில் ஓர் இடத்

தில், டிராவ்கின் கவனிப்புக்கு ஏற்பாடு செய் தான். லாரிகள் ஆற்றொழுக்குப் போல இடை யறாது சென்று வந்த வண்ணமாயிருந்தன. அவைகளைக் கவனிக்க வேண்டியது முக்கியமா யிற்று. ஓரிரண்டு தடவைகளில் போக்குவரவு ஒரு மணி நேரத்திற்கு நின்றது. ஆனால் மறு படியும் முன்போலவே பெருத்த அளவில் தொ டர்ந்தது. லாரிகளில் ஜெர்மானியத் துருப்புக் களும் தார்ச் சீலையால் மூடப்பட்ட ஏதோ பெரும் பாரங்களும் செம்மிக் கிடந்தன. இரண்டு தடவைகள் பீரங்கிகள் — மொத்தம் இருபத்து நான்கு—பெரிய டிராக்டர்களால் இழுக்கப்பட்டுச் சென்றன.

இடைவிடாது நடந்து வந்த இப்போக்குவரத் தை டிராவ்கின் தொடர்ந்து கவனித்து வந் தான். மற்றவர்கள் முறை வைத்துப் பார்வை செய்தும், உறங்கியும், ஓய்வெடுத்தும் வந்தார் கள். இவ்வாறு, கடந்து செல்லும் ஜெர்மானியப் படைகளின் எண்ணிக்கையைக் குறித்து வைத்துக் கொள்வதற்கு அவர்கள் டிராவ்கினுக்கு உதவி செய்தார்கள்.

இருட்டில் தலையை நீட்டி, ''தோழர் லெப்டி னன்ட்!'' என்று தணிந்த குரலில் கூப்பிட்டான் மாமச்கின். ''சிறு பாதை வழியாக இரண்டே ஜெர்மானியர்களுடன் ஒரு வண்டி வந்து கொண் டிருக்கிறது. அதில் உணவுப் பொருளிருக்கிறது. ஒரு தோட்டாகூடச் சுட வேண்டாம், ஒரு வார்த்தை மட்டும் சொல்லுங்கள்.''

எச்சரிக்கையோடு டிராவ்கின் அவனுடன்

சென்று பார்த்தான். மெய்யாகவே ஒரு வண்டி மெதுவாய்ப் பாதை வழி வந்துகொண்டுதா னிருந்தது. அதில் இருந்த இரு ஜெர்மானியர் புகை பிடித்துக் கொண்டும் அசட்டையுடன் பேசிக்கொண்டும் இருந்தனர். அவர்களது கால் பக்கத்தில் ஒரு பன்றி உறுமிக் கொண்டிருந்தது. இந்த இரு ஜெர்மானியரையும் தீர்த்து விட வேண்டுமென்ற பலமான தூண்டுதல் டிராவ் கினுக்கு உண்டாயிற்று. அவர்கள் இருந்த நிலை கொல்ல வா என்று அழைப்பது போலிருந்தது. ஆனால் மிகுந்த வருத்தத்துடன், ''வேண்டாம்'' என்று தலையசைத்தான் டிராவ்கின். ''தொ லைகிறார்கள், விடு.''

மாமச்கினுக்குச் சிறிது வருத்தம்தான். எல் லாம் அனுகூலமாக நடந்துவந்த காரணத்தால் அவனுக்கு உற்சாகமும் துணிவும் மிகுந்து இருந் தன. தன்னுடைய திறமையை மற்றவர்களுக்கு, முக்கியமாக அனிக்கானவிற்கு, காட்ட வேண்டு மென்று அவனுக்கு ஒரே ஆசை.

''ஏன் ஒவ்வொரு இடமாகப் பார்த்து அலைந்து கொண்டிருக்க வேண்டும்? நமக்கு விஷ யத்தை எல்லாம் தெரிவிக்கக் கூடிய பல ஆட்கள் நாலா பக்கங்களிலும்தான் நடமாடிக் கொண்டு இருக்கிறார்களே?''

பொழுது விடியத் தொடங்கியதும் பெரிய சாலையில் நடந்த போக்குவரவும் நின்றது.

''நமது விமானங்களுக்குப் பயந்துகொண்டு, இரவில் மட்டுமே சென்று கொண்டிருக்கிறார் கள். ஏதோ காரியமாகத்தான் இவ்வளவு ஏற்

பாடுகளும்! பெருச்சாளிப் பயல்கள்!'' என்றான் அனிக்கானவ்.

மறுபடியும் தனது ஆட்களைக் கொட்டை மரப்புதருக்கு அழைத்துச் சென்றான் டிராவ் கின். வேவுவீரர்கள் காலைக் குளிர் நடுக்க, சற்றே கண்ணயர்ந்தனர். திடீரென்று ஏரியின் எதிர்க்கரையிலுள்ள வீட்டிலிருந்து பயங்கரமான கூச்சல் ஒன்று கேட்டது.

என்ன காரணத்தாலோ டிராவ்கினுக்கு மார் சென்கோவைப் பற்றிய நினைவு திடீரென உதித்தது. மறுபடியும் ஒரு சத்தம், பிறகு மௌ னம்.

''அங்கே என்ன நடக்கிறது என்பதைப் போய்ப் பார்த்து வருகிறேனே'' எனக் கூறினான் பிராஜ் னிகவ்.

''வேண்டாம்'' எனப் பதிலளித்தான் டிராவ் கின். ''வெளிச்சம் அதிகரித்துக் கொண்டிருக் கிறது.''

உண்மையில் சூரியன் உதித்துக் கொண்டிருந் தது. செங்கதிர்ச் சிதர்கள் ஏரியில் பிரதிபலித் தன. அள்ள அள்ளக் குறையாத தனது பை களிலிருந்து மாமச்கின் ரொட்டி வறுவலையும் கொஞ்சம் சமைத்த இறைச்சியையும் எடுத்துக் கொடுத்தான். அவைகளைச் சாப்பிட்டு விட்டு அவர்கள் மறுபடியும் கண்ணயர்ந்தார்கள்.

ஆனால் டிராவ்கினுக்கோ தூக்கம் வரவில்லை. ஏரிக்கு அருகே ஊர்ந்து சென்றான். அநேக மாய்த் தண்ணீரின் ஓரத்திலிருந்த புதரில் அசை வற்றுப் படுத்துக் கிடந்தான். எதிர்க்கரை வீட்டி

லிருந்தவர்கள் விழித்தெழுந்து முன்பக்கம் நட மாடிக் கொண்டிருந்தனர்.

விரைவில் மூவர் வாசலுக்கு வெளியே வந் தனர். அவர்களில் மிக உயரமானவன் வணக்கம் செலுத்திவிட்டு, மெதுவாய் நடந்து சென்றான். ஒரு சிறிய மேட்டிற்கு வந்ததும் அவன் திரும்பிப் பார்த்து வாசற் பக்கம் நின்று கொண்டிருந்த இருவர்களிடமும் கையை அசைத்து விடை பெற்றுக்கொண்டான். பிறகு அவன் குறுக லான பாதை வழியாக வந்தான். அவன் திரும் பிய பொழுது அவன் முதுகுப் புறம் தொங்கிய வார்ப்பையையும் இடது கையில் கட்டியிருந்த வெள்ளை பான்டேஜையும் டிராவ்கின் கண்டு கொண்டான்.

இந்த ஜெர்மானியனைப் பிடிக்க வேண்டு மென்ற எண்ணம் ஒரு நொடியில் டிராவ்கினுக்கு உண்டாயிற்று. எதிரியைக் கண்டதுமே வேவு வீரன் மனத்தில் அடக்க முடியாதபடி எழும் தூண்டுதல் அது. வெள்ளை பான்டேஜுக்கும் அதிகாலையில் அவர்களைத் திடுக்கிடச் செய்த சத்தங்களுக்கும் உள்ள தொடர்பு பளிச்சென்று டிராவ்கினுக்குப் புலனாயிற்று. ஏரியினருகே யிருந்த அவ்வீடு ஒரு ஜெர்மானிய மருத்துவ மனை. பாதை வழியாக நடந்து வந்து கொண் டிருந்த நெட்டை ஜெர்மானியன் மருத்துவமனை யிலிருந்து வெளியேறி, தனது பட்டாளத்திற்குத் திரும்புகிறவன். இந்த ஜெர்மானியன் காணாமற் போய்விட்டால், அவனைத் தேடிக் கொண்டு யாரும் கிளம்பி வரமாட்டார்கள்.

அனிக்கானவும் மாமச்கினும் விழித்துக் கொண்டுதான் இருந்தனர். டிராவ்கின் அவர்களிடம் சென்று, பரவலாக நின்ற மரங்களினிடையே சென்ற ஓர் உயரமான உருவத்தைச் சுட்டிக் காட்டி, ''அந்த ஜெர்மானியனை நாம் அவசியம் பிடிக்க வேண்டும்'' என்றான்.

அவர்கள் இருவருக்கும் ஒரே ஆச்சரியம். எப்பொழுதும் மிக எச்சரிக்கையாக இருக்கும் அவர்களது லெப்டினன்டா இந்தப் பட்டப்பகலில் ஒரு ஜெர்மானியனைப் பிடித்து வரச் சொல்கிறார்? விந்தைதான். டிராவ்கின் எதிர்க்கரையிலிருந்த வீட்டைச் சுட்டிக்காட்டி, ''அது ஒரு மருத்துவமனை என்று விளக்கினான்.

வெயிலில் பளபளத்த வெள்ளை பான்டேஜைப் பார்த்து அவர்கள் விஷயத்தைப் புரிந்து கொண்டார்கள்.

உறங்குகின்ற மற்றவர்களையும் எழுப்பிக் கொண்டு ஜெர்மானியனை வழிமறித்துப் பிடிக்கக் காட்டினூடே நடந்தனர். ஜெர்மானியன் இளவேனிற்காலையை உற்சாகமாய் ரசித்துக் கொண்டும் சீட்டியடித்துக் கொண்டும் நடந்து சென்றான். எல்லாம் வெகு சுருக்கமாய் முடிந்து விட்டது. தகவல் தருவதற்குரிய எதிரியை இப்படிப் பிடித்து வருவதை இதற்கு முன் பார்த்தறியாத இளைஞன் கோலுப் ஓரளவு ஏமாற்றமடைந்தான். அந்த ஜெர்மானியனைத் தொடுவதற்குக் கூட அவனுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. கிளர்ச்சியுற்ற கோலுப் என்ன நடந்தது என்று நிதானிப்பதற்குள்

அம்மனிதனை அவனுடைய குல்லாவினாலேயே வாயையடைத்துக் கட்டிக் கொண்டுவந்து விட்டார்கள்.

பள்ளத்தின் அடியில் கொட்டை மரச்செறிவுக்கிடையே தரையில் கிடந்தான் அந்தக் கைதி. அவனது கூரிய மூக்கு வானை நோக்கித் துருத்திக் கொண்டிருந்தது. வாயிலிருந்து குல்லா எடுக்கப்பட்டதும், அவன் வலி தாங்க முடியாமல் கத்தினான். ருஷ்ய மொழிக்குரிய ஒலி அழுத்தத்துடன் ஜெர்மன் வார்த்தைகளைக் கூறிக் கொண்டு, டிராவ்கின் அவனிடம் பின்வருமாறு கேட்டான்:

"Zu welchem Truppenteil gehören Sie?" *

"131 Infanterie-Division, Pionier-Companie" ** என்று அவன் பதில் அளித்தான்.

முன்னணியிலிருந்த ஒரு பிரிவு இது என்பது வேவுவீரர்களுக்குத் தெரியும்.

டிராவ்கின் கைதியை ஏற இறங்கப் பார்த்தான். சுமார் இருபத்தைந்து வயதுள்ள இளைஞன் அவன். சணல்நார் போன்ற முடியும், ஜெர்மானியருக்குரிய வெளிறிய நீலக் கண்களும் உடையவன்.

ஜெர்மானியனின் இளநீலக் கண்களை உறுத்துப் பார்த்தவாறே டிராவ்கின் தனது அடுத்த கேள்வியைக் கேட்டான்.

---

* நீ எந்தத் தொகுதியைச் சேர்ந்தவன்?

** 131வது காலாட்படை டிவிஷனில் ஸேப்பர்கம்பெனியைச் சேர்ந்தவன்.

"Haben Sie hier SS-Leute gesehen?" *

"O, ja. Eine ganze Menge, überall" ** என்று தனக்கு அவ்விஷயம் நன்கு தெரிந்துள்ளதைக் குறித்துச் சந்தோஷப்படுவது போலவும், தன்னைச் சுற்றியுள்ள ருஷ்யர்களை அதிக தைரியத்துடன் பார்த்துக்கொண்டும் பதிலளித்தான்.

"Was sind das für Truppenteile?" *** என்று டிராவ்கின் கேட்டான்.

"Die Panzerdivision «Wiking». Eine sehr berühmte, starke Division. Himmlers Elite." ****

"ஆ, அப்படியா" என்றான் டிராவ்கின்.

தங்கள் லெப்டினன்ட் ஏதோ முக்கியமான தகவலைத் தெரிந்து கொண்டுவிட்டார் என்பதை வேவுவீரர்கள் சட்டென அறிந்துகொண்டனர். அங்கே குவிக்கப்பட்டுள்ள வைகிங் டிவிஷன் படையின் எண்ணிக்கை என்ன என்பதும் எந்த நோக்கத்துடன் அங்கு வைக்கப்பட்டிருந்தது என்பதும் கைதிக்குத் தெரியவில்லை. எனினும் இப்

---

* இங்கு எஸ் எஸ் துருப்புகள் இருப்பது உனக்குத் தெரியுமா?

** ஆம், ஏராளமான பேர் இருக்கிறார்கள்.

*** அவர்கள் எந்தத் தொகுதிகளைச் சேர்ந்தவர்கள்?

**** அவர்கள் 'வைகிங்' டாங்கி டிவிஷனைச் சேர்ந்தவர்கள். ஹிம்லரின் பொறுக்கியெடுக்கப்பட்ட வீரர்களைக் கொண்ட, பேர் பெற்ற பிரிவு அது.

பொழுது கிடைத்த தகவலின் முக்கியத்தை டிராவ்கின் நன்கு கண்டு கொண்டான். பிறகு அந்நெட்டை ஜெர்மானியனைத் தயவுடன் பார்த்துக்கொண்டு, அவனுடைய அடையாளச் சீட்டுகளைச் சோதிக்க ஆரம்பித்தான். ஏக்கந் தோய்ந்த கண்களுடன் இந்த ருஷ்ய இளைஞனை உற்றுநோக்கிக் கொண்டிருந்த கைதிக்குத் திடீரென்று சிறிது நம்பிக்கை உண்டாகியது. இந்த அழகிய வாலிபன் தன்னைக் கொன்று விடும் படியாகவா உத்தரவிடுவான்?

ஜெர்மானியனின் அடையாளச் சீட்டுகளைப் பார்த்து முடித்த பின்னர் அவனைத் தீர்த்துவிட வேண்டுமென்ற எண்ணம் டிராவ்கினுக்கு வந்தது. இந்த எண்ணத்தை அறிந்து கொண்டவன் போலக் கைதி திடீரென்று நடுங்கத் தொடங்கினான். மிக ஆவலுடன் அவன் பின்வருமாறு கூறினான்:

"Herr Kommunist, Kamerad, ich bin Arbeiter. Schauen Sie meine Hände an. Glauben Sie mir, ich schwöre: bin kein Nazi. Bin selbst Arbeiter und Arbeitersohn."*

அந்த ஜெர்மானியன் சொல்லியதை அனிக்கானவ் ஓரளவு புரிந்துகொண்டான். 'தொழி

---

* கம்யூனிஸ்ட் கனவானே, நான் ஒரு தொழிலாளி. எனது கைகளைப் பாருங்கள். நான் சொல்வதை நம்புங்கள். நான் நாஜியில்லை. ஆணையிட்டுக் கூறுகிறேன்: நான் ஒரு தொழிலாளி, தொழிலாளியின் மகன்.

லாளி' என்பதற்குரிய ஜெர்மன் வார்த்தை அவ னுக்குத் தெரியும்.

''பார் இந்தப் பயலை! தொழிலாளி என்று சொல்லிக்கொண்டு நம்மிடத்தில் தன்னுடைய கரடுமுரடான கைகளைக் காட்டுகிறான். நம்ம வர்கள் தொழிலாளியை மதிக்கின்றனர் என்ப தும் அவனுக்குத் தெரியும். தான் யாருக்கெதி ராக போர் செய்கிறான் என்பதும் அவனுக்குத் தெரியும். ஆனாலும் அவன் போர் செய்வதை நிறுத்திவிடவில்லை'' என்று அனிக்கானவ் யோச னையுடன் கூறினான்.

சிறு வயதிலிருந்தே தொழிலாளி மக்களை மதித்து, நேசித்து வருவதற்குக் கற்றுக் கொண் டிருந்த டிராவ்கினுக்கு லைப்ஸிகைச் சேர்ந்த இந்த அச்சுக்கோக்கும் தொழிலாளியைக் கொல் லும் படி உத்தரவிடுவதைத் தவிர வேறு வழி யில்லை.

டிராவ்கினுடைய கண்களில் தோன்றிய இரக் கத்தையும் மாறா உறுதியையும் அந்த ஜெர் மானியன் கண்டான். அவன் ஒன்றுமறியாத முட்டாள் அல்ல. அச்சுக்கோக்கும் வேலையி லிருந்து கொண்டே அவன் அநேகப் புத்தகங் களையும் படித்திருந்தான். ஆகவே தன்முன் நிற்கும் மனிதர்கள் எப்படிப் பட்டவர்கள் என்பது அவனுக்கு நன்கு தெரியும். இரக்கமும் உறுதியும் கலந்து பார்வையுடைய இவ்வழகிய வாலிபனது உருவத்தில் தனது உயிரைக் கவர வரும் காலனைக் கண்டதும், அவன் கண்ணீர் விட்டழுதான்.

அவர்கள் என்ன மனோநிலையில் இருந்தார்கள் என்பதை அவர்களே கூடச் சொல்லியிருக்க முடியாது. நிகழ்காலத்துடன் தொடர்பற்றவை அனைத்தும், கடந்த காலத்தைச் சேர்ந்தவை அனைத்தும் அவர்கள் நினைவிலிருந்து மறைந்துவிட்டன; எப்போதாவது திரும்பி வந்தாலும் மங்கிய மின்னல்போல் பளிச்சிட்டு மறைந்தன. தங்களது கடமை ஒன்றிற்காகவே அவர்கள் உயிர்வாழ்ந்தனர்; வேறு எதைப் பற்றிய எண்ணமும் அவர்களுக்குக் கிடையாது.

அனிக்கானவும் கோலுபும் முன்னே செல்ல, நாற்பது அடி தூரத்தில் டிராவ்கினும் செம்யோனவும் பின்னே சென்றனர். ரேடியோ செட் செம்யோனவிடம் இருந்தது. அவர்களது பாதைக்கு இணையான பெரிய சாலையின் ஓரத்தையொட்டி, டிராவ்கினுக்கு இடது புறத்தில் மாமச்கினும் பிகோவும் நடந்து கொண்டிருந்தனர். வலது புறத்தில் பிராஜ்னிகவ் காட்டின் பக்கமிருந்து பாதுகாப்பு அளித்துக் கொண்டு முன்சென்றான். அவர்கள் முக்கோண வடிவில் சென்று கொண்டிருந்தனர். உச்சியில் அனிக்கானவும், அடிப்பக்கத்தின் நடுவே டிராவ்கினும் இருந்தனர். சில வேளைகளில் அருகில் ஜெர்மானியர் இருப்பதை அறிந்து முக்கோணத்தை நெருக்கிக் கொண்டார்கள். இடையிடையே நின்று இராவேளை ஒலிகளைக் கவனித்துக் கொண்டே மெதுவாக நடந்து சென்றனர்.

சில சமயங்களில் அனிக்கானவ் பறவை போல் குரல் கொடுப்பான். உடனே அனைவரும் அப்படியே அந்தந்த இடத்தில் அசைவற்று நின்று விடுவார்கள்.

இடது புறத்திலுள்ள ரஸ்தாவில் லாரிகளும் டிராக்டர்களும் கடகடத்த வண்ணமாயிருந்தன. ஜெர்மானியப் பாட்டுகளும், வசை மொழிகளும், ஏவல் சொற்களும் கேட்டன. சில வேளைகளில் காலாட்படை நடந்து செல்லும். அதிலிருந்த துருப்புகளின் பேச்சு மிகத் தெளிவாகக் கேட்கும். கையை நீட்டினால் போதும், ஒரு ஜெர்மானியனைப் பிடித்துவிடலாம்; ஒருவனது முகத்தைத் தொட்டுவிடலாம்; மற்றொரு ஜெர்மானியன் பிடித்துக் கொண்டிருக்கும் சிகரெட்டில் விரலைச் சுட்டுக் கொள்ளலாம் போலிருக்கும்.

இப்போதைக்கு விஷயம் அறிவதற்காக மேலும் எவனையும் பிடிக்க வேண்டாம் என்று டிராவ்கின் தீர்மானித்திருந்தான். எதிரிகளின் படைகளுக்கிடையே அவர்கள் இருந்தனர். கவனக்குறைவான ஒரு சிறு அசைவு, 'முணுக்' கென்ற ஒரு நெரிந்த குரல் ஏற்பட்டாலும் போதும் — எஸ் எஸ் படை முழுதும் அவர்கள் மேல் பாய்ந்து விடும். எஸ் எஸ் டாங்கிப் பிரிவு அங்கு திரண்டு கொண்டிருந்தது. ஆனால் அதன் பலமும் நோக்கங்களும் இன்னவென்று விளங்கவில்லை. படை வரிசைகளையும், டாங்கிகளையும், பீரங்கிகளையும் எண்ணி, ஒருவாறு அதன் பலத்தைத் தீர்மானிக்கலாம் என்றாலும் அதன் தலைமை அதிகாரிகளின் நோக்கங்கள்

இன்னவென்பதை விஷயம் தெரிந்த ஒரு ஜெர் மானியனிடமிருந்து தான் அறியலாம். ரயில் நிலையத்தைச் சோதனையிட்ட பிறகே அப்படிப் பட்ட ஒருவனைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று எண்ணியிருந்தான் டிராவ்கின்.

ஆனால் இவ்வளவு கவனத்துடன் வகுத்திருந்த திட்டம் எதிர்பாராத விதமாய்க் கவிழ்ந்தது. இடப் புறத்தில் திடீரென்று ஏதோ அசைவுற் றது. மாமச்கின் இருட்டிலிருந்து வெளிப்பட்டுத் தாழ்ந்த குரலில், ''ரஸ்தாவின் பக்கம் இங்கு ஒரு ஜெர்மானியன் குடிபோதையில் சுகமாய்ப் படுத்துக் கிடக்கிறான்'' என்று கூறினான்.

அக் 'குடிகாரனைப்' பார்த்ததும் விஷயத்தை டிராவ்கின் அறிந்து கொண்டான். அம்மனிதன் கவனக்குறைவால் காட்டிற்குள் வந்துவிட்டான். மாமச்கின் அவனை அடித்து வீழ்த்தி ஆயுதங் களை அகற்றியிருந்தான்.

''அவன் நேராக என் மேல் வந்து மோதி னான். நான் என்ன செய்வது?'' என்று சிறிது தயக்கத்துடன் கூறினான் மாமச்கின்.

விவாதத்திற்கு நேரமில்லை. கைதியைப் பிடித் துக்கொண்டு காட்டினுள் புகுந்தனர். தவறிப் போய்விட்ட தங்கள் தோழனை அழைத்து மற்ற ஜெர்மானியர்கள் கூச்சலிட்டது அதற்குள்ளாக வே கேட்டது. ருஷ்யர்களின் காதுக்கு விந்தை யாகப் பட்ட பல ஒலிகள்:

''ஊ-ஹூ-உ-உ! ஊ-ஹூ-உ-உ-உ!''

''வில்லிபால்ட்! வில்லிபால்ட்!''

''ஹெர் பென்னெக்கே!''

ஒரு சிறிய ஏரிக் கரையருகில், புல்லின் மேல் கைதியைக் கிடத்தினார்கள். மாமச்கின் அவன் முகத்தில் தண்ணீரைத் தெளித்து, தனது கூஜா விலிருந்து சிறிது வோத்காவும் கொடுத்தான். சிரிப்போடு 'தனது' ஜெர்மானியனை மிகப் புகழ்ந்து பேசத் தொடங்கினான்.

''இப்போது நமக்குக் கிடைத்திருப்பவன் சரி யான எஸ் எஸ் படையினன். இவனுக்கு எல்லாம் தெரியும்... தோழர் லெப்டினன்ட், பாருங்கள். இவன் அதிகாரி. இவன் அதிகாரி தான் என்று நான் பந்தயம் வைக்கிறேன்.''

ஆவலோடு அந்த ஜெர்மானியனைப் பார்த்து விட்டு யூரா கோலுப் ஏமாற்றம் தோன்ற மூக்கைச் சுளித்துப் பெருமூச்சு விட்டான்.

''எல்லாரும் தலைக்கொரு ஜெர்மானியனை பிடிக்கிறார்கள். எனக்கு மட்டும் எவனும் அகப் பட மாட்டேனென்கிறான்.''

''போனால் போகிறது, வருத்தப் படாதே, கோலுப்'' என்று தொலைவில் மறைந்து ஒடுங் கும் கூச்சல்களைக் கவனித்துக் கொண்டிருந்த அனிக்கானவ் கூறினான். ''இந்த இடத்தைச் சுற்றி ஏராளமான ஜெர்மானியர்கள் இருக்கி றார்களே. உனக்கும் அவர்களைப் பிடித்துவரும் சந்தர்ப்பம் கிடைக்காமலா போகும்.''

அந்த எஸ் எஸ் ஹௌப்ட்ஷார்ப்யூரெர்* டிராவ்கினை ஒரே விதிர்விதிர்ப்புடன் பார்த் தான். ஐந்தாவது 'வைகிங்' எஸ் எஸ் டாங்கி டிவி

---

* சார்ஜென்ட் மேஜர்.

ஷனைச சேர்ந்த, ஒன்பதாவது 'வெஸ்ட்லண்ட்' மோட்டார் ரெஜிமென்டிலுள்ளவன் என்று உடல் பதற, வாய் குழற அவன் தெரிவித்தான். அவனுடைய பையிலிருந்து மாமச்கின் எடுத்து வைத்திருந்த அலுவலக தஸ்தாவேசில் குறிப்பிட்டிருந்த படியே இருந்தது அவன் சொல்லியதும். நான்கு கம்பெனிகளையுடைய மூன்று பட்டாளியன்களைக் கொண்டது அந்த 'வெஸ்ட்லண்ட்' படையென்றும், "கனத்த ஆயுதத் தொகுதிகளில்" ஆறு, அல்லது பத்துக் குழாய்களையுடைய மார்டர் பீரங்கிகளிருப்பதாகவும் அவன் மேலும் விவரித்தான். அப்படையில் டாங்கிகளில்லை என்றும் மற்றப் படைகளில் உண்டா, இல்லையா என்பது தனக்குத் தெரியாதென்றும் சொன்னான். இந்த டிவிஷன் யுகோஸ்லாவியாவிலிருந்து வந்துள்ளது. அதன் தலைமைச் செயலகம் பக்கத்திலிருக்கும் ஒரு கிராமத்திலிருக்கிறது. அவ்வூரின் பெயர் எதுவென்று சொல்ல இயலாது என்றும் ஏனென்றால் ருஷ்யப் பெயர்களையும் போலிஷ் பெயர்களையும் தனக்கு நினைவில் வைத்துக் கொள்ள முடிவதில்லை என்றும் கைதி கூறினான். மாஸ்கோ, வார்ஸா என்பவைகள் மட்டுமே தனக்கு நினைவிலுள்ளன என்று ஒருவித சவால் விடுவது போலக் கூறினான்.

அவனுடைய 'வள்ளல்' மாமச்கின் கன்னத்தில் பளாரென்று விட்ட ஓர் அறையில் ஜெர்மானியன் அது வரை காட்டிய உறுதியெல்லாம் பறந்துவிட்டது. மிருகத்தைப் போல் ஊளை

யிட்டான். மாமச்கினைக் கண்டாலே அவனுக்கு சாவைக் கண்டது போல உதறலெடுத்தது. மாமச்கின் அவனருகே குனிந்து விட்டால் போதும் — உடனே அந்த நாஜி குலை நடுங்கிப் பரிதாபமாய் டிராவ்கினைப் பார்த்துக் கெஞ்சுவான்.

ஹெளப்ட்ஷார்ப்யூரெரின் உடல் ஏரியில் வீசப்பட்டதும் டிராவ்கின் 'பூமி'யுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டான். இம்முறை குரல்கள் கணீரெனக் கேட்டன; தான் சேகரித்திருந்த தகவல்களையெல்லாம் தெரிவித்தான்.

'பூமி'யிலிருந்து வந்த குரல்களின் தன்மையிலிருந்து தான் தெரிவித்த தகவல்கள் ஓரளவு எதிர்பாராதவையென்றும் முக்கியமானவை என்றும் டிராவ்கின் அறிந்துகொண்டான். கடைசியில் பெண் குரல் பேசியது. அது காத்யா என்பதை டிராவ்கின் கண்டு கொண்டான். நல்ல திர்ஷ்டம் உண்டாக வேண்டுமென்றும் விரைவில் அவன் திரும்பிவர வேண்டுமென்றும் அவள் வாழ்த்தினாள்.

அவனது வெற்றியில் பெருமை கொண்டு, உணர்ச்சிப் பெருக்கால் தழுதழுக்கும் குரலில், "எங்கள் அன்பை உங்களுக்கு அனுப்புகிறோம்" என்று அவள் கூறி முடித்தாள். பிறகு தான் சொல்லியது அவர்களுடைய வேவு நடவடிக்கைக்கே மிகவும் முக்கியமானதோர் விஷயம், போல, "புரிந்து கொண்டீர்களா? நான் சொல்லியதைப் புரிந்து கொண்டீர்களா?" என்று கேட்டாள்.

''ஆம், புரிந்து கொண்டேன்'' என்று அவனும் பதிலளித்தான்.

பலபலவென்று விடியும் நேரத்தில் வேவுவீரர்கள் வழியிலுள்ள ஒரு சிறிய ரயில் நிலையத்தினருகே வந்து சேர்ந்தனர். அவர்கள் செல்ல நினைத்த நிலையத்திலிருந்து ஏழு கிலோமீட்டருக்கு அப்பால் அது இருந்தது. மஞ்சள் வர்ணம் தீட்டப்பெற்ற சிறு ஒற்றைமாடிச் செங்கற் கட்டிடம். சுற்றி இருவரிசை கனத்த பைன்மரக்கட்டைகள் பாதுகாப்பிற்காக அடுக்கப்பட்டிருந்தன. ரயில் நிலையத்தின் அருகாமையிலிருந்த மரப்பாலத்தின் இருமருங்கிலும் இதே போன்ற பாதுகாப்பு அமைக்கப்பட்டிருந்தது. இவைகளின் உதவியால் ரயில் போக்குவரவை கொரில்லாப் படையின் தாக்குதல்களிலிருந்து காப்பாற்றிக்கொள்ளலாம் என்று ஜெர்மானியர் நம்பியிருந்தனர்.

ரயில் நிலையத்திலிருந்து, வேவுவீரர்கள் அதிகாலையில் வெளியேறிய காட்டின் ஓரம் வரை லாரிகள் நீண்ட வரிசையாக நின்றன. சுற்றிலும் நிலவிய அமைதியில் ரயில் நிலையத்துள் டெலிபோன் மணி கணகணத்ததும் கரகரப்பான குரலில் ஜெர்மானியன் பேசியதும் அவர்கள் காதில் விழுந்தது.

இரண்டு நாட்கள் காடே கதியாக அலைந்து திரிந்த பின்னர் கைகாட்டிமரங்களையும், கறுப்பு லீவர் கட்டைகளையும், கண்ணுக்கு எட்டிய தூரம் வரை நீண்டு சென்ற தண்டவாளங்களையும் கண்டது அவர்களுக்கு நிதி கிடைத்தாற் போல் இருந்தது.

அனிக்கானவ் பறவைக் குரலை ஒலித்து எல் லாரையும் நிற்கச் செய்தான். பின்னர் கடைசி யிலிருந்த லாரியின் பக்கம் ஊர்ந்து சென்று டிரைவரின் அறையுள் எட்டிப் பார்த்தான். அது காலியாக இருந்தது. அடுத்த இரண்டு லாரிகளிலும் அப்படியே இருந்தது. அவற்றுள் வெற்று மாவுச்சாக்குகள் குவித்து வைக்கப்பட் டிருந்தன.

அனிக்கானவ் திரும்பி வந்து டிராவ்கினிடம் செய்தியைத் தெரிவித்தான்.

''பாரம் ஏற்றிச் செல்வதற்கு வந்திருக்கிறார் கள். ரயில் வருவதற்காகக் காத்துக் கொண்டிருக் கிறார்கள்'' என்று அவன் கூறினான்.

ஆகவே ரயில் வரும்வரை தாங்களும் காத் திருப்பது என்று தீர்மானித்தான் டிராவ்கின். ஆனால் ரயிலோ வரவில்லை. சிறிது நேரத்தில் உறக்கக் கண்களுடன் லாரி ஓட்டிகள் ரயில் நிலையத்திலிருந்து கூட்டமாய் வெளியேறி, சாவ காசமாய்ப் பேசிக் கொண்டு அவரவர்களின் லாரி பக்கம் பிரிந்து சென்றார்கள்.

அமைதியான காலைக் காற்றில் அவர்களு டைய உரையாடல் தெளிவாய்க் காதில் விழுந் தது. லாரிகள் அந்நிலையத்தில் சுமை ஏற்றப் போவதில்லை; அடுத்தாற் போலுள்ள பெரிய ரயில் நிலையத்தில் தான் ஏற்றப் போகின்றன என்ற செய்தியை டிராவ்கின் அறிந்துகொண் டான். சற்றே யோசனை செய்தபின்பு, தனது வீரர்களில் இருவரை மட்டும் அங்கு அனுப்பி விட்டு, மற்றவர்களைத் தன்னுடன் வைத்துக்

கொள்வதென்று அவன் தீர்மானித்தான். ஜெர் மானியர்கள் ஒரேயடியாகக் குழுமிக்கிடக்கும் ரயில் நிலையத்திற்கு எல்லா வீரர்களையும் அனுப்பி அபாயத்துக்கு உள்ளாக்குவானேன்?

அனிக்கானவையும் பிகோவையும் மட்டுமே அவ்வேலைக்கு டிராவ்கின் தேர்ந்தெடுத்தான். பிறகு கோலுபினுடைய கெஞ்சுதலுக்கு இணங்கி அவனையும் மூன்றாமவனாக அனுப்பினான்.

''நாம் ஒரு லாரியில் தொத்திக்கொண்டு சுக மாய்ச் செல்லலாமா?'' என்று வினவினான் அனிக்கானவ்.

கடைசி லாரியை நோக்கி மூவரும் ஊர்ந்து சென்று அதற்குள் புகுந்துகொண்டனர். பிகோ வையும் கோலுபையும் சாக்குகளால் நன்றாய்ப் போர்த்து மூடிவிட்டு, தன்னையும் மூடிமறைத் துக் கொண்டான் அனிக்கானவ். பார்ப்பதற்கு மட்டும் ஒரு சிறு இடைவெளி வைத்துக்கொண் டான். துணை எந்திரத் துப்பாக்கியைத் தயா ராகப் பிடித்துக்கொண்டே இருந்தான்.

அந்த லாரியை ஓட்டும் ஜெர்மானியன் சீக்கிரம் அருகே வந்து தன் இடத்தில் அமர்ந்து கொண் டான். முன்னேயுள்ள லாரி புறப்படும் வரை காத்திருக்க நேரிட்டது. பிறகு சாவியைத் திருப்பி, ஸ்டார்டரை மிதித்தான். எஞ்சின் கர் ரென்று இரைந்தது.

லாரிகள் வரிசையாகச் சென்றன. நொடி களில் தூக்கிப் போட்டுக்கொண்டு, ஒரு காட்டுப் பாதை வழியாகப் போயின. சுமார் பதினைந்து நிமிடங்கள் வரை அவை ஓடிக் கொண்டிருந்தன.

திடீரென்று டிரைவர் பிரேக்குகளைப் போட்டு நிறுத்தினான்.

ஜெர்மன் பேச்சு காதில் விழுந்தது; இரு ஜெர்மானியர்கள் லாரியின் பக்கம் விரைந்து வந்து, அதற்குள் குதிப்பதைக் கண்டான் அனிக் கானவ். வேவு வீரர்களின் நற்காலம் தான், அந்த ஜெர்மானியர்கள் தங்களுடைய கரிய எஸ் எஸ் உடையின் மீது மாவு படிந்துவிடு மென்று பயந்து, சாக்குகளிலிருந்து கவனமாக விலகிப் பின்பலகை மீது உட்கார்ந்து கொண் டனர். இருந்த போதிலும் அவர்கள் பக்கத்தி லிருப்பது ஆபத்துதானே. லாரி மேடுபள்ளங் களில் எகிறித் தத்திக் கிடுகிடுத்தது. அதனால் சாக்குகள் இடம் பெயர்ந்து விலகிக் கொண் டிருந்தன. ஆகவே உள்ளே வீரர்கள் மறைந் திருந்தது எந்த நிமிடத்திலும் வெளியாகிவிடும். அனிக்கானவிற்கு மிகவும் சங்கடமாக இருந்தது. அழையா விருந்தினரான அவ்வழித் துணைவர் கள் ரயில் நிலையம் வரை தங்களுடன் கூடவே வரலாம். அது நிலைமையைப் படுமோசமாக்கி விடும்.

ஒரு பெருத்த ஆரவாரத்தால் அவனது யோசனை தடைபட்டது. லாரி சடக்கென நின்றது. ஆட்கள் அங்குமிங்கும் ஓடினார்கள். பின் புறம் உட்கார்ந்திருந்த ஜெர்மானியர்களும் தரையில் குதித்தனர்.

அடுத்த நிமிடமே விமான எஞ்சின்களின் ஒரே மாதிரியான ரீங்காரம் கேட்டது. தன்னை யறியாமலே அனிக்கானவும் கழுத்தைச் சாக்கு

களுக்கு உள்ளேயிழுத்துக் கொண்டான். ஆனால் திடீரென்று அவை சோவியத் விமானங்கள் என்ற உணர்ச்சி உண்டாகவே மகிழ்ச்சியடைந்தான்.

சோவியத் குண்டுகள் தங்களுக்குத் தீங்கு செய்யா என்பது போல வெளியே கழுத்தை நீட்டியவாறு எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த தனது தோழர்களிடத்தில் சந்தோஷமாய்க் கூறினான்:

''நம்முடைய விமானங்கள், தம்பிகளே!''

ஆறு விமானங்கள் பயங்கரமாய் உறுமிக் கொண்டு காட்டின் மேல் தாழ்ந்து வட்டமிட்டுப் பறந்தன.

அனிக்கானவ் சுற்றிலும் பார்த்தான். ஜெர்மானியர்கள் எல்லாரும் புதர்களில் பதுங்கியிருந்தனர். ரயில் எஞ்சின்களின் ஊதல் நன்றாய்க் கேட்டது. ஆகவே ரயில் நிலையம் அருகில் தான் இருக்க வேண்டும்.

''வாருங்கள்!'' என்று அனிக்கானவ் உத்தரவிட்டான். மூவரும் கீழே குதித்தனர்.

அவர்கள் லாரிகளுக்கிடையே பாய்ந்து, சாலையோரமாயிருந்த கிடங்கில் திடுமென விழுந்து, தட்டித் தடுமாறி வெளியேறிக் காட்டை நோக்கி ஓட்டமெடுத்தனர். அதற்குள் பள்ளத்தில் குதித்து வெளியேறிய நொடிப்பொழுதில், அங்கு பதுங்கிக் கொண்டிருந்த ஒரு ஜெர்மானியன் அவர்களைப் பார்த்து விட்டான். திடுக்குற்று ஒரு நிமிடம் பேசாமலிருந்து, பிறகு தலையை உயர்த்தி உயிரே போவது போல, "Fallschirmjäger!"* என்று

---

* பராசூட்காரர்கள்!

கூக்குரலிட்டான்.

ஜெர்மானியர் கண்மண்தெரியாமல் சுட ஆரம் பித்தனர். வேவுவீரர்களும் தங்கள் துணை எந் திரத் துப்பாக்கிகளால் பல தடவை பதிலுக்குச் சுட்டனர்.

அவர்கள் காட்டிடையிருந்த ஒரு பெரு வெளி யைக் கடந்து சென்றனர். அப்பொழுது அனிக் கானவ் கோலுபின் முகம் வெளுத்திருப்பதைக் கண்டான். திடீரென்று அவன் கீழே விழுந்து விட்டான்.

அனிக்கானவ் அவனைத் தன்னுடைய அகன்ற முதுகின் மேல் இழுத்து ஏற்றிக் கொண்ட பொழுது கூட, ''நாம் அந்த ஜெர்மானியனைப் பிடித்திருக்கலாம்...'' என்றான் கோலுப்.

காயமடைந்த பிறகு அவன் முதலாவதாகக் கூறிய இவ்வார்த்தைகளே அவனது குறுகிய வாழ்க்கையின் இறுதி வார்த்தைகளுமாகும். துப் பாக்கிக் குண்டு ஒன்று அவனது மார்பில் இரு தயத்திற்குக் கீழாகப் பாய்ந்திருந்தது. இதயத் துடிப்பு இருந்தாலும், வரவர குறைந்துகொண் டே வந்தது. மறுபடியும் ஒரு தடவை அவனுக்கு நினைவு வந்த போது தனக்கு அருகில் லெப் டினன்டின் கடுகடுப்பான முகத்தையும், மாமச்கி னுடைய கண்ணீர் நிரம்பிய உருண்டை விழி களையும் கண்டான்.

காட்டில் இடிமுழக்கத்துடன் மழைப் புயல் வீசி யது. சுழன்று சுழன்று அடித்த காற்றில் தளிர் மண்டிய ஓக் மரங்கள் நொய்யென்று இசைத் தன. ஆயிரக்கணக்கான சிற்றோடைகள், பதறி

யோடும் சுண்டெலிகளைப் போல் காலடியில் பாய்ந்து பெருகின.

உயிர் போகும் தறுவாயில் இருந்த அவ்விளை ஞன் அருகே டிராவ்கின், அனிக்கானவின் வர வை எதிர்பார்த்து, அசைவின்றி அமர்ந்திருந் தான். அனிக்கானவ் மறுபடியும் மாமச்கினு டன் ரயில் நிலையத்திற்குச் சென்றிருந்தான். இந்தச் துக்கமிகுந்த விபத்திற்குப் பிறகு மீண் டும் தனது கூட்டத்தைப் பிரித்தனுப்ப டிராவ் கின் விரும்பவில்லைதான். ஆனால் கோலுப் உயிரோடிருக்கும் வரையில் அவனைத் தனியாக விட்டுச் செல்லவும் முடியாது. அதே சமயம் அவர்களுடைய வேலையைச் செய்து முடிக்கவும் வேண்டும்.

'பூமி'யுடன் டிராவ்கின் தொடர்பு ஏற்படுத்த முயன்றான். ஆனால் முடியவில்லை. செவிக் குழாயில் இடைவிடாத ஊளை ஓசையும் அடிக் கடி வெடியதிர்ச்சியும்தான் கேட்டன.

சிறிய நீரோடைகள் டிராவ்கின் காலடியில் பெருகின; பெருந்துளிகள் தோள் மேல் விழுந் தன. அந்த அழகிய வாலிபனின் முகத்திலிருந்த தூசியையும் துன்பக் குறிகளையும் மழை கழுவி விட்டது. மையிருட்டில் அம்முகம் வெண்மை யுடன் ஒளிர்ந்தது.

...அனிக்கானவும் மாமச்கினும் ரயில் நிலை யத்தைச் சுற்றியிருந்த கட்டிடங்களுக்கு அரு காமையில் ஊர்ந்து சென்றனர். அடிக்கடி வெட் டிய மின்னொளியில் அவர்கள் இரண்டு சாமான் வண்டித் தொடர்கள் வந்திருந்ததைக் கண்

டனர். அவைகளில் ஒன்றில் பெரிய டாங்கிகள் இருந்தன.

ரயில் எஞ்சின்களிலிருந்து நீராவிப் படலங்கள் குப்குப்பென்று கிளம்பின. தண்டவாளங்களின் மேல் தீப்பொறிகள் சிந்திச் சிதறின. முட்கம்பி வேலி சூழ்ந்த கிட்டங்கிகளைச் சுற்றி ஆட்கள் தடதடவென்று போய்வந்த வண்ணமிருந்தார் கள். வேவுவீரர்கள் கேட்டுச் சலித்துப் போய் விட்ட ஜெர்மன் பாஷையில் அவர்கள் பேசினர். சாக்குகளும் கையுமாக வந்து கொண்டிருந்த உக்ரேனியக் குடியானவப் பெண்களின் கூட்ட மொன்றை ரயில் பாதையிலிருந்து அப்பால் விரட்டியவாறு காவற்காரர்கள் உரத்துக் கத்தி னர். பெண்களின் கூச்சலும் புலம்பல்களும் வேவு வீரர்கள் செவியில் விழுந்தன:

''நாசமாய்ப் போகிற பன்றிப் பயல்கள், ஓர் இடத்திற்கும் நம்மைப் போகவிட மாட்டார் கள்...''

அனிக்கானவ் தன் செயலைக் குறித்து வெறுப் புற்று இருந்தான். அந்த அநாதிப்பயல் லாரியில் ஏன் தான் ஏறிப் போனோம்? அதில் செல்லாம லிருந்தால் கோலுப் இன்னும் உயிரோடிருப்பா னே. ஐயோ, பாவம், அவன் சைபீரியாவிலிருந்து வந்தவன். தைகாவில் அலைந்து திரியும் பழக்க முடையவன். எதற்காக அந்த லாரியில் ஏறிக் கொண்டான்?

ஜெர்மானியர்கள் டாங்கிகளைக் கீழே இறக் கிக் கொண்டிருந்தார்கள்; ஒரு பெருந்தாக்குதல் வரப் போகிறது என்பதற்கு அது அறிகுறி.

ஆனால் எங்கே என்பது தான் தெரியவில்லை. இன்னும் ஒரு ஜெர்மானியனைப் பிடிக்கமுடியுமானால், எஸ் எஸ் படைப் பிரிவு அங்கு எதற்காக வந்திருக்கிறது என்பதை அவர்கள் கண்டுபிடித்து விடலாம்.

''ஏராளமான ஜெர்மானியர்கள் எங்கு பார்த்தாலும் போய் வந்த வண்ணமாயிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பிரிவுப்படையின் வேலைத்திட்டத்தைப் பற்றி இவர்களில் யார் சொல்ல முடியும்? இனிமேல் ஏப்பை சாப்பைகளைப் பிடிப்பதில் பயனொன்றுமில்லை.'' இப்படி எண்ணமிட்டான் அனிக்கானவ்.

பளபளப்பான கரிய மழை அங்கிகளை அணிந்த, ஒடிசலும் உயரமுமான இரு ஜெர்மானியர்கள் அனிக்கானவின் கவனத்தைக் கவர்ந்தனர். அவர்களிருவரும் சேர்ந்தும் தனித்தனியாகவும் வளையவந்து அதிகார தோரணையுடன் உத்தரவிடுவதும் மின்னல் ஒளியில் தெரிந்தது. அவர்கள் பொறுப்புள்ள அதிகாரிகள்தான் என்பது வெளிப்படையாயிற்று. அருகேயிருந்த சாமான் விடுதியின் பின் சுவரோரமாக ஒரு கார் நின்று கொண்டிருந்தது. அதில் தான் அவர்கள் வந்திருக்க வேண்டும்.

கொட்டும் மழையில் உடல் வெடவெடக்க அனிக்கானவ் கோலுபைப் பற்றி நினைத்தான். இன்னும் அவன் உயிரோடிருப்பானோ என்னவோ? மழையில் நனைந்துகொண்டு, ஐயோ, பரிதாபம்! அந்தச் சிறு பையன். இந்த ஜெர்மானியர்கள் அணிந்துள்ள மழைக்கோட்டு ஒன்றை

அவனுக்காகக் கொண்டு போனால் எவ்வளவு நன்றாக இருக்கும்.

''இந்த இரு அதிகாரிகளில் ஒருவனைப் பிடித்துக்கொண்டு போவோமா?'' என்று அனிக்கானவ் மாமச்கினைக் கேட்டான்.

''ஆனால் நமது லெப்டினன்ட் எவனையும் பிடித்து வரச் சொல்லவில்லையே.''

அனிக்கானவ் தனது கூட்டாளியின் முகத்தை நன்கு கவனித்தான்.

''அட ஒரு நிமிட வேலை. அப்புறம் நாம் 'வீடு' திரும்பலாம்'' என்று சாந்தமாய்க் கூறினான்.

மாமச்கினுக்கு உதறலெடுத்தது. கசகசவென்று நெளிந்து கொண்டிருந்த நூற்றுக் கணக்கான ஜெர்மானியர்களுக்கு எதிராக அவர்கள் இரண்டே பேர். இந்த நூற்றுக் கணக்கான பேர்களில் ஓர் அதிகாரியை அவர்கள் — அதாவது இரண்டே பேர் — பிடித்துக் கொண்டு போவதாம்! அவனுக்கு மெய்யாகவே குலை பதறிற்று. ஆனால் அனிக்கானவ் அவனை இன்னும் கூர்ந்து கவனித்தவாறே, ''ஆமாம், ஒரே நிமிட வேலை...'' என்று திரும்பக் கூறினான்.

மாமச்கின் நீண்டதொரு மூச்சிழுத்துத் தலையை நிமிர்த்திக் கொண்டான். திடீரென்று அவனுக்கும் உற்சாகம் பிறந்தது. அடித்துப் பெய்யும் மழைக்கு எதிராக முகத்தைத் திருப்பிக் கொண்டு, ''சரி, வான்யா, அப்படியே செய்து விடுவோம்... வா, ஒரு கை பார்க்கலாம். ஒன்றும் பிரமாதமில்லை. நிச்சயமாய் நம்மால் முடி

யும்'' என்று சுரங்கண்டவன் போல் படபடப்புடன் பொரிந்து கொட்டினான்.

இருவரும் காரை நோக்கி ஊர்ந்து சென்றார்கள். முட்கம்பிக்கு அடியில் நுழைந்து போய், காரினருகே மூச்சுக் காட்டாமல் கிடந்தனர். காரின் பளிச்சிடும் முகட்டின் மேல் மழை நீர் சடசடவென்று கொட்டிக் கொண்டிருந்தது.

மாமச்கின், தன்னை மேலும் திடப்படுத்திக் கொண்டு, ''இந்த இரு ஜெர்மானியர்களில் ஒருவன் ஜெனரல் தான் என்று நினைக்கிறேன்'' என மெதுவாய்க் கூறினான்.

''சந்தேகமில்லாமல், அவன் ஜெனரல்தான்'' என்று கூறி அனிக்கானவ் அவனை ஊக்கப் படுத்தினான்.

அவர்கள் குறைந்தது ஒரு மணி நேரம் காத்திருந்த பின் காலடிச் சத்தம் கேட்டது. இரு அதிகாரிகளில் ஒருவன் சொன்னான்:

''Wir fahren sofort!'' *

நெஞ்சில் அனிக்கானவின் கத்தி பாயவே அம் மனிதன் வீழ்ந்தான். பலத்த அடியொன்றால் மற்றவனும் மயங்கவே மாமச்கின் அவனை லபக் கென்று பிடித்து, அவன் முகத்தைத் தன் அகன்ற மார்போடு சேர்த்து அழுத்தினான். ஆகவே அவனும் உணர்விழந்தான்.

தாரை தாரையாய்ப் பொழிந்த மழையில் மேலெல்லாம் சிலுசிலுக்க ஜெர்மானியர் கிட்டங்கிகளுக்கும் ரயிலுக்குமாகப் பரபரப்புடன் ஊடாடிய வண்ணமாயிருந்தனர்.

---

* இதோ போய்விடுவோம்!

## அத்தியாயம் பத்து

தலைசிறந்த எஸ் எஸ் படைகளில், புகழ் பெற்று விளங்கிய பிரிவுகளில் ஒன்று ஐந்தாவது 'வைகிங்' எஸ் எஸ் டாங்கி டிவிஷன் என்பது.

இப்பிரிவுப்படை குருப்பென்ப்யூரெர் (எஸ் எஸ் லெப்டினன்ட் ஜெனரல்) ஹெர்பெர்ட் ஹில்லே என்பவன் தலைமையிலிருந்தது. ஒன்பதாவது 'வெஸ்ட்லண்ட்' மோட்டார் ரெஜிமெண்டும், பத்தாவது 'டோய்ச்லண்ட்' மோட்டார் ரெஜி மெண்டும், ஐந்தாவது டாங்கி ரெஜிமெண்டும், ஐந்தாவது மோட்டார்ப் பீரங்கித் தொகுதியும், ஐந்தாவது பெரும் பீரங்கி ரெஜிமெண்டும் இதில் அடங்கியிருந்தன. சுற்றியுள்ள காடுகளில் மிகச் சிறந்த போர்ச்சாதனங்களுடன் இப்படைகள் இர கசியமாய்த் திரட்டப்பட்டு வந்தன. கோவெல் நகரை முற்றுகையிட்டிருக்கும் ருஷ்யப் படையைத் திடீரென்று தாக்கி, அதைச் சிறு துண்டுகளாகச் சிதறடித்து அழித்துவிட்டு, ஸ்டகோட், ஸ்டீர் என்ற புகழ்பெற்ற இரு நதிகளுக்கு அவர்களைத் துரத்தியடிப்பது என்பது தான் ஜெர்மானியரின் நோக்கம்.

பலத்த புதிய படைகளைக் கொண்ட இப் பிரிவில் பதினையாயிரம் துருப்புகளும் ஹிட்லர் அரசாங்கத்தின் மந்திரி ஷ்பேர் என்பவனால் ''டாங்கிகளின் அரசன்'' என்று புகழப்பட்ட புது வகையான 'டைகர்' டாங்கிகள் அறுபதும் இருந்தன. இந்த டிவிஷனின் தலைவர்களில் அடிக்கடி ஹிட்லரின் கவனத்திற்குப் பாத்திர

மானவனான ஷ்டன்டர்டென்ப்யூரெர் ம்யுல் லென்காம்ப், முன்பு ஹிட்லரின் தனிப்பட்ட அட் ஜூடன்டாயிருந்த ஷ்டன்டர்டென்ப்யூரெர் கர் கைஸ் ஆகியோரும், மற்றும் ஹிம்லரின் கை தேர்ந்த சீடர்களும், நாஜிக் கட்சி, ராணுவம் இவற்றின் மேலதிகாரிகள் கூட்டத்தில் உயர் பதவி வகிப்பவர்களுமான பலரும் இருந்தார்கள். எல்லாருமே நெஞ்சீரமின்றிச் சதி செய்து முன் னேறியவர்கள்.

இந்த 'வைகிங்' டிவிஷனைத் தொடர்ந்து— இதைப் போல் அத்தனை விளம்பரமில்லாத, எனினும் பொறுக்கியெடுக்கப்பட்ட ஒரு பிரிவுப் படை—லெப்டினன்ட் ஜெனரல் நிக்கெலின் தலைமையிலமைந்த முன்னூற்று நாற்பத்திரண் டாவது கிரனேடியர் டிவிஷன் — பிரான்ஸிலிருந்து வருவதாக இருந்தது. எஸ் எஸ் படைகளின் வெற்றியை அதனைத் தொடர்ந்து நன்கு பயன் படுத்திக்கொள்ள வேண்டுமென்பது இவர்களுக்குக் கட்டளை.

இவ்வேற்பாடுகள் முழுவதும் ஒரே மூடுமந்திர மாக நடைபெற்று வந்தன.

இப்பிரிவுப் படைத்தலைவனாகிய ஹில்லே என் பவனிடம் அவனுடைய ஆதரவாளனாகிய வான் டெம் பாக் என்ற எஸ் எஸ் படைத்தலைவன், பெர்லினுக்கு அருகே ப்வாவுயென் இன்ஸல் என்னும் தீவிலிருந்த தனது மாளிகையில் பின் வருமாறு பேசினான்: ''ருஷ்யர்கள் தடதட வென்று முன்னேறி கவர்னர் ஜெனரலின் மா காணத்திற்கு வெகு அருகில் நெருங்கிவிட்டனர்.

இந்த முன்னேற்றத்தின் முடிவு என்ன ஆகும் என்பதை, பார்டை கெனொஸ்ஸே* ஹில்லே, நீங்கள் நன்கறிவீர்கள். இது ஐரோப்பாவில் எங்கும் ஜெர்மானியருக்கு எதிராக உள்ள சக்தி களைத் தூண்டிவிடும்; பிரிட்டிஷ்காரர்களையும் அமெரிக்கர்களையும் கூட செயலில் இறங்கும்படி கட்டாயப்படுத்தலாம். உங்களுடைய நடவடிக் கையை ப்யூரெர் மிகவும் முக்கியமானதென்று கருதுகிறார். இப்படை மாற்றம் மிகவும் இரக சியமாக நடைபெற வேண்டுமென்று தலைமைக் காரியாலயம் விரும்புகிறது. எல்லாவிதமான முன்னெச்சரிக்கைகளையும் எடுத்துக் கொள்ளுங் கள்.''

கொவெலுக்கு மேற்கேயுள்ள காட்டில் தனது டிவிஷன் முழுவதையும் திரட்டி வைத்துவிட்டு, இப்பொழுது, தனக்கு ஒப்படைக்கப்பட்டுள்ள நடவடிக்கையின் வெற்றி நிச்சயம் என்ற முழு நம்பிக்கையுடன், மேற்கொண்டு வரும் உத்தரவு களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் ஹில் லே. 1940 அல்லது 1943இல் இருந்ததைப் போல் கூடத் தனது படை இப்பொழுது இல்லை என்பது அவனுக்குத் தெரிந்த விஷயம் தான். முதலாவது, இனத் தூய்மைக் கொள்கையைக் கைவிடுவது அவசியமாயிற்று. நெதர்லாந்து தேசத்தவர்கள், ஹங்கேரியர்கள், க்ரோவட்கள், போல்களுங்கூட அவனது டிவிஷனில் இப்போது சேவை செய்து வந்தார்கள். இது அவனுக்கு

---

* கட்சித் தோழன்.

வருத்தமாகத் தான் இருந்தது. இவர்கள் அந் நியர்களாயிருப்பினும் 'புதிய அமைப்பிற்குப்' பூர்ண ஆதரவாளர்கள் தான் என்பது உண் மையே. எனினும் இவர்கள் வேற்று இனத்தைச் சேர்ந்தவர்கள் தானே, ஜெர்மன் ரைக்கின் நலன்களில் அவர்களுக்கு என்ன அக்கறையிருக்க முடியும்? ''சிறந்த உடல் அமைப்பு வேண்டும்'' என்ற கோட்பாட்டையும் கூடத் தளர்த்த வேண் டிய அவசியம் நேர்ந்து விட்டது. ஜெர்மனி முழுதிலுமிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட ஆறடி உயரமுள்ள வீரர்களைக் கொண்ட கறுப்புப் படை அல்ல இது. இப்பொழுதுள்ள வீரர்களிற் சிலர், குருப்பென்ப்யூரெர் ஹில்லேயுக்குப் பார்க்க வும் பிடிக்காத அவ்வளவு மோசமான உடல் அமைப்பு உள்ளவர்கள்.

'டோய்ச்லண்ட்' மோட்டார் ரெஜிமென்டைச் சோதனையிடும் பொழுது, ஒற்றைக்கண்ணர் களையும், நொண்டிகளையும், ஒரு கூனனையுங் கூட ஹில்லே கண்டு அருவருப்படைந்தான். படைப்பிரிவில் உள்ளவர்களில் பாதிக்கு மேல் சோனிகளும் குள்ளர்களுமாயிருந்தார்கள். ஹா லந்தையும் பிரான்ஸையும் வெட்டியும் சுட்டும் பாழாக்கிக் கொண்டு முன்னேறி, இரத்த வெறி யும் மனம் போல அடித்த கொள்ளையால் ஏற்பட்ட பேராசையும் பிடர் பிடித்து உந்த காக்கஸஸ் மலைத் தொடர் வரை போய் முட்டிய ஹிட்லரின் லான்ட்ஸ்க்னெஹ்ட் படை யல்ல இது.

பண்டைக் காலம் போல் தோன்றிய அந்நாட்

களை இப்பொழுது நினைத்துப்பார்ப்பதே ஹெர் பர்ட் ஹில்லேயுக்கு மிகவும் இன்பமாக இருந்தது. எல்லாவற்றையும் விட காக்கஸஸ்தான் அவ னுக்கு மிகவும் பிரியம். வளங்கொழிக்கும் அந்தத் தென் பிரதேசத்தின் தெய்விக எழில் சுவிட்ஸர் லாந்தின் அழகைவிட எவ்வளவோ சிறந்து விளங் கியது. இச்செழிப்பான மலைப் பிரதேசங்களுக்கு கவர்னராகவோ, ஷ்டாட்ஹால்டெராகவோ ஓர் அமைதியான பதவியில் அமர்ந்து விடலாம் என்று கூட ஹெர் குருப்பென்ப்யூரெர் ஒரொரு சமயம் கனவு கண்டது உண்டு. அத்தகைய வருமான மிகுந்த பதவி கிடைப்பதற்காக ப்யூரெ ரின் தலைமைச் செயலகத்திலிருந்த ஆதரவா ளர்கள் மூலம் குறிப்புகள் வாயிலாக முயன்றதும் உண்டு. ஆனால் துரதிர்ஷ்டவசமாய் உலகம னைத்திற்கும் தெரிந்துள்ள பல அசந்தர்ப்பங் களால் அக்கனவுகளையெல்லாம் கைவிட வேண் டியதாயிற்று.

அன்றைய இளவேனிற் காலையிலிருந்து ஒரு விதமான மனக்கஷ்டத்தை அவன் உணரலா னான். அது ஒரு புதிராகவும் இருந்தது. முதலா வதாக ருஷ்யர்களின் விமானங்கள் வந்து சென் றன. அவை குண்டு வீசவில்லை யென்றாலும் காடுகளை வேவுபார்த்துவிட்டனவே. பல தட வைகள் ரயில்வே பாதையை ஒட்டியே பறந்தன வே. அங்கு முக்கிய தளவாடங்கள் இறக்கப்பட்டு வந்த ரயில் நிலையத்திற்கு மேலே நெடு நேரம் வட்டமிட்டனவே. துருப்புகளெல்லாம் நன்றாக மறையுருவில் இருந்தன என்றாலும் ருஷ்யர்கள்

இவ்விடத்தைப் பற்றி ஏன் அவ்வளவு கவனம் எடுத்துக் கொண்டனர் என்பது அவனுக்குக் கவலையைத் தந்தது.

வெகு நாள் அநுபவம் வாய்ந்த, போராற்றலுடைய ஹௌளப்ட்ஷார்ப்யூரெர், மெக்லென்பர்க் நகரவாசியான பென்னெக்கே என்பவன், 'வெஸ்ட்லண்ட்' மோட்டார்ப் படையைச் சேர்ந்தவன், இரவில் ஏரிகளின் அருகாமையில் மறைந்து போனான் என்ற விஷயமும் அவனுக்கு எட்டிவிட்டது. உடனே அவனது மனக்கலக்கம் அதிகமாயிற்று. வெகு நேரம் தேடியதற்குப் பிறகு தலைமைச் செயலகத்திலிருந்து எட்டு கிலோமீட்டர் தூரத்தில், சிறிய ஏரிகளில் ஒன்றில் மறைந்து போனவனுடைய உடல் கண்டுபிடிக்கப்பட்டது. ஹெர் ஹௌளப்ட்ஷார்ப்யூரெரின் இதயத்தில் ஒரு கத்திக் குத்தும், தலையில் பலத்த அடியால் ஏற்பட்ட காயமுமிருந்தன.

எனவே தனது செயலகமிருந்த கிராமத்தின் மீது இதன் பிறகு நேர்ந்த விமானத் தாக்குதலுக்கும் பென்னெக்கேயின் மரணத்திற்கும் சம்பந்தமுண்டு என்று குருப்பென்ப்யூரெர் நினைத்ததில் ஆச்சரியமில்லை. ஆகவே அவசரமாகத் தனது செயலகத்தைக் காட்டிற்குள் மாற்றும்படியும், அதைச் சுற்றி மூன்று வரிசைகள் முட்கம்பி வேலி போடும்படியும் அவன் உத்தரவு கொடுத்தான்.

அன்று மாலை அப்படையின் ரண வைத்தியனான லின்டிமேன், இறந்து போன பென்னெக்கேயின் மேல் நடத்திய சோதனையின்

முடிவுகளைத் தெரிவித்துக் கொண்டிருக்கும் பொழுது 'வெஸ்ட்லண்ட்' மோட்டார் ரெஜிமென்டிலிருந்து மேலும் ஒரு தகவல் வந்தது. ஹௌப்ட் ஷார்ப்யூரெர் வில்லிபால்ட் ஏர்ன்ஸ்ட் பென்னெக்கே மேற்கூறிய வருந்தத்தக்க விபத்திற்கு ஆளான இடத்திற்கு அருகே வீரர்கள் காட்டைத் துருவி ஆராய்ந்து கொண்டு வருகையில் அடர்த்தியான கொட்டை மரத் தோப்பில் மற்றொரு உடலைக் கண்டார்கள். 131வது காலாள் டிவிஷனைச் சேர்ந்த கார்போரல் கார்ல் ஹில்லே என்பவனது சவம் அது. (ஹெர் குருப்பென்ப்யூரெர் ஹில்லேயுக்குத் தன் பெயரைப் போல் அதுவுமிருந்தது பிடிக்கவில்லை.)

சிறிது நேரத்திற்குப் பிறகு 'டோய்ச்லண்ட்' மோட்டார் ரெஜிமென்டின் தலைவனான ஷ்டன்டர்டென்ப்யூரெர் ம்யுல்லென்காம்ப் தானே தொலைபேசியில் பேசினான். பச்சை உடைகளை அணிந்துள்ள இனந்தெரியாத சில பேர்களுடன் நடந்த சண்டையில் கெஸ்னெர், மைஸ்னெர் என்ற இரண்டு போர்வீரர்கள் காயமடைந்தனர் என்றும் அவர்களில் கெஸ்னெர் அபாயகரமான நிலையிலிருப்பதாயும் அறிவித்தான். ஷ்டன்டர்டென்ப்யூரெர் மேலும் ஒரு விசித்திரமான செய்தியையும் சொன்னான்: போர்வீரர்களெல்லாரும் ஒரு முகமாக அந்த விநோதப் பேர்வழிகள் மீது வெண்பனி தெளிக்கப்பட்டிருந்ததாகச் சொன்னார்களாம்.

ஒவ்வொரு சமாசாரத்தையும் எச்சரிக்கையாக விசாரித்தறியும்படியும், துன்பமிழைத்து வரும்

அந்த இனந்தெரியாத ஆட்களைத் தேடிப் பிடிக்கும்படியும் குருப்பென்ப்யூரெர் உத்தரவிட்டான்.

ஒவ்வொரு பட்டாளியனிலிருந்தும் ஒரு கம்பெனியும், டிவிஷன் படையைச் சேர்ந்த சோதனைத் தொகுதி முழுவதும், அக்காரியத்தைச் செய்து முடிக்க வேண்டுமென்று கட்டளை பிறந்தது.

அந்தப் பிரதேசத்தில் ''பச்சைப் பேய்கள்'' (Grüne Gespenster), ''பச்சைப் பிசாசுகள்'' (Grüne Teufel) நடமாடுகின்றன என்ற பீதியைக் கொடுக்கும் வதந்திகள் போர்வீரர்களிடையே பரவிக் கொண்டு வருகின்றன என்பதை அறிந்த குருப்பென்ப்யூரெருக்குச் சிறிது அதிருப்தி உண்டாயிற்று என்பதில் ஆச்சரியமில்லை.

இயற்கைக்குப் புறம்பான இத்தோற்றங்களில் குருப்பென்ப்யூரெர் ஹில்லேயுக்கு நம்பிக்கையில்லை. வேவு, எதிர்வேவு ஆகியவைகளுக்குத் தலைவனான காப்டன் வேர்னெரைத் தன்னிடம் வரவழைத்தான். போரில் பேய், பிசாசுகள் கிடையாது, ஆனால் பகைவர் தான் எப்போதும் இருந்து வருவர் என்று கூறி, இந்தப் ''பேய்'' களைக் கண்டுபிடிக்க வேண்டிய நடவடிக்கையை அவன் நேரில் நடத்தி வரவேண்டுமென்று ஹில்லே கட்டளையிட்டான்.

அதே இரவில் ரயில் நிலையத்தில் ஒரு டாங்கிப் படை இறங்கிக் கொண்டிருந்த பொழுது, அதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்பு, தானே நேரில் சென்று பார்வையிட்டிருந்த அதே

ரயில் நிலையத்தில், ஷ்டுர்ம்பான்ப்யூரெர்* டில்லே கொல்லப்பட்டுக் கிடந்தான் (தன் பெயரின் எதுகை போன்ற இந்த ஒலி ஹில்லேக்கு மீண்டும் வேதனையளித்தது); அப்பிரிவுப்படையின் முக்கிய அதிகாரிகளில் ஒருவனான ஒபெர்ஷ்டுர்ம்ப்யூரெர் ** ஆர்தர் வென்டெலை யாரோ தூக்கிச் சென்றுவிட்டார்கள். ஹெர் டில்லேயின் மார்பில் பாய்ந்த கத்தி, முதுகுப்புறம் துருத்திக் கொண்டிருந்தது; அவ்வளவு பலமான குத்து. இவைகளெல்லாம் ஏராளமான அதிகாரிகளும் போர்வீரர்களும் இடைவிடாமல் நடமாடிக் கொண்டிருந்த ரயில் நிலையத்தில் நடந்திருந்தன.

குருப்பென்ப்யூரெர் அங்கு காவலில் இருந்த போர்வீரர்களுக்கும் அவர்களது அதிகாரிக்கும் பதினைந்து நாள் சிறைத் தண்டனை அளித்தான். காப்டன் வேர்னெரை வரவழைத்து, குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதில் போதிய முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை யென்று கடுமையாய்க் கண்டித்தான்.

தண்டவாளங்கள் கடகடத்துப் போயிருந்ததனாலோ என்னவோ, போர் தளவாடங்களை ஏற்றிவந்த ரயில் தொடர் ஒன்று நொறுங்கியதும், 'டோய்ச்லண்ட்' படையைச் சேர்ந்த மூன்று போர்வீரர்கள் கெட்ட உணவால் விஷங்கண்டு இறந்ததும், அதே படையைச் சேர்ந்த

---

* எஸ் எஸ் மேஜர்.

** எஸ் எஸ் ஸீனியர் லெப்டினன்ட்.

இரு போர்வீரர்கள் ஓடிவிட்டதும் — இவைகளெல் லாமே அந்தப் பச்சைப் பேய்களின் செயல்கள் என்று தான் சொல்லப்பட்டன. உண்மை எது, கட்டுக்கதை எது என்று பிரித்தறிவதே கடின மாகப் போய்விட்டது.

இதனால் விளையக் கூடிய பலாபலன்களைக் குறித்துக் கலவரமடைந்தான், குருப்பென்ப்யூ ரெர் மேல் தலைமைச் செயலகத்திற்கும், மத்தி யப்படை வரிசைகளுக்குத் தலைமை வகிக்கும் பீல்டு மார்ஷல் புஷ் என்பவனுக்கும் தகவல் கொடுக்கும் படி உத்தரவளித்தான். **வேவுகார அழிவுப் படை யொன்றை** ருஷ்யர்கள் ஜெர்மா னியரின் பின்னணிப் பகுதிக்கு அனுப்பிவைத் திருப்பதாகவும் அது 131வது காலாள் டிவிஷனது கவனக் குறைவால் 'வைகிங்' படையின் நடுவே புகுந்து விட்டதாகவும் படையணி மாற்ற ஏற்பாடுகளைப் பற்றி ஒருவேளை ஏதாகிலும் அவர்கள் கண்டுபிடித்திருக்கலாம் என்பதாகவும் தகவல் தெரிவிக்கப்பட்டது.

சிறிது யோசனை செய்து விட்டு பெர்லினில் உள்ள ஒபெர்குருப்பென்ப்யூரெரர் வான் டெர் பாக் என்பவனுக்குச் சொந்த முறையில் ஒரு கடிதமும் எழுதினான் ஹெர் குருப்பென்ப்யூ ரெர். தன்னுடைய ஆதரவாளனுக்கு உச்சி குளிர வேண்டும், ஒருவேளை இந்தத் திடீர் தாக்கு தலில் தோல்வியேற்பட்டால் அவனுடைய ஆத ரவு தனக்குக் கிடைப்பது உறுதிப்பட வேண்டும் என்பதற்காகவே அக்கடிதம் வரைந்தான். பெர் லின் ரிஸெர்வ் படையில் ஈயோட்டிக் கொண்

டிருந்த அநேக ஜெனரல்கள் ஹெர் ஹில்லேயின் இடத்தைக் கைப்பற்றிக் கொள்ளத் தயாராய் இருப்பது அவனுக்குத் தெரியாதா என்ன?

அடுத்த நாள் மாலை தனது சாப்பாட்டை முடித்துவிட்டு குருப்பென்ப்யூரெர் கண்ணயர்ந் திருந்த சமயம் டெலிபோன் மணி விடாமல் கணகணக்கவே விழித்தெழுந்தான்.

அப்பொழுது தான், தனது போர்வீரர்களுக் கும் பச்சைப் பேய்களுக்கும் ஒரு கைகலப்பு ஏற்பட்டிருந்தது என்ற விவரத்தைக் காப்டன் வேர்னெர் தெரிவித்தான். உன்டெர்ஷ்டுர்ம் ப்யூரெர்* அல்டென்பெர்க் என்பவன் மேற்பார் வையிலுள்ள அப்போர்வீரர்கள் காட்டின் ஓரத்தி லிருந்த ஒரு பாழான குடிசைக்கு வந்து சேர்ந் தனர். பல போர்வீரர்கள் குடிசைக்குள் போய்ப் பார்த்து அங்கு ஒருவருமில்லை என்று சொல்லி விட்டனர். ஆனால் உன்டெர்ஷ்டுர்ம்ப்யூரெரின் கவனத்தினால், அப்பச்சைப் பேய்கள் குடிசை யின் பரணில் ஒளிந்து கொண்டிருந்தது கண்டு பிடிக்கப் பட்டது. துரதிர்ஷ்டவசமாய் அவர் கள் எறிகுண்டுகளை வீசி உன்டெர்ஷ்டுர்ம்ப்யூ ரெரையும் அவனுடைய ஆட்களில் ஏழு பேர் களையும் கொன்றுவிட்டு, தப்பித்து ஓடிவிட்ட னர். ஆனால், முதலாவது, இப்பகுதி முழுதிலும் உள்ள படைகளுக்கு அபாயக்குறிப்பு சென்று விட்டது. இந்தப் பச்சைப் பேய்களை வேட் டையாடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் முடிந்து

---

* எஸ் எஸ் லெப்டினன்ட்.

விட்டன. அவர்கள் நிச்சயமாய் அகப்பட்டு விடுவார்கள் அல்லது கொல்லப்படுவார்கள். இரண்டாவது, இந்தக் கயவர்களில் ஒருவன் போர்வீரர்கள் கையில் அகப்பட்டிருக்கிறான். துரதிர்ஷ்டவசமாய் அவன் உயிரோடு இல்லை. இதுதான் காப்டன் வேர்னெர் தெரிவித்த விவரம்.

சிறிது சிந்தித்து விட்டு, தனது காரைக் கொண்டு வரும்படி கூறினான் ஹில்லே. துணைக்கு ஒரு டாங்கியுடன் சம்பவம் நிகழ்ந்த இடத்திற்குப் புறப்பட்டான்.

காட்டின் ஓரத்தில், புகைந்து கொண்டிருந்த குடிசையின் அருகே காப்டன் வேர்னெரும் சோதனைக் கூட்டத்தைச் சேர்ந்த எஸ் எஸ் போர் வீரர்களும் குருப்பென்ப்யூரெரைச் சந்திப்பதற்கு முன் வந்தனர்.

ஹில்லே அவர்களுடைய வணக்கத்திற்குப் பதில் கூறாமலே, இறந்து கிடந்த பகைவீரனை நோக்கி நடந்தான். இருபத்து மூன்று வயதிற்கு அதிகம் போகாத, சணல் போன்ற நீண்ட முடியையுடைய ருஷ்ய இளைஞன் அவன். அவனது குத்திட்ட கண்கள் அமைதியாக ஹெர் குருப்பென்ப்யூரெரைப் பார்த்துக் கொண்டிருந்தன. பச்சைமேலாடையின் கீழ் (அது ''சோவியத் வேவுப்படையின் கோடைகால ராணுவ உடை'' என்பதைக் கவனித்துக் கொண்டான் குருப்பென்ப்யூரெர்) ஜூனியர் சார்ஜென்டின் பட்டைகளையுடைய மங்கிப் போயிருந்த சோவியத் ராணுவச் சட்டையை அவன் அணிந்திருந்தான்.

சிறிது தூரத்திற்கப்பால் எட்டு எஸ் எஸ் போர்வீரர்கள் ஒருவர் பக்கம் ஒருவராக மார் பின் மீது சேர்த்து வைக்கப்பட்ட கைகளுடன் கிடந்தனர். இந்த எட்டுப் பேர்களில் ஐந்து பேர்குட்டையாயும் பலவீனமாயும் இருந்தனர் என்பதைக் குறித்து ஹெர் குருப்பென்ப்யூரெர் முகத்தைச் சுளித்துக் கொண்டான். இந்தச் சோனிகள் எஸ் எஸ் கரும் படைவீரர்களாம், அழகுதான்!

ஜெர்மன் ராணுவத்திலுள்ள பல பெரிய அதி காரிகளிடையே தான் இவ்வளவு கலக்கத்தை உண்டாக்கியிருப்பதாக டிராவ்கினுக்கு ஒரு சிறி தும் தெரியாது. அவனுடைய வீரர்கள், அதே முக்கோண வடிவில் திரும்பிச் சென்று கொண் டிருந்த பொழுது, ஆங்காங்கே எஸ் எஸ் போர் வீரர்களின் கூட்டங்கள் எதையோ தேடிக் கொண்டிருப்பதையும் ஒருவருக்கொருவர் குரல் கொடுத்துக் கொண்டிருப்பதையும் அவர்கள் கவனித்தார்கள் என்பது உண்மையே. ஆனால் அதை ஒரு போர்த்தந்திரப் பயிற்சியாக எண் ணினார்களே தவிர, தங்களைக் குறித்தே இந்த ஓட்டமும் பிடியும் என்று நினைக்கவில்லை.

நான்காம் நாள் மாலையில் ஜெர்மானியரின் பின்னணிப் பகுதியிலுள்ள ஒரு பாழாய்ப்போன குடிசையின் பக்கம் வந்து கொண்டிருந்தனர். தன்னுடைய வீரர்களுக்கு ஒரு மணி நேரமாவது ஓய்வு கொடுக்க வேண்டுமென்று டிராவ்கின் தீர்மானித்தான். அதே சமயம் 'பூமி' யுடன் தொ

டர்பு கொள்ளவும் விரும்பினான். திடீரென்று தாக்கப்படாமலிருக்கவும், சுற்றுப்புறத்தை நன் றாகப் பார்த்தறியவும் அவர்கள் பழுதடைந்த ஓர் ஏணியின் வழியாகக் குடிசையின் பரணுக்கு ஏறிச்சென்றனர். அனிக்கானவின் கனம் தாங்கா மல் ஏணி அநேகமாய் ஒடிந்து விழப் பார்த்தது.

டிராவ்கின் 'பூமி'யுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு அடையாளங்களைப் பரிமாறிக் கொண் டிருந்தான். கூரையில் அவர்கள் செய்த ஒரு தொளையின் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்த காவலாளான பிராஜ்னிகவ் திடீ ரென்று ஒரு கூச்சலிட்டான். டிராவ்கினும் அவன் அருகே சென்று தொளை வழியாகப் பார்த்தான். சுமார் இருபது எஸ் எஸ் போர் வீரர்கள் பரவலான அமைப்பில் குடிசையை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

நன்றாய்த் தூங்கிக் கொண்டிருந்த தன்னு டைய வீரர்களை லெப்டினன்ட் எழுப்பினான். காட்டிற்குள் தப்பி ஓடுவதற்கு நேரமில்லை என்பது நன்கு தெரிந்தது. எஸ் எஸ் போர் வீரர்கள் நெருங்கி விட்டனர். சீக்கிரத்தில் அவர் களில் நான்கு பேர்கள் குடிசைக்குள் நுழைந்து, சாணிக் குவியலைக் குத்திப்பார்த்து விட்டு வெளியே சென்றனர்; ஆனால் உடனே திரும்பி வந்தனர். அவர்களில் ஒருவன் வாய்க்குள் முனகிக் கொண்டும் திட்டிக்கொண்டும் பழுதடைந்த ஏணி வழியே ஏறிவந்தான்.

டிராவ்கின் கைக்கொரு ரிவால்வராகப் பிடித் துக் கொண்டு, நன்றாய் மூச்சு வாங்கிக் கொண

டான். கூரையிலிருந்த அநேக இடுக்குகளா லும் ஓட்டைகளாலும் பரணில் வெளிச்சமா யிருந்தது. இதற்கு முன்பெல்லாம் பார்த்திருந் ததை விட இப்பொழுது மிகவும் கூர்மையாகத் தன் வீரர்களை ஒரு முறை கவனித்தான். நொய்ந்த மேனியும், குழிவிழுந்த கண்களும், மயிரடர்ந்த முகங்களுமாக அவர்கள் தோற்றம் பயங்கரமாயிருந்தது. இறக்கும் வரை சண்டை போடுவதற்குத் தயாராய் நின்றார்கள். லொட லொடத்த ஏணி கிரீச்சிட்டது. ஜெர்மானியன் மெதுவாய்த் திட்டிக்கொண்டான்.

பலத்த பயங்கரமான வெடி முழக்கம் கேட்டது. தொழுவின் பக்கம் வட்டமாக நின்று கொண்டிருந்த எஸ் எஸ் போர்வீரர்களின் மேல், கூரையிலிருந்து ஒரு துவாரத்தின் வழியாக, டாங்கிகளை அழிக்க உபயோகிக்கப்படும் எறி குண்டு ஒன்றை அனிக்கானவ் ஓங்கி யெறிந்து விட்டான். அதே சமயம் பிராஜ்னிகவ் தன்னு டைய துணை எந்திரத் துப்பாக்கியின் குந்தா வால், ஏணியின் மேல் ஏறி வந்த எஸ் எஸ் போர்வீரனின் மண்டையை மடாரென்று உடைத்துவிட்டுக் கீழே குதித்தான். அவனுக்குப் பின் மற்ற வேவுவீரர்களும் தூசியும் தும்பை யும் நிறைந்த புகைமண்டலத்தின் நடுவே கீழே குதித்தார்கள்.

அவர்களுக்கு இருந்த நெருக்கடியான நிலை யில், அனிக்கானவ் எறிகுண்டை வீசியது மிகச் சிறந்த போர்த்தந்திரம் என்பதை டிராவ்கின் உடனே அறிந்து கொண்டான். இதனால் வாச

லில் நின்ற விரோதிகளைக் கலைத்து விட்டு, தாங்கள் ஓடிச் செல்வதற்குரிய வாய்ப்புக் கிடைத்தது. குடிசையில் இருந்த மூன்று எஸ் எஸ் போர்வீரர்களை இலேசாக முடித்துவிட்டனர். ஏனெனில் அங்கிருந்த இருட்டில் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள முடியாது வெடியின் அதிர்ச்சியால் அவ்வளவு பிரமை பிடித்துப் போயிருந்தனர்.

ஒரு நொடிக்குப் பிறகு வேவுவீரர்கள் அடர்த்தியான பிர் மரங்களுக்கிடையே வேகமாய் ஓடினர். அவர்களைப் பின்தொடர்ந்து ஜெர்மன் துப்பாக்கிக் குண்டுகளும் எறிகுண்டுகளும் வெடித்தன; கூச்சல்கள் ஒலித்தன. பிராஜ்னிகவ் தங்களுடன் இல்லை என்பதையும் அனிக்கானவும் செம்யோனவும் காயமடைந்திருந்தனர் என்பதையும் டிராவ்கின் முதலில் கவனிக்கவில்லை. கஷ்டத்துடன் மூச்சு வாங்கிக்கொண்டு அனிக்கானவ்தான் அவனிடம் பிராஜ்னிகவைப் பற்றிக் கூறினான். குடிசையிலிருந்து வேகமாய் வெளியேறிய பொழுது பிராஜ்னிகவ் வீழ்ந்ததைத் தான் பார்த்ததாக அனிக்கானவ் சொன்னான்.

மேலும் எதிரிகள் விரட்டவே இவர்களும் ஓடிக் கொண்டேயிருந்தனர். குண்டுகள் வெடிக்கும் ஓசையும் கூச்சல்களும் காட்டினூடே எங்கும் எதிரொலித்தன. பிறகு நாய்கள் குரைக்கும் சத்தத்தையும் கேட்டனர். வலது பக்கம் எங்கேயோ மோட்டார் சைக்கிள்களின் படபடப்பு கேட்டது. முதுகில் காயமடைந்த அனிக்கானவ்

பெருமூச்சு வாங்கினான். சேம்யோனவின் நொண்டல் வரவர மோசமாய்க் கொண்டே இருந்தது.

மழை பெய்த காடு மணம் வீசியது. சொட்டச் சொட்ட நனைந்திருந்த இலைகளும் புற்களும் ஏப்ரல் மாதத்திய பனிக்குக் கடைசி முழுக்குப் போட்டு விட்டுப் பச்சென்று தளதளத்தன. இள வேனிலின் ஆட்சி உண்மையாகவே தொடங்கி விட்டது. மழையால் தூய்மையுற்ற இளந்தென் றல் பசுங்கிளைகளை மெல்லென ஊசலாட்டி வசந்தப்பண் பாடியது.

பின்தொடர்ந்து வருவோரின் சந்தடி குறைந்து கொண்டே வந்தது. காயமடைந்தவர்களுக்குக் கட்டுகள் போடப்பட்டன. மாமச்கின் தனது பையிலிருந்து கடைசியாகவுள்ள புட்டியை எடுத் துக் குலுக்கினான். அதில் கொஞ்சம் சாராயம் இருந்தது. அனிக்கானவிற்கு அதைக் கொடுத் தான்.

பிகோவின் முதுகின் மேலிருந்த ரேடியோ செட் பல குண்டுகள் பாய்ந்து சிதைந்து கிடந் ததை அவர்கள் கண்டார்கள். அவனுடைய உயிரைக் காப்பாற்றுவதற்கு அது உதவியது. ஆனால் இனி அதைப் பயன்படுத்த முடியாது. ஆகவே பிகோவ் தனது துணை எந்திரத் துப்பாக் கியின் குந்தாவால் அதை உடைத்து, துண்டு களைப் புதர்களுக்குள் எறிந்து விட்டான்.

குடிகாரர்கள் போல் தள்ளாடிக் கொண்டு அவர்கள் மெதுவாய் மேலும் நடந்து சென்றனர்.

டிராவ்கினுடன் பின்னால் வந்து கொண்டி

ருந்த மாமச்கின் திடீரென்று அவனிடம் சொல் லத் தொடங்கினான்.

''என்னை மன்னியுங்கள், தோழர் லெப்டி னன்ட்!''

இரக்கத்தைக் குறிக்கும் முறையில் மார்பில் அடித்துக்கொண்டும், ஒருவேளை அழுதுகொண் டும் இருக்கலாம் — இருட்டாக இருந்ததால் நிச்ச யமாய்ச் சொல்ல முடியவில்லை — அவன் கம்மிய குரலில் பேசினான்:

''என்னுடைய குற்றம் தான். எல்லாம் என்னு டைய குற்றம் தான். எங்களது செம்படவர் களுக்குச் சில அடையாளங்கள் உண்டு. அநேக மாய் அவர்கள் சொல்வது சரியாகவே இருக் கும். நான் அக்குதிரைகளைக் கிராமத்தாருக்குத் திருப்பிக் கொடுக்கவில்லை. அவைகளை உணவுப் பண்டங்களுக்காக வாடகைக்கு விட்டேன்.''

டிராவ்கின் பேசவில்லை.

''என்னை மன்னியுங்கள், தோழர் லெப்டி னன்ட். நான் உயிரோடு திரும்பினால்...''

''நீ உயிரோடு திரும்பினால், ஒரு தண்டனைப் பட்டாளியனுக்குப் போவாய்'' என்றான் டிராவ் கின்.

''கட்டாயமாகப் போவேன்! மகிழ்ச்சியுடன் போவேன்! நீங்கள் இவ்வாறு சொல்வீர்கள் என்று எனக்குத் தெரியும்! இப்படியே சொல் வீர்கள் என்றுதான் நானும் எண்ணியிருந்தேன்!'' என்று ஒரு வகைக் குதூகலத்துடன் மாமச்கின் கூறினான். தன்னை மறந்த ஓர் அன்பினாலும் நன்கு புரியாத ஒரு நன்றியறிவினாலும் ஏற்

பட்ட விதிர் விதிர்ப்புடன் அவன் டிராவ்கினது கைகளைப் பற்றிக் குலுக்கினான்.

எதிரிகள் பக்கத்தில் வந்த சத்தம் திடீரெனக் கேட்டது. ஆகவே தரையோடு தரையாய் ஒட்டிக் கொண்டார்கள். இரண்டு கவச மோட்டார் கள் இரைச்சலுடன் கடந்து சென்றன. மறுபடி யும் அமைதி நிலவியது. வேவுவீரர்கள் மேலும் நடந்தனர். முதலில் தோன்றியது அனிக்கான வின் பெரிய உருவம். கிளைகளைத் தனது வலிய தோள்களால் விலக்கிக்கொண்டு அவன் மெதுவாக முன்சென்றான். மயக்கம் அவனை இருளில் ஆழ்த்துவதற்குப் பார்த்தது. ஆனால் தனது மனவுறுதியால் அதனை எதிர்த்துத் துரத் தினான்.

தனது நீண்ட அநுபவத்தின் பயனாக இப் போது தங்களைச் சுற்றியிருந்த அமைதி உண் மையானதல்ல என்பதை அனிக்கானவ் ஒருவனே யூகித்திருக்க முடியும். ‘வைகிங்’ எஸ் எஸ் டிவி ஷனின் வேவுக் கூட்டத்தார் அனைவரும், முன் னணிப் பகுதிகளை வேகமாய் அணுகிக்கொண் டிருந்த 342வது கிரனேடியர் டிவிஷனின் முன் னேறிச் சென்றுள்ள கம்பெனிகளும், 131வது காலாள் டிவிஷன் பின்னணிப் பகுதிகளும் தங் களை வேட்டையாடுவதற்குச் சுற்றி அலைந்தன என்பதை அவன் சிறிதும் அறியான். டெலி போன் மணிகள் ஓயாமல் அடித்துக் கொண் டிருந்தன வென்றும், களத்திலிருந்த ரேடியோக் கள் தனக்குப் புரியாத குறிப்பு மொழியில் ரக சியச் செய்திகளை இடைவிடாமல் அறிவித்துக்

கொண்டிருந்தன வென்றும் அவனுக்குத் தெரி யாது. ஆனால் தங்களை விரட்டிக் கொண்டு வருகிறவர்களின் பிடி தங்களைச் சுற்றி மேன் மேலும் இறுகிக் கொண்டு வருகிறது என்பதை அவன் உணர்ந்துகொண்டான்.

உடலில் பலம் குறைந்துகொண்டே வந்தது என்றாலும் அவர்கள் மேன் மேலும் நடந்தனர். தாங்கள் தப்பித்துப் போய்விட முடியுமா முடி யாதா என்பதை அவர்களால் நிச்சயிக்க இயல வில்லை. ஆனால் அது இனிமேல் அவ்வளவு முக்கியமானதல்ல. 'வைகிங்' என்ற பெயரையு டைய அச்சத்தைத் தரும் மிகச் சிறந்த படை, அக்காடுகளில் ரகசியமாய்த் திரண்டு, சோவியத் படைகளைத் திடீரென்று தாக்குவதற்குப் போட் டிருந்த திட்டம் மண்ணைக் கவ்விவிட்டது. அந்த லாரிகளும், டாங்கிகளும், ஆளேற்றிச் செல்லும் கவச மோட்டார்களும், பயங்கரத் தோற்றத் தையுடைய வில்கண்ணாடி யணிந்த எஸ் எஸ் அதிகாரி, உயிரோடுள்ள பன்றியை வண்டியில் ஏற்றிக் கொண்டு சென்ற அந்த ஜெர்மானியர் கள், நன்றாய்த் தின்று குடித்துக்கொண்டும் கூவிக்கொண்டும் காடுகளையெல்லாம் அசுத்தப் படுத்திக் கொண்டுமிருந்த ஜெர்மானியர்கள் அனைவரும், இந்த ஹில்லேக்கள், ம்யுல்லென் காம்ப்கள், கர்கைஸ்கள், இந்த வாழ்க்கை வேட் டைக்காரர்கள், இந்தத் தண்டப்படையினர், இந் தக் கொலைகாரச் சதிகாரர்கள் — இவர்கள் எல் லாரும் அந்தக் காட்டிலுள்ள சாலைகளின்வழி யாக நேரே தங்கள் அழிவை நோக்கிச் சென்று

கொண்டிருந்தார்கள். அதற்குள்ளாகவே இந்தப் பதினைந்தாயிரம் பேர்களின் உயிரைக் கவரு வதற்குத் தயாராக இருந்தது கூற்றுவனின் பழி வாங்கும் கை.

## அத்தியாயம் பதினொன்று

'விடி வெள்ளி'யுடன் வானொலி மூலமாகத் தொடர்பு வைத்திருந்த ஆப்பரேட்டர்கள் தனி யாய் ஒரு நிலவறையிலிருந்தனர். ஜூனியர் லெப் டினன்ட் மெஷ்சேர்ஸ்கிய் இரவும் பகலும் அங்கே யே தானிருந்தான். அவன் அநேகமாகத் தூங்க வேயில்லை; கைகளைத் தலைக்குயரம் வைத்துக் கொண்டு சிற்சில சமயங்களில் கண்ணை மூடிக் கொண்டு நிம்மதியற்றுத் தூங்கி வழிவான். அப் பொழுது கூட வானொலியின் குமுறல்களைக் கேட்பதாக நினைத்துக்கொள்வான். தனது நீண்ட இமைகளைக் கொட்டிக்கொண்டு, டெலி போன் ஆப்பரேட்டரிடம், ''இப்போது யார் பேசுவது, அவர்கள்தானா?'' என்று கேட்பான்.

மூன்று முறைகளில் ஆப்பரேட்டர்கள் வேலை செய்தார்கள். தனது வேலை நேரம் முடிந்த பின்பும் காத்யா போக மாட்டாள். மெஷ் சேர்ஸ்கியின் பக்கம் ஒடுக்கமான படுக்கையில் உட்கார்ந்து, பழுப்பேறிய கைகளில் தலையைச் சாய்த்துக் கொண்டு காத்திருப்பாள். வேலையி லிருப்பவனைச் சில வேளைகளில், 'விடி வெள்ளி' யின் அலை நீளத்தை அவன் விட்டுவிட்டான் என்று சொல்லிச் சினந்து கொள்வாள்; அவன்

கையிலிருந்து குழாயைப் பிடுங்கி, தணிந்த கெஞ் சுங் குரலில் அந்த நிலவறையிலிருந்து கூப்பிடு வாள்:

''விடி வெள்ளி, விடி வெள்ளி, விடி வெள்ளி...''

அருகில் உள்ள அலை நீளத்தில் யாரோ ஜெர்மன் பாஷையில் ஏதோ முனகிக் கொண் டிருந்தான். சிறிது அப்பால் மாஸ்கோ பேசியது, பாடியது, பிடில் சங்கீதம் இசைத்தது — எப்பொ ழுதும் விழித்துக் கொண்டிருந்த, மாபெரும் வன்மையுடைய, அழிக்க முடியாத மாஸ்கோ.

நாளில் பல தடவைகள் டிவிஷன் தலைவர் நிலவறைக்கு வந்தார். வேவுவீரர்கள் அங்கிருந்து தங்களிருப்பிடத்திற்கு அவசரமாய் வந்து போ னார்கள். லெப்டினன்ட் புகோர்கோவ் ஒவ் வொரு நாளும் அங்கு வந்தான்; சில சமயங் களில் சார்ஜென்ட் மேஜர் மெட்ஜிடோவுடனும் வருவான். சுமார் ஒரு மணி நேரத்திற்கு அங்கே யே சுவரில் சாய்ந்து ஆப்பரேட்டர் வேலை செய்வதைப் பேசாது பார்த்துக் கொண்டிருப் பான்.

அடிக்கடி மேஜர் லிகச்சோவ் ஆப்பரேட்ட ரிடமிருந்து, தானே செவிக் குழாயை எடுத்துக் கேட்டான். சில வேளைகளில் காப்டன் பராஷ் கின் உள்ளே வந்து ஓரிரு நிமிடங்கள் வரை சிறிய சன்னலின் பக்கம் நின்று கொள்வான். தன்னுடைய புகழ் பெற்ற குறிப்புப் புத்தகத்தி லிருந்து ஏதோ மெட்டை முனகிக்கொண்டும், விரல்களால் அதற்குத் தகுந்தாற்போல் தாளம டித்துக் கொண்டும் இருப்பான். ஒரொரு சமயம்

இணைபிரியா இரட்டையர்களான காப்டன் முஷ்டக்கோவும் காப்டன் குரேவிச்சும் முன்ன ணிப் பகுதியிலிருந்து அங்கு வந்து பார்த்து விட்டுச் செல்வார்கள்.

சாந்தமான, ஆடம்பரமற்ற விசாரணை அதி காரி காப்டன் எஸ்கின் தனது புள்ளி முகம், துருத்திய நெற்றி, உற்று நோக்கும் கண்கள் ஆகிய அனைத்தும் விளங்க நிலவறைக்குள் ஒரு நாள் நுழைந்தான்.

''நீங்கள் தான் வேவுவீரர்களின் தலைவரா?'' என்று மெஷ்சேர்ஸ்கியைக் கேட்டான்.

''தற்காலிகமாய்ப் பதிலியாக இருந்து வரு கிறேன்.''

குடியானவர்களிடமிருந்து சட்ட விரோத மாகக் குதிரைகளை எடுத்துச் சென்றுள்ள ஒரு சில வேவுவீரர்களைப் பற்றி விசாரணை நடத்த வேண்டுமென்று எஸ்கின் கூறினான். அது தவ றான காரியம், மிகவும் மோசமானது, நாட்டு மக்களிடையே செஞ்சேனைக்கு இருந்துவரும் மதிப்பை வெகுதூரம் பாதிக்கக் கூடியது என் பவைகளை எல்லாம் மெஷ்சேர்ஸ்கியிடம் எடுத் துரைத்தான்.

மெஷ்சேர்ஸ்கியைப் பேசவிடாமலே காப்டன் எஸ்கின் மேலும் தொடர்ந்து சொன்னான்:

''ஆகையால் சம்பந்தப்பட்ட வேவுவீரர்களை இப்பொழுது சில கேள்விகள் கேட்க வேண்டிய திருக்கிறது. சட்ட விரோதமான அச்சம்பவம் நிகழ்ந்த போது இருந்தவர்கள், முக்கியமாய் லெப்டினன்ட் டிராவ்கின், சார்ஜென்ட் மாமச்

கின் இருவர்கள். அவர்களிடம் சில கேள்விகள் கேட்க வேண்டும்.''

சிறிது பொறுமையிழந்து மெஷ்சேர்ஸ்கிய், ''அவர்கள் இப்பொழுது இங்கேயில்லை'' என்று கூறினான்.

''அவர்களில் ஒருவருமில்லையா?''

''இல்லை.''

விசாரணை அதிகாரி ஒரு நிமிடம் யோசித்தான்.

''ஆனால் நான் அவர்களிடம் பேசியாக வேண்டுமே. அவர்கள் விரைவில் திரும்பி வருவார்களா?''

''எனக்குத் தெரியாது'' என்று மெஷ்சேர்ஸ்கிய் மெதுவாய்ப் பதிலளித்தான்.

திடீரென்று காத்யா பேசினாள்:

''தோழர் காப்டன், இப்பொழுது அவர்கள் இருக்கும் இடத்திற்கு நீங்கள் போவது நல்லது. அங்கேயே அவர்களைக் கேட்டுவிடலாம்.''

''எங்கே இருக்கிறார்கள்?'' என்று காப்டன் எஸ்கின் கேட்டான்.

''ஜெர்மன் படையின் பின்னணிப் பகுதியில்.''

அமைதியான, அன்பற்ற ஒரு பார்வையுடன் விசாரணை அதிகாரி காத்யாவை உறுத்து நோக்கினான்.

அவளும் சினந்தோன்றும் வெற்றிப் புன்னகையுடன் எதிர் நோக்கு நோக்கினாள்.

மெஷ்சேர்ஸ்கியும் கூட புன்னகை புரிந்தான். ஆனால் விசாரணையை முடிக்க ஜெர்மானியரின் பின்னணிப் பகுதிக்குப் போகும்படி இம்மனிதனு

டைய மேலதிகாரி உத்தரவிட்டால், எஸ்கினும் போகத் தான் செய்வான் என்பதை திடீரென்று மெஷ்சேர்ஸ்கிய் உணர்ந்துகொண்டான்.

மூன்றாம் நாள் 'விடி வெள்ளி' பேசியது— டிராவ்கினும் அவன் தோழர்களும் முன்னணி யைத் தாண்டிச் சென்ற பிறகு இரண்டாந் தடவையாக. இரகசியக் குறிப்புகளையெல்லாம் விட்டுவிட்டு, டிராவ்கின் அழுத்தமாகத் திரும்பத் திரும்பக் கூறினான்:

''ஐந்தாவது 'வைகிங்' எஸ் எஸ் டாங்கி டிவி ஷன் இங்கு திரண்டு கொண்டிருக்கிறது. ஐந்தா வது 'வைகிங்' எஸ் எஸ் டாங்கி டிவிஷன் இங் கே திரண்டு கொண்டிருக்கிறது என்பதை ஒன் பதாவது 'வெஸ்ட்லண்ட்' மோட்டார் ரெஜி மென்டிலிருந்த ஒரு கைதி சொன்னான்.''

'வெஸ்ட்லண்ட்' மோட்டார் ரெஜிமென்டின் அமைப்பையும் டிவிஷன் செயலகம் உள்ள இடத் தையும் டிராவ்கின் தெரிவித்தான். பிறகு, இர வில்தான் படைகளையும் தளவாடங்களையும் இறக்குகிறார்கள் என்பதை வலியுறுத்தினான். அவன் மேன்மேலும் திரும்பத்திரும்பச் சொன் னதாவது:

''ஐந்தாவது 'வைகிங்' எஸ் எஸ் டாங்கி டிவி ஷன் இங்கே திரண்டு கொண்டிருக்கிறது. இரக சியமாய்த் திரண்டு கொண்டிருக்கிறது...''

டிராவ்கினுடைய தகவல் டிவிஷனில் பெருத்த பரபரப்பை உண்டாக்கியது. கர்னல் ஸெர்பிசேன் கோ படைத் தலைவருக்கும் கர்னல் செம் யோர்கினுக்கும் தாமே டெலிபோனில் இச்செய்

தியைத் தெரிவித்தார். படைச் செயலகமும் உடனே அது பற்றிக் கவனிக்கத் தொடங்கியது.

லெப்டினன்ட் கர்னல் கலீயெவ் தூக்கம் என்பதையே மறந்துவிட்டார். தம்முடைய சேனையிலிருந்தும் பக்கத்துப் படைப்பிரிவுகளிலிருந்தும் வரும் கேள்விகளுக்கு விடாமல் பதில் சொல்லிக் கொண்டிருந்தார். குளிரே அவருக்குத் தெரியவில்லை. தமது ஆட்டுத் தோல் மேலாடையைத் தூர எறிந்துவிட்டார். உல்லாசமாய், இரைந்து கொண்டு கண்டிப்புடன் இருந்து வரலானார். ''கலீயெவ் நாஜிகளை மோப்பம் கண்டுவிட்டார்'' என்று வீரர்கள் மறுபடியும் சொல்லத் தொடங்கினார்கள்.

இதற்கிடையே ஆயிரம் தேசபடங்களில் நீலப் பென்சில்கள் 'வைகிங்' டிவிஷன் திரண்டு கொண்டிருக்கும் இடத்தைக் குறித்தன. படைச் செயலகத்திலிருந்து இந்த அவசரச் செய்தி முனைமுகச் செயலகத்திற்குச் சென்றது. அங்கிருந்து மாஸ்கோவிலுள்ள உயர் தலைமைச் செயலகத்திற்குச் சென்றது.

டிவிஷன் செயலகத்தில் டிராவ்கின் கொடுத்துள்ள தகவல் மிகவும் முக்கியமானதாகக் கருதப் பட்டது. சேனைச் செயலகத்திற்கும் இது கருத்திற்குரிய தகவல்தான் என்றாலும் பொது நிலையைப் பாதிக்கக் கூடியதல்ல. அப்போது வந்து கொண்டிருந்த புதிய படைகளை, எஸ் எஸ் படைகளின் தாக்குதலுக்கு அதிகம் உள்ளாகக் கூடிய இடங்களுக்கு அனுப்பிவைக்கும்படி சேனைத் தலைவர் உத்தரவிட்டார்; தமது

ரிஸெர்வ் படைப் போர்வீரர்களையுங் கூட அப் பகுதிக்கு அனுப்பி வைத்தார்.

கோவெல் இரயில் சந்திப்பில் ஜெர்மானியர் காட்டி வரும் கவனத்திற்கு மற்றோர் அத்தாட்சியாக இதைக் கருதினார்கள் முனைமுகச் செயலகத்தில். இந்தப் பகுதிகளை ஆராய்ந்து அறிந்து, குண்டுகள் வீசும்படி விமானப்படைக்கு உத்தரவு சென்றது. அங்கிருந்த சேனைக்குப் பல டாங்கி, பீரங்கித் தொகுதிகள் மேலும் கிடைத்தன.

இராணுவ உயர் தலைமைக் காரியாலயத்தைப் பொருத்தவரை இந்த 'வைகிங்' டாங்கிப் படையும், இந்தக் காடு முழுவதுங்கூட, முழு நிலவரத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, சிறு புள்ளிகளைத் தவிர வேறு இல்லை. எனினும் இதில் இருக்கக் கூடிய மர்மத்தை அவர்கள் உடனே அறிந்துகொண்டனர். அதாவது சோவியத் படைகள் போலந்திற்குள் செல்வதைத் தடுப்பதற்கு ஓர் எதிர்த் தாக்குதலை ஜெர்மானியர் திட்டமிட்டுள்ளனர் என்பது. போர் முனையின் இடது பக்கத்தைப் பலப் படுத்துவதற்கு, ஒரு டாங்கிப் படை, குதிரைப் படை, அநேகப் பீரங்கி டிவிஷன்கள் அனுப்புவதற்கு உத்தரவு பிறந்தது.

ஆகவே டிராவ்கினைச் சுற்றி வட்டங்கள் அகன்று கொண்டே வந்து மாஸ்கோவையும் பெர்லினையும் சென்றடைந்தன.

டிவிஷனுக்கு உடனடியாக ஒரு டாங்கி ரெஜிமெண்டும், ராக்கெட் மார்டர் படையும், பெரிய

அளவில் தளவாடங்களும், புதிய மனிதர்களும் வந்து சேர்ந்தனர். வேவுவீரர்களுக்கும் புதிய ஆட்கள் கிடைத்தனர்.

மெஷ்சேர்ஸ்கிய் தனது வீரர்களுக்குக் கடுமை யான பயிற்சி கொடுத்து வந்தான். எதிரிகளின் பாதுகாப்பு இடங்களை வேவு பார்த்துச் சோதிப் பதில் நாள்தோறும் பாதி நேரம் செலவிட்டான். புகோர்கோவும் அவனது ஸேப்பர்களும் இடைப் பகுதியில் சுரங்கவெடிகளை அமைத்தனர். காலை யிலிருந்து இரவுவரை ரேடியோ செட்களை, டெலிபோன் சாதனங்களை, தந்திக் கம்பிகளைப் பெற்றுக் கொண்டிருந்தார் மேஜர் லிகச்சோவ். கர்னல் ஸெர்பிசேன்கோ தமது பார்வை இடத் திற்குச் சென்று அங்கிருந்தே மேல்நடவடிக் கைகள் பற்றி ஒவ்வொரு தொகுதிக்கும் உத்தரவு களை அனுப்பினார். பெரிய சண்டைகள் தொடங்குவதற்கு முன்னால் வழக்கம் போல் அவர் மிக இளமையோடும் கடுகடுப்போடும் இருந்தார். அப்போது தான் வந்திருந்த புதிய வரைப்படங்களைப் பார்த்துப் படித்துக்கொண் டே, மணிக் கணக்கில் அவர் உட்கார்ந்து இருந்தார். அவைகளில் நேராக விஸ்லா வரை யில் போலந்து முழுதும் சேர்க்கப்பட்டிருந்தது. தொலைவிலுள்ள அந்தப் பிரதேசங்களுக்கு அவர் முன்பு போயிருந்தவர் — 1920இல் புத்யோன்னியின் முதலாவது குதிரைப் படையோடு.

காத்யா மட்டுமே தனிமையான நிலவறையில் தங்கியிருந்தாள்.

ரேடியோவில் அவளது கடைசி வார்த்தை

களுக்குப் பதிலாக டிராவ்கின் ''நான் புரிந்து கொண்டேன்'' என்ற சொற்களைச் சொன்னது சாதாரணமான முறையில் தானா, அதாவது அவள் சொல்லியதைச் சரியாகக் கேட்டுக்கொண் டான் என்பதாகவா, அவனது சொற்களில் இரகசியமான வேறொரு குறிப்புப் பொருள் இருந்ததா? மற்றெல்லாவற்றையும் விட இந்த எண்ணம்தான் அவள் மனத்தில் குடிகொண் டிருந்தது. தன் உயிருக்கு அபாயம் நிகழும் சூழ்நிலையில் அகப்பட்டிருந்ததினால் தான், அவ் விதச் சாதாரண உணர்ச்சிகள் அவனுள் எழ முடிந்தது போலும். தான் ரேடியோவில் கேட்ட கடைசி வார்த்தைகள் அவ்விதமான மாறுதலின் பயனாக இருக்கலாம் என்று அவள் நினைத் தாள். தனது எண்ணங்களைக் குறித்து காத்யா தனக்குள் சிரித்துக் கொண்டாள். ராணுவ உதவி டாக்டர் உலீபிஷெவாவிடமிருந்து ஒரு கண் ணாடி வாங்கி வந்து, அதில் அடிக்கடி முகத்தைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். ஒரு பெரிய வீரனுக்கு ஏற்ற மனைவியாக இருக்க வேண்டியது எப்படி என்று கற்பித்துக்கொண்டு, தனது முகத்தைப் பொருத்தமாக வைத்துக் கொள்ள முயன்றாள். பிறகு கண்ணாடியை எறிந்துவிட்டுத் தனது மனோ நிலைக்கிணங்க, மகிழ்ச்சியோடும் வருத்தத்தோடும் ''விடி வெள்ளி, விடி வெள்ளி, விடி வெள்ளி'' என்று திரும்பத் திரும்பக் கூப்பிடுவாள்.

மறக்க முடியாத அந்த உரையாடலுக்கு இரண்டு நாட்கள் கழித்து, 'விடி வெள்ளி' மறு

படியும் பேசியது.

''பூமி, பூமி, இது விடி வெள்ளி பேசுவது. நான் சொல்வது கேட்கிறதா? விடி வெள்ளி பேசுவது.''

''விடி வெள்ளி! விடி வெள்ளி!'' என்று உணர்ச்சியுடன் கூப்பிட்டாள் காத்யா. ''இது பூமி. நீ சொல்வது கேட்கிறது, கேட்கிறது.''

அவள் தனது கையை நீட்டிக் கதவைத்திறந்து போட்டாள். மற்றவர்களும் தன் ஆனந்தத்தில் பங்கு கொள்ளட்டும் என்பதற்காக. ஆனால் அங்கு ஒருவருமில்லை. பென்சிலை யெடுத்து எழுதுவதற்குத் தயாரானாள். ஆனால் 'விடி வெள்ளி' ஒரு வார்த்தையின் நடுவே நின்று விட்டது; பிறகு பேசவேயில்லை. இரவெல்லாம் காத்யா கவனித்தாள். ஆனால் 'விடி வெள்ளி' பேசவில்லை.

மறுநாளும் 'விடி வெள்ளி'யின் பேச்சு கேட்க வில்லை. அதற்குப் பிறகும் கேட்கவில்லை. சமயங்களில் மெஷ்சேர்ஸ்கிய் நிலவறைக்கு வரு வான். அல்லது புகோர்கோவ், மேஜர் லிகச் சோவ், வேலையை விட்டுத் தள்ளப்பட்ட பராஷ் கினுக்குப் பதில் வேவுப் பகுதியின் புதிய அதி காரியாக வந்துள்ள காப்டன் யார்கேவிச் ஆகி யோர் வருவார்கள். ஆனால் 'விடி வெள்ளி' பேசவேயில்லை.

நாளெல்லாம், பாதி அயர்ந்துகொண்டு காத் யா டெலிபோனை மாட்டிய வண்ணம் இருந் தாள். விசித்திரமான கனவுகளும் தோற்றங்களும் அவளுக்கு ஏற்பட்டன. டிராவ்கின் தனது பசு

மை நிற உருமாற்றுடையில் வெளுத்துப் போய் நின்றதைக் கண்டாள். ஒரு போலிச் சிரிப்பு டன் மங்கிய உருவில் மாமச்கின் நிற்பதாகக் கண்டாள். அவளுடைய சகோதரன் லியோனி டும், என்ன காரணத்தினாலோ, பசுமை நிற உருமாற்றுடையுடன் காணப் பட்டான். அகல விழித்துக்கொண்டு டிராவ்கினுடைய அழைப்பைக் கவனிக்காது விட்டு விட்டோமே என்று ஒரு நடுக்கத்துடன் மறுபடியும் டெலிபோனை எடுத்து, ''விடி வெள்ளி, விடி வெள்ளி, விடி வெள்ளி'' என்று கூப்பிடுவாள்.

தொலைவிலிருந்து பீரங்கிகளின் முழக்கம் கேட்டது — தொடங்கவிருக்கும் சண்டையின் அடையாளம் அது. அந்த நெருக்கடியான நாட் களில் மேஜர் லிகச்சோவிற்குச் செய்திப் பிரிவில் வேலை செய்ய அதிகமான பேர்கள் தேவையாக இருந்தது. ஆனாலும் காத்யாவை மட்டும் அவள் இருந்த இடத்திலிருந்து அகற்றுவதற்கு அவ னுக்கு மனம் வரவில்லை. அந்தத் தனிமையான நிலவறையில், அநேகமாய் எவருக்கும் தெரி யாமலே, அவள் தங்கி வந்தாள்.

ஒரு நாள் மாலையில் நேரம் கழித்து புகோர் கோவ் உள்ளே நுழைந்தான். அப்பொழுது தான் டிராவ்கினுக்குத் தாயாரிடமிருந்து வந்திருந்த ஒரு கடிதத்தைக் கொண்டுவந்தான். பௌதிக இயல் பற்றிய அவனுடைய சிவப்பு குறிப்பேட் டைத் தேடி எடுத்து வைத்திருப்பதாக எழுதி யிருந்தாள். பௌதிக இயல் அவனுக்கு எப் பொழுதும் மிகப் பிடித்தமான பாடம். ஆதலால்

அந்தக் குறிப்பேட்டை பாதுகாப்பாக வைத் திருப்பதாகவும் கூறியிருந்தாள். அவன் பல்கலைக் கழகத்திற்குப் போகும் போது அது உபயோ கமாயிருக்கும். உண்மையில் அது மிகவும் சிறந்த குறிப்பேடு மட்டுமல்ல; ·ஒரு பாடப் புத்தகமாய்க் கூட அதைப் பிரசுரிக்கலாம். வெப்பத்தைப் பற் றியும் மின்சக்தியைப் பற்றியுமுள்ள பகுதிகள் வெகு திருத்தமாயும் அழகாயுமிருந்தன. விஞ் ஞானத்தில் அவனுக்கு இயல்பாகத் திறமை இருந்தது. அதைக் குறித்து அவள் மகிழ்ச்சி யுற்றாள். பன்னிரண்டு வயதாக இருக்கும் பொழுது அவன் செய்த அழகிய நீர் இறைக்கும் எந்திரம் அவனுக்கு நினைவிருக்குமோ, என்ன வோ? அதைப் பற்றிய படக்குறிப்புகள் தென் பட்டன. அவை அவளுக்கும் அத்தை கிளாவாவிற் கும் மிகுந்த சிரிப்பை யளித்துள்ளன.

புகோர்கோவ் கடிதத்தை உரக்க வாசித்தான். பிறகு ரேடியோவின் மேல் சரிந்து கொண்டு கம்மிய குரலில் கூறினான்:

''போர் மட்டும் முடிந்துவிட்டால்... இல்லை, நான் களைத்துப் போகவில்லை. நான் களைத்துப் போனேன் என்று சொல்லவில்லை. மக்கள் ஒருவரை யொருவர் கொன்று குவிப் பதை நிறுத்துவதற்குள்ள காலம் வந்துவிட்டது.''

திடீரென்று பயத்தோடு, தனது காவலும் கவனமும் ஒருவேளை பயனற்றதாய்ப் போய் விட்டன போலும், முடிவின்றி 'விடி வெள்ளி' யைக் கூப்பிடுவதில் பயனில்லை போலும் என காத்யா உணர்ந்துகொண்டாள். 'விடி வெள்ளி'

ஓய்ந்து விட்டது; அதன் ஒளி மறைந்துவிட்டது.

ஆனால் அவள் அவ்விடத்தை விட்டு எவ்வாறு செல்வது? மறுபடியும் அவன் பேசினால் அல்லது காட்டினுள் எங்கேயாவது ஒளித்து கொண்டிருந்தால்?

இன்னும் நம்பிக்கை இழக்காமல், இன்னும் விடாப் பிடியாக அவள் காத்திருந்தாள். இப்பொழுது வேறு ஒருவரும் அங்கு காத்திருக்க வில்லை; அவள் மட்டும் தான். தாக்குதல் தொடங்கும் வரை, அவள் ரேடியோவில் கவனித்துக் கொண்டிருப்பதை யாரும் தடை செய்வதற்குத் துணியவில்லை.

## முடிவுரை

1944ஆம் ஆண்டுக் கோடையில் சோவியத் படைகள் போலந்து பிரதேசங்களைக் கடந்து, பலங்குன்றிய ஜெர்மானியரின் எதிர்ப்பை முறித்துக்கொண்டு, வேகமாய் முன்னேறிச் சென்றன.

மேஜர் ஜெனரல் ஸெர்பிசேன்கோவின் ஜீப் வேவுவீரர்களின் கூட்டம் ஒன்றைத் தாண்டிச் சென்றது. ஒருவர் பின் ஒருவராக சாலையின் பக்கம் தங்களது பசுமை நிற உருமாற்றுடைகளில் சுறுசுறுப்பாகவும் கவனத்தோடும் சென்றார்கள். அமைதி நிலவும் காடுகள், வயல்களுடன் ஒன்றி விடவும், அந்தி வெளிச்சத்தின் மங்கிய நிழல்கள், நிலத்தில் காணும் மேடுபள்ளங்கள் இவைகளுடன் ஒன்றித்து மறைந்து விடவும் அவர்கள் எந்த நிமிடத்திலும் தயாராக இருந்தார்கள்.

அக்கூட்டத்தின் தலைமையில் லெப்டினன்ட் மெஷ்சேர்ஸ்கிய் இருப்பதை ஜெனரல் கண்டு கொண்டார். காரை நிறுத்தி, வேவுகாரர்களைக் கண்டவுடன் ஏற்படும் வழக்கமான முகமலர்ச்சி யுடன் அவர்களிடம் கூறினார்:

''நல்லது, என்ன சேதி, எனது அருமை வீரர் களே? தொடுவானில் தெரிகிறது வார்ஸா. அதிலிருந்து பெர்லின் ஐந்நூறு கிலோமீட்டர் தான். பிரமாதமில்லை; பிள்ளை விளையாட்டு மாதிரி. நாம் விரைவில் அங்கிருப்போம்.''

வேவுவீரர்களை அவர் கூர்ந்து கவனித்தார். பிறகு ஒரு துக்க நினைவு உண்டாகவும் ஏதோ சொல்ல விரும்பினார். ஆனால் அதை அடக்கிக் கொண்டு கையை அசைத்தார்.

''உங்களுக்கு நல்லதிர்ஷ்டம் உண்டாகட்டும், வீரர்களே!''

கார் புறப்பட்டது. ஒரு நிமிடம் வேவுகாரர் கள் நின்றனர். பிறகு மறுபடியும் தங்கள் வழியே நடந்தனர்.

**1946**

...அவர்கள் எண்ணிக்கையில் ஏ[illegible] [illegible]ர

''உடலில் பலம் குறைந்துகொண்டே வந்தது என்றாலும் அவர்கள் மேன்மேலும் நடந்தனர். தாங்கள் தப்பித்துப் போய்விட முடியுமா முடியாதா என்பதை அவ[illegible]களால் [illegible]ச்சயிக்க இயலவில்லை. ஆனால் அது இனிமேல் [illegible]வ்வளவு முக்கியமானதல்ல. வைகிங் என்[illegible] [illegible]பெயரை யுடைய அச்சத்தைத்தரும் மிகச் சிற[illegible] [illegible]டை, அக்காடுகளில் ரகசியமாய்த் திரண்[illegible], [illegible]வியத் படைகளைத் திடீரென்று தாக்கு[illegible] [illegible] போட்டிருந்த திட்டம் மண்ணைக் [illegible]விட்டது.'' மிக ஆபத்தான அந்தப் ப[illegible]ச் செய்தும் முடித்தன[illegible] தங்கள் தோழ[illegible] நோக்கி வந்து கொ[illegible]ருந்த அந்த கொரில் லாக்கள் எதிரிகளால் [illegible]றி வளைக்கப்பட்டனர்...

விடி வெள்ளி சோகமயமான ஒன்று. ஏனெனில் போரே ஒரு துயரமிக்கது தானே. ஆனால் நூலில் ஒவ்வொரு பக்கத்திலும், மக்களிடம் அவர்கள் காட்டிய பரிவும் அன்பும், தோளோடு தோள் நின்று போரிட்ட போராளி களின் உயர் பெருமையும் சிறப்பாகச் சித்தரிக் கப்பட்டிருக்கிறது. உணர்ச்சிப் போக்கும், அழுத் தமும் கொண்ட குறுநாவல் என்று இந்நூல் அங்கீகரிக்கப்பட்டிருப்பதில் வியப்பில்லை.



**விடி வெள்ளி** — ஜெர்மானிய பாசிஸ்டுகளை எதிர்த்து சோவியத் மக்கள் நடத்திய வீரஞ் செறிந்த வரலாற்றைப் பற்றிய நூல்களின் இதுவும் ஒன்று. இந்நூலின் ஆசிரியர் எம்மனுயீல் கஸகேவிச் *(1913 — 1962)*, புகழ் பெற்ற சோவியத் கதாசிரியர். இவரது எழுத்துகள் சோவியத் யூனியனில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் அறிமுகமானவை. அவரது படைப்பிலக்கியங்களிலே இக்குறுநாவல் **விடி வெள்ளி** ஓர் உயர்ந்த இடத்தினைப்பெற்றுள்ளது.

சோவியத் மண்ணில் பாசிசக் கும்பல் விரைந்து நுழைந்த போது கஸகேவிச் இராணுவப் பணியில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. ஏனெனில் அவரது உடல்நிலை அதற்கு உகந்ததாக இல்லை. மருத்துவர்களும் இப்பணிக்கு அவரை அநுமதிக்கவில்லை. ஆனால் அவற்றைப் பொருட்படுத்தாமல் முன்னணிக்குச் சென்று தன்னை இராணுவத்தில் சேர்த்துக் கொள்ளுமாறு கோரினார். பின்னர் இராணுவப் புலனாய்வுப் பிரிவில் சேர்த்துக் கொள்ளவும் பட்டார். சாதாரணப் போர் வீரனாகச் சேர்ந்த அவர், போர் முடிந்த போது இராணுவப் புலனாய்வுப் பிரிவின் தலைமை நிலைய உயர் அதிகாரியாகப் பொறுப்பு வகித்தார். அவரது நெஞ்சங்கவர்ந்த இராணுவக் கொரில்லா வீரர்களுக்காக இந்நூலை **அர்ப்பணம்** செய்தார்.